உ

சிவமயம்.



ஸ்ரீ. தாண்டவராய சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# கைவல்ய நவநீதம்

## மூலமும்,

ஸ்ரீ கோவிலூர்

பொன்னம்பலசுவாமிகள்

இயற்றிய

தத்துவார்த்த தீபமென்னும்

உரையும்

இவை

திருப்பாதிரிப்புலியூர்

ஞா. சிவசிதம்பர முதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

ஷை-சுவாமிகளின் மாணாக்கர்களாகிய

சிதம்பரம் செல்லப்பசுவாமி, சி-இராமாநுஜமுதலியார்

இவர்களால்

கி. துரைசாமிபிள்ளை யவர்களது

தஞ்சை "நாஷனல் அச்சுக்கூடத்தில்"

பதிப்பிக்கப்பட்டன.

சருவஜித்து வருடம் கார்த்திகை மீ

இதன் விலை ரூ. உ

# தத்துவவிளக்கப்படலத்தின்
## அநுக்கிரமணிகை.

# அநுக்கிரமணிகை.

சந்தேகந்தெளிதற்படலத்தின்
அநுக்கிரமணிகை முற்றும்.

சிவமயம்.

# கைவல்லியநவநீத

## உரைச்சிறப்புப்பாயிரம்.

---

நேரிசையாசிரியப்பா.

திருவளர் தெய்வச் செழுமறை முடியின்
பொருளனைத்தச சூத்திரம புகன்றனன் மேனாட்
டயாவுடை வல்லபத தனிமுனி வரனும
வியாதனுங் கதற்கு விரித்தனர் பாடியம
பற்பல ரவையெலாம் பக்க பாதச்
சொற்பயில் வனவே தூயவவ் வியாதன்
பொங்கர வணிந்த புராந்தகன் கலையே
சங்கர நாமந் தயங்கவோர் பாறகர
னெனவத் தோன்றி யெனதுருக திரந்தக
குன்னத மெய்ப்பொரு ளுரைத்துமற் றுமபல
அற்புத நடத்தி யவிர்தரு மெனவே
பொற்புறு மற்புத புராண மதனில்
மூநதுரைத் திமெருண் மொழிப்படி கவியுள
வந்தவ தரித்து வதரிநன் ளுக
மூர்த்தியைத் தேவ முழங்குரோ கதிபினின்
ரூர்தெடுத் தத்தலத் தமாதரத் தாபனஞ்
செயதுபுன் சமண்முதற் செறிபல மதத்தையு
மைதுவென் றேங்கு மரியசீர்ச் சங்கர
பகவற் பாதர்செய் பாடிய மதுவே
தகவிற் பொதுமையாத் தழைத்துமன் னியதால்
அன்னபா டியவழி யறிஞர்பற் பலரும்
சொன்னநூல் தமக்கோ தொகையிலை யவையெலாம

தென்னிதி ருய்க்குணா ஸிக்னைநயன் றெய்வதக்
கன்னிவர் தருமதுக் காடௌப் பெயரிய
திருநல் ஸிலதநெரானி திகழ்தரு மரபில்
வருமொரு தாண்ட வராயநா மத்தோன்
நாரா யணப்பெயர் நயந்தகன் ஞசான்
சாராத் தவநுயர் சமாதியோ கதிலை
அனபரீ பொருவே தாந்தநூ லறைகுதி
யெனபதா வருளிய வின்னுரை கடைப்பிடித்
தாயநதபன ஞூற்பொரு ளனைத்தையுக திரட்டிநீ
வாயந்தகை வலவிய மாநவ நீதமாம்
பெயரிற் புகனறனன் பேசுமக நூற்கோ
அயர்வுறு முரைபல ரறைநதுள நூலைவிற்க
இநதநா ளினிலோ ரினியநற் பேருரை
முந்துநூற் பொருளெலா முழுங்மென் விளங்கச்
சொன்னயம பொருணயந தொடைநய மாதி
யெநநயங் களுஞ்சிறந தெழுநதுமே லோங்கத்
தத்து வாநததி பம்மெனத் தகுபெயா
வைததினி தியற்றி மகிக்கு வழங்கினன்
அங்கவ ஞரெனி லறைகுவன் முன்புகல்
சஙகர பகவற் பாதாதம் மரபிற்
போந்தொரு சமிவனப் புண்ணிய கேத்திரம
ஆநதகு மான வணிவணி காகளவாழ
தருதிருக் கோயிலூர்த் தண்ணறும் பதிக்கட்
டிருநெல்லை காயகித் தேவியோ டமர்நத
கொற்ற வாளீசாபொற் கோயில்வா ளளாவி
யுற்றகோ புரங்களு மொளிர்விமா னங்களும
வளமலி விடைமதிள மண்டபங் களுக்திருக்
குளமுநீ ராழிக் கோதில்மண் டபமும்
மற்றைய பிறவும வயங்கிமன் பொலிவு
பெற்றிட வியற்றிப் பெரியோர் வகித்திடத
தகுமடா லயமதுஞ் சால்புறச் சமைத்துத்
தொகுமடி யார்கடெலாந தாசன முதவிச்

## உரைச்சிறப்புப்பாயிரம்.

சாற்றுமத் தருமேவி தாக்கநன் குணர்த்தி
வீற்றினி திருக்க விழுத்தவ சீல
முத்துரா மலிங்க முதல்வனுண் மலரடி
சித்தத் திருத்தித் திகழ்தே சிகனும்
சிதம்பர முனிபத சேகர னெவர்க்கும்
இதம்பகர் வாய்மை யின்சொன் மாட்சியன்
கற்றவர்க் கினியன் கவின்றமை யுருவன்
உற்றவர் குறைதப வுதவுசீ ருதாரன்
தென்கலை வடகலை திகழ்தருத் தானி
மன்கலை யாதியும் வாயமுத் துயர்த்தோன்
சிவகா ருணியத் தெள்ளமு தக்கடல்
பாவக விசுர பத்தியா ரணியம
வரமுறு பாச வயிராக் கியமலை
பிரம ஞானப் பெருந்தனிப் பாற்கரன்
விரும்புற் றெத்தவ மேலவ ருஞ்சார்
பெரும்பற் றப்புலி யூரமா பெரியோன்
தன்னம் பினர்க்கொரு தருவெனும
பொன்னம் பலப்பெயர்ப் புனிதமா தவனே.



இஃது

திருப்பாதிரிப்புலியூர்

க. ரா. சிவசிதம்பரமுதலியார்

இயற்றியது.

---

உ

கணபதிதுணை.

சிவமயம்.

# கைவல்லிய நவநீதம்.

## உரைப்பாயிரம்.

### குருவணக்கம்.

வேக நான்மறைப் பொருளினை மறைத்தவெற் *றமக்குப்
போத மாதுவாய்ப் புனிதநல் லருளுருப் புனைந்து
சேது வாய்ப்பரத் தத்தினைத் திகழ்தர விளக்கும்
நாத நாயனை மலரடி முடிமிசை வைப்பாம். (க)

### இதுவுமது.

பொங்கருணைப் ப்ரவாக கங்கையா புண்ணிய மனைத்து மொன்றாய்
அங்குபுல லெல்லா வகத்தாண் டருமறைப் பொருளை யாக்கும்
அங்கையி னெல்லி போல வளித்தரு ளமலா னந்த
சங்கர பகவற் பாதன் றாண்மல ரகத்த வைக்கே. (உ)

* தமத்துக்கு என்றபாலது அத்துச்சாரியை குறைந்து தமக்கென நின்றது.

## இதுவு மது.

உகந்த தேசிக ஞெண்டனிப் பதத்தையிவ் வுலகை
இகந்த முதநூா மபபெய ரிறைமல ரடியைச
செகநத ஞெதனுஞ சிதமபர தேவனற் றூனை
அகநதை தீரவெம மகத்திலுஞ சிரத்திலு மணிவாம. (௧)

## நூலாசிரியா வணக்கம.

மாணட மெயப்பொருள் கையிலா மலகமே யென்ன
ஈண்டி யாவரு மெளிதினி லுணாதர வெவையும
தூண்டு சோதியே வந்ததென் றியாவருந துதிக்கும
தாணட வப்பெருந் தண்ணருண் மூாத்திதாள சாாவாம (௨)

## தற்சிறபபுப பாயிரம்.

அன்ப ராயத்தனை நினைபவ ரகத்திருந தருளும
இன்ப நாடகத திறைமல ரடியுளத் திருததி
முன்பு கன்றமூ தறிஞா நூன் முறைபிற ழாமே
எனபு லததள விதறகுணா யியமபுவ னெடுததே. (௩)

உ

கணபதிதுணை.

சிவமயம்.

# கைவல்லிய நவநீதம.

## மூலமும்,

## தத்துவார்த்ததீபமென்னும்

## உரையும்.

### நூன்முகம்.

முதனூலிருக்கவும் வழிநூல் சார்புநூல் செய்யப்புகுவோர் ஆதிக்கணே மங்கலஞ் செயற்பாலது அவசியமே; என்னை? கிரந்தசமாப்திக்குப் பிரதிபந்தகங்களாகவுள்ள எவ்வித விக்கினங்களும் அம்மங்கலத்தால் நாசமுறுதலின் விக்கினமென்பது பாவம். பாவத்தினால் சுபகாரியங்கள் சமாப்தியாகா; ஆதலின் அப்பாவங்களைப் போக்க மங்கலம் வேண்டும். பாவமில்லையாயிருந்தோரெனின்? அவர்களும் மங்கலஞ்செய்யத் தக்கதேயாம், இன்றேல் அந்நூலை கேட்குவோர்க்கெல்லாம் நூலாசிரியரிட்டத்து நாஸ்திகப் பிராந்தியுண்டாம் அந்நூற்கண் இலக்கணஞ்செல்லாதெனக.

(க) அப்படிச் செய்யும் மங்கலம் வஸ்துநிர்த்தேசரூபமங்கலமென்றும், நமஸ்காரரூபமங்கலமென்றும், ஆசீர்வாதரூபமங்கலமென்றும் மூவகைத்தாம். சகுணம், அல்லது நிர்க்குணமாகவுள்ள பரமாத்மாவே வஸ்துவாம். அவ்வஸ்துவின் கீர்த்தனமே வஸ்துநிர்த்தேச மங்கலமென்பதே. அப்படிக்கன்றி அவ்வஸ்துவுக்கு வணக்கங்கூறுவது நமஸ்காரரூபமங்கலமாம். தனது அல்லது மாணாக்கரது வாஞ்சிதவஸ்துவைப் பிரார்த்திப்பது ஆசீர்வாதமங்கலம்.

இந்நூலாசிரியர் இங்கே சிஷ்டாசாரந்தாழ்பெற இஷ்டதெய்வ
நமஸ்கார ரூபமங்கலத்தை அங்கீகரிக்கின்றார்.

பொன்னில மாத ராசை பொருந்தினர் பொருந்தா ருள்ளந்
தன்னிலந் தரத்திற் சிவ சாட்சிமாத் திரமாய் நிற்கும்
எந்நிலங் களினு மிக்க வெழுநில மவற்றின் மேலா
நன்னில மருவு மேக நாயகன் பதங்கள் போற்றி. (௧)

(இதன்பொருள்) பொன் நிலம் மாதர் ஆசை பொருந்தினர் பொருந்தார்-பொன்னாசை மண்ணாசை பெண்ணாசை இயைந்த அஞ்ஞானிகளும் இயையாத ஞானிகளுமாகிய இவர்களது—உள்ளந்தன்னில-அந்தக்கரணங்களில—அந்தரத்தில-(தாரதம்மியமான பல்குடம் பொற்குடங்களிற்பெய்யும் பண்டங்கட்குத் தாரதம்மியமற அவகாசங்கொடுப்பதுமாத்திரமாய் நிற்கும்) ஆகாயத்தைப்போல—சிவ சாட்சிமாத்திரமாய் நிற்கும்-சிவ சாட்சிமாத்திரமாக நிற்கின்ற—ஏகநாயகன் அகண்டைகரசனான சிவபெருமானுடைய—பதங்கள் போற்றி-பாதங்கட்கு நமஸ்காரம்—என்றவாறு.

நிலத்திற் குரிமையுடைய மைந்தரை ஆகுபெயரால் "நிலம்" என்றார்.

(௨) அங்ஙனமாயினும் விடயபேதத்தால் மனோரதங்கள் அநேகமாயிருக்கவும் இவர் மூவகையாகத்தொகுத்தது யாதுகருதியோ வெனின்? எல்லா ஆசையும் அம்மூவகையுள் அடங்கியிருத்தல் பற்றி என்க.

இவ்வாறே. "மனைவியு மக்க [illegible] நினைவின் மேனயந் செய்து ... ... செய்வர்" என வாசிட்டத்தும், "விறைவெனப் ... பெனமெல, வழலவி ... கனக ... தருபிபென, ... இற படாநதுலைபங, குழவி ... பூந்துவிட டோங்கு ..." என பாகவதத்தும், மனோரதங்களனைத்தையும் அம்மூவகையுளடக்கக்கூறியிருக்கின்றமை காண்க. அருணகிரிநாதரும் இக்கருத்தே பற்றியன்றே "மூவேடணையென் றுமுடிந்திடுமோ" என்றார்.

(௪) பொன்னில் மாதர் என்பதைப்-பொன்னில் அம்மாதர் எனப்பிரித்துத், திருமகள்போலும் அழகினையுடைய பஞ்சவிடய சமஷ்டிரூபமான பெண்களிடத்து என்பொருளுரைப்பினும் அமையும்.

இஃதமையுமாறு, "பாரியை யுடையோன் யாவ னவனுக்கே யுறும் போகம், நாரியை யில்லா தார்க்குப் போகத்தி னலமொன் றுண்டாங், காரிகை தன்னை நீங்கற் கருத்துறு சகத்து நீங்கும், பேரிய றசகத்து நீங்கிற பிரிவில்பே ரின்ப முண்டாம்" என வசிட்டத் திறகூறியுள்ள இரகுநாதனார் திருவாக்கானும், "நெய்விட்ட கருங் குழலார் தம்பால் வைத்த நெஞ்சொழிந்தா ரைம்புலன்சே ரன்ப ரோராக, கைவிட்டா ரொழியாவா னந்த போகக் காமுகராய் முடிந்த படி காண்மின் காண்மின்" என்னும் அஞ்ஞவதைப்பரணியின் செய்யுளானும் அறிக.

(௫) "ஆசைபொருந்தினார் பொருந்தா" ரெனச்சிறப்புப்பற்றி உயர்திணைமேல் வைத்துச் சொன்னாரேனும், "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனால் பிரமாமுதற் றம்பபரியந்தமான சேதனப் பிரபஞ்ச முழுவதுங் கொள்ளற்பா லனவாம். "உள்ளம்" என்றது அந்தக்கரணம். "உள்ளந்தன்னில்" என்றது சாக்ஷி பொருமை.

கிரகதியாதிய வசேதனப்பிரபஞ்சத்தினுக்கு அந்தக்கரண மின்மையின், அவைகளில் அவச்சின்னசேதனம் ஞானமென்றும், சாக்ஷியென்றுஞ் சொல்லப்படவில்லை.

"ஆசை பொருந்தினார் பொருந்தா ருள்ளந் தன்னிலச் சத்தியச் சிவ சாக்ஷிமாத் திரமாய் நிற்கும்" என்றதால் அந்தக்கரணமொன்றே பிரமாதாவுக்கு விசேடணமும், சாக்ஷிக்கு உபாதியுமாம் என்பது பெறும்.

(௬) அங்ஙனமாயின், அவ்விரண்டின் றன்மையும் யாவையோ வெனின்? ஒன்றன் சொரூபத்திற் பிரவேசித்து வியாவர்த்தகமாகின்றது விசேடணம். அந்நியத்தினின்றும் ஒன்

றை வேறுபடுத்துவது வியாவர்த்தகமாம். எது வேறுபடுத்துக்காட்டப்படுமோ அது வியாவர்த்தியமாம். நீலக்குடமென்புழி நீலத்தன்மை குடத்தின் விசேடணம். என்னை? நீலக்குடத்தில் நீலத்தன்மை பிரவேசித்து அதனைப் பொன்மைக்குட முதலியவற்றினும் வேறுபடுத்துக் காண்பித்தலான், அந்நீலத்தன்மை விசேடணமாம். அவ்வாறு பிரமாதாவுக்கு அந்தக்கரணம் விசேடணமாம். என்னை? பிரமாதாவின் சொரூபத்தி லந்தக்கரணம் பிரவேசித்து அதனைப் பிரமேய சேதனத்தினின்றும் வேறுபடுத்துக் காண்பித்தலால் எனக.

ஒன்றனை சொரூபத்திற் பிரவேசியாமல் வியாவர்த்தகமாய் நிற்பது யாது அது உபாதியெனப்படும். நியாயத்தில் காணசட்குலியின் அவச்சின்னாகாயஞ் சுரோத்திரேந்திரியமெனப்படும்; அங்கே காணசட்குலி சுரோத்திரேந்திரியத்திற்கு உபாதியாம். என்னை? சுரோத்திரேந்திரியத்தின் சொரூபத்திற் காணசட்குலி பிரவேசியாமல் வாஹ்ய வாகாயத்தினின்றும் சுரோத்திரேந்திரியத்தை வேறுபடுத்துக் காண்பித்தலால் உபாதியாம். [காணசட்குலியென்பது செவித்துளை]

வேறுமொரு திருஷ்டாந்தம்.

கடாகாயமானது மணு* பரிமாண அந்நத்திற்கு அவகாசங்கொடுத்தலால் ஆகாயத்திற்குக் குடம் உபாதியாம். என்னை? மணு அந்நத்திற்கு இடங்கொடுக்குமாகாயத்தின் சொரூபத்திற் குடம் பிரவேசியாமல், வியாபக வாகாயத்தினும் வேறுபடுத்துக் காண்பித்தலால் மணு அந்நத்திற்கு அவகாசங்கொடுக்கு மாகாயத்திற்குக் குடம் உபாதியாம்.

அதுபோல அந்தக்கரணவுபகித சேதனம் சாட்சியாமென்புழி, அந்தக்கரணம் சாட்சிக்கு உபாதியாம். என்னை? அந்தக்கரணம் சாட்சியின் சொரூபத்திற் பிரவேசியாமல், பிரமேய சேதனத்தினும் சாட்சியை வேறுபடுத்துக் காட்டுவதால் எனக. அந்தக்கரணமொன்றே சாட்சிக்கு உபாதியாகவும், பிரமாதாவுக்கு விசேடணமாகவும் நின்றமை காண்க. இவ்வாற்றால் அந்தக்கரணவுபகிதசேதனமே சாட்சியாம். அந்தக்கரண விசிட்ட சேதனம் பிரமாதாவாம்.

---

* மணு — மணங்கென்னும் ஓரெடுத்தலளவை.

க்கண்ணும உளது; ஆதலால் அந்தக்கரண விசிட்டம போலக் கடவிசிட்ட சேதனமும், சரீரவிசிட்டசேதன மும, குடடியவிசிட்ட சேதனமும பிரமாதாவாதல் வே ணடும. அஙஙன மாகாமையின, ஆபாசவாதமே உத தமம. அவசசேதவாதம் அனறு. இவவாறுணதோட ங கூறியிருததலின அவசசேதவாதம இவாக்குஉடனபா டனறெனக

(௯) எப்படி அநதககரணம் ஆபாசசகிதமாகவுளதோ, அபபடி யே அநதக்கரணததின் விருததியும ஆபாசசகிதமாகவேயு ளது. அநதககரண விருததி நேததிரேந்திரியவாயிலாகப் புறமபோந்து விடயசமானுகார மடையும; அப்போதுஅவ விருததிபாகத்தால விடயததின்கண் ஆவரணம்பங்கமாம; ஆகவேஆபாசனால இதுகடம, இதுபடம என இவவாறுவி டயம பிரகாசியா நிறகும. இவவாறே ஏனையவிந்திரிய வாயிலாகப்புறமபோந்தறும் விருத்திகளினும் ஊகிக்க.

புறமபே சாட்சிப்பிரகாசம எவவா றுள்ளதோவெனின? கடத தை நான கணடேனெனறு கடஞானததின பினனிகழாநிறகும பிர காசமே சாட்சியாமெனக. [பிரகாசமெனினும, ஞானமெனினுமதொ கரும ]

(௧0) இனி உளளே இருவிதப்பிரகாசஙகளைக் கூறுதும இச் சை, ஞானம, கிரியை, சுகம, துக்கம, துவேடம இவை ஆறும பிரதானகுணஙகள. நியாயமதததில இவைகளை ஆனமாவின குணமெனபா வேதாநததில அநதகக ரணததின பரிணமமெனப. இவைகளில ஒனறு பிரகாச மாகும்போது சிதாபாசனைககாணலாம. அலலாதபோது அவனைககாணக்கூடாது. ஆகலின தபதாயபிணடததக்கி னி போனறு அவைகளே தானுகபிரகாசிபபவன ஆபா சன.

சாககிரசொப்பனஙகளிலவிருததிகள், விருததிகளின அந்தரான ம, சுழுததிமுதலியவறறில விருததிகளின அபாவம ஆகிய இவைகளை

ப்பிரகாசிப்பிப்பது சாட்சியாமென்க. சாட்சிப்பிரகாசத்தில் விருத்தியங்கீகார பட்சம் உரைக்கப்பட்டது.

### இனி விருத்தியங்கீகாரபட்சம்.

(கக) அவித்தை, அந்தக்கரணங்களின்பரிணாமம்விருத்தியெனப்படும். ஸ்ரோத்ராதிகளும், ஆகாசாதிகளும்முறையே அந்தக்கரணம், அவித்தை இவைகளின் பரிணாமமாயினும் அவைகளால் யாதொருவிஷயமும்பிரகாசியாமையின், அவை விருத்தியென்றுசொல்லப்படவில்லை. மற்றெதை விருத்தியென்பரோவெனின்? அவித்தை, அந்தக்கரணங்களின்ஞான ரூபபரிணாமத்தால் விடயங்கள் பிரகாசமாகலின், அதனையேவிருத்தியென்பர்.

சுகதுக்கம், காமக்குரோத முதலிய எவ்வளவு அந்தக்கரணத்தின்பரிணாம முண்டோ அவைகளனைத்தையும், விருத்தியென்றுசாஸ்திரங்களில்வியவகரித்திருக்கினும் தத்வாநுசந்தான அத்வைதகௌஸ்துப முதலியகிரந்தங்களில் பிரகாசகபரிணாமமேவிருத்தி யென்றனர். ஆதலான், மாயை, அந்தக்கரணங்களின் ஞானரூபபரிணாமமேவிருத்தி சத்தத்திற்கு அத்வைத மதத்தில பாரிபாஷிக* ப்பொருளாம். அவ்விருத்தி ஞானம் இருவகைத்தாம். ஒன்று பிரமாரூபம் மற்றொன்று அப்பிரமாரூபம். பிரமாணஜந்ய ஞானத்தைப் பிரமையென்பர். அதனின் வேறான ஸம்ஸ்காரஞானம், சந்தேகஞானம், ஸ்மிருதிஞானம், பிரம(ஞு8) ஞானம், ஆகிய இவை அப்பிரமாரூபமாம். அவற்றுள், ஸம்ஸ்காரஞான முதலியவை யதார்த்த அப்பிரமா. பிரம(ஞு8) ஞானம், அயதார்த்த அப்பிரமா. இவைகளின் விரிவை யறியவேண்டின் விருத்திப்பிரபாகர கிரந்தத்திற்காண்க. இது நிற்க.

எப்போது அந்தக்கரணத்தின் பரிணாமம் சுகரூபமாக, அல்லது துக்கரூபமாகவுளதாமோ, அப்போது அந்தக்கரணத்தின் ஞானரூப விருத்திக்கதுக்க கோசரமாகவுளதாகும்; அவ்விருத்தியினக்கண் ஞரு

* சாஸ்திரத்தின் அசாதாரணசங்கேதம் பரிபாஷை; பரிபாஷையிற் சொல்லும்பொருள் பாரிபாஷிகப்பொருளாம்.

னினு மிக்க வெழுநில மவற்றின் மேலாம், நன்னில மரு
வும்" என்பதற்கு, எல்லாப்பதிகளினுஞ் சிறந்தோளிரா
நிற்கும் சத்தபுரியினுஞ்சிறந்த நன்னிலமென்னுந்தலத்தி
னகண்ணே யெழுந்தருளாநிற்குமென்று வேறுமொருபொ
ருள் கூறினு மமையும், இஃதமையுமாறு, "நன்னிலத்த
னி லெழுந்த நாரணன் கிருபையாலே, தன்னிய ஞானி
னானேன்," என்று இந்நூலினந்தத்தில் விதியாநந்தங் கூ
றுங்காலையிற் கூறியிருக்குங்காரணத்தினாலறிக

"நன்னிலம்" என்பது மேலுடையாயத்தாயபூமியையும், மரு
வனமென்னும் ஸ்தலத்தையும் உணர்த்தாநின்றது

(க௫) அயனரியுருத்திரராதியாபோற்றோற்ற மொடுக்கமுமையு
யின், "ஏகம்" என்றும், அனேகருந் தான இறையா
கலின், "நாயகன்" என்றுங்கூறினார். இவ்வாற்றால், இத்
காரணப்பிரமமென்பது பெற்றாம்.

(க௬) மாயாவிசிட்டசைதந்நியத்தைக் காரணப் பிரமமென்று
கூறியிருக்கின்றனராகலின், அதற்கு உள்ளாந்தன்னிற
சாட்சிமாத்திரமாயநிற்கை அசம்பவமாமேயெனின்? அ
து பரமார்த்தமாகச் சுத்தப்பிரமமேயாகலான், சாட்சித்
வமை அதற்கு அசம்பவமாகாதெனக

(க௭) இவ்வாற்றால், இஃது தோடமின்றாயினுக. "பதங்கள்"
என்னுஞ்சத்தம் உபலட்சணமாய் ஆபாதமஸ்தக பர்யந்த
மான மூர்த்திபோதகமாயிருத்தலின், இது சுத்தப்பிரமத்தி
ற்கும், அப்படியே காரணப்பிரமத்திற்கும் பொருந்தாத
கலின், சரீரவிசிட்ட சைதந்நியங்களான காரியப்பிரமங்
களுள்ளே யாதானுமொன்றைக் கூறலாமேயெனின்?
அங்ஙனங் கூறுதற்குச் சதுர்ப்புஜ, திரிநேத்திர, சதுர்முக,
அஷ்டபுஜாதிகளான காரியப்பிரமங்களின் சின்னங்களு
ளளே யாதானுமொரு சின்னங்களையெடுத்து விசேடித்
திருத்தல்வேண்டும். அங்ஙனம் விசேடியாமல், "ஏக
நாயகன் பதங்கள் போற்றி" என்றதால் காரியப்பிர..

சிவன் இவரின் வேறானதனேசாதிகட்கும், ஈசுரத்தன்மை கூறினர்; இவ்வாறானால், வியாசருடைய வாக்கியங்களில் விரோதந் தோன்றுகின்றதே யெனின்?

### அதற்குச் சமாதானம்.

சர்வஞ்ஞசுரனே. எந்தப்பிரகரணத்தில் அந்நியதெய்வத்தின் நிந்தைகூறியிருக்கிறதோ, அந்நிந்தை அதனுபாசனைத்தியாகத்தின்பொருட்டன்று. அப்படிவியாசர்க்கு அபிப்பிராயமில்லை மற்றென்னையோவெனின்? வைஷ்ணவ புராணங்களில் சிவன் முதலியோர் நிந்தையும், விஷ்ணுவின் துதியும் விஷ்ணுவின் உபாசனையில் பிரவிர்த்தித்தற்கேதுவாயிருக்கிறது. அப்படியே சிவபுராணங்களில் விஷ்ணுவாதிகளின் நிந்தையும், அவர்களினுபாசனைத்தியாகத்தின் பொருட்டாகாமல் சிவனுடைய உபாசனையில் பிரவிர்த்தித்தற்கே ஏதுவாம். ஓர் பிரகரணத்தில் அந்நியத்தினுடைய நிந்தைதியாகத்தின் பொருட்டேயாமாயின், சர்வ தெய்வங்களினுடைய உபாசனைகளுமன்றோ தியாகமாகும், அதனால் அந்நியத்தின் நிந்தை ஒன்றன் ஸ்துதியின் பொருட்டாகவே உளது. தியாகத்தின் பொருட்டன்று.

### இதற்குத் திருஷ்டாந்தம்.

(கசு) வேதத்தில் அக்கினிஹோத்திரத்திற்கு இரண்டுகாலங்கூறியிருக்கின்றது ஒன்று சூரியோதயத்திற்குப்பிரதமம், மற்றொன்று சூரியோதயத்திற்கநந்தரகாலம். அங்கே உதயகாலத்தின்பிரசங்கத்தில் அநுதயகாலத்தைநிந்தித்திருக்கிறது. அநுதயகாலத்தின்பிரசங்கத்தில் உதயகாலத்தை நிந்தித்திருக்கிறது; அந்நிந்தையின்றாற்பரியம் தியாகத்திலாமாயின், இரண்டு காலத்திலும் ஓமத்தின்றியாகமாம் நித்தியகர்மத்தின்தியாகங்கூடுமோ? ஆகலின், உதயகாலத்தைத்துதித்தற்பொருட்டு அநுதயகாலத்தையும், அநுதயகாலத்தைத்துதித்தற்பொருட்டு உதயகாலத்தையும் நிந்தித்திருக்கிறது; அப்படி ஓர்தேவதையின் உபாசனையின் பிரசங்கத்தில் அந்நியத்தின் நிந்தை ஒன்றன் ஸ்துதியில் தாற்பரியமாம். அந்நியத்தின் நிந்தையில் அன்று.

(உக) அங்ஙனமாயின், ஐந்து தேவதைகளுக்கும் நாமரூபங்கள் வெவ்வேறாகக் கூறியிருக்கின்றன. ஈசரனே ஒருவன்; ஒரு ஈசுரனுக்கு நானா நாமரூபம் எங்ஙனங் கூடுமெனின்?

அதற்குச்சமாதானம்.

பரமார்த்தமாக நாமரூபங்களொன்றும் பரமான்மாவினகண்ணே உள்ளதாக இல்லை. மந்தபுத்தியுடையோர்க்கு உபாசனையின்பொருட்டு நாமரூபரகிதமான பரமான்மாவுக்கு, மாயையினாற்பண்ணப்பட்ட கற்பிதநாமரூபங்களை கூறினார். ஆதலால், ஓர் பரமான்மாவின்கண்ணே மாயையினாற்பண்ணப்பட்ட நானா கற்பிதநாமரூபங்கள் கூடும், இவ்வாற்றால், சர்வபுராணவாக்கியங்களின் விரோதமும் நிவிர்த்தியாயவிடும்

(உ) புராணவாக்கியங்களில் விரோதசங்கைக்கு, முக்கியசமாதானம் யாதெனில்? விஷ்ணு, சிவன், கணேசன், தேவி, சூரியன் என்பன முதலாக எவ்வளவுநாமங்கள் ஒவ்வொன்றற்குண்டோ! அவைமுழுவதும் காரணப்பிரமத்தினுடைய நாமங்களேயாம் காரியப்பிரமங்கட்கும், அவைமுழுவதும் நாமங்களாகப்பொருந்தும்; அது எங்ஙனம்? மாயாவிசிட்டமானகாரணத்தைப் பிரமமென்றவர், இரணியகர்ப்பரான காரியத்தையும் பிரமமென்றனர்,ஆகவின், விஷ்ணு, சிவன், கணேசன், தேவி, சூரியன் என்னும்பதங்கள் காரணப்பிரமத்தையும்,காரியப்பிரமங்களையும் உணர்த்துகின்றன, அப்படியே அப்பதங்களின் பரியாயநாமங்களாயுள்ள நாராயணன், நீலகண்டன், விக்கினேசன், சத்தி, பாநு இவைமுதலிய அநந்தபதங்களும் அவ்விருவகைப்பிரமங்களையும் உணர்த்துகின்றன. பிரசங்கத்திற்கேற்க ஓரிடத்தில் காரணப்பிரமத்தையும், ஓரிடத்தில் காரியப்பிரமங்களையும் உணர்த்தும்.

அஃதெப்படியெனின்? சைந்தவபதம் அசுவம், லவணம் இரண்டையும் உணர்த்துமேனும், போஜனப்பிரசங்கத்தில் லவணத்தையும், கமனப்பிரசங்கத்தில் அசுவத்தையும் உணர்த்துவதுபோலெனக. வைஷ்ணவபுராணத்தில் விஷ்ணு, நாராயணாதிபதங்கள் காரணப்பிர

மத்தையும், சிவன், கணேசன், சூரியாதிபதங்கள் காரியப்பிரமங்களையும் உணர்த்தாநிற்பனவாம். ஆதலால் வைஷ்ணவ கிரந்தத்திலுள்ள விஷ்ணுவின் துதிக்கும், சிவன்முதலியோர் நிந்தைக்கும் வியாசரது அபிப்பிராயம் காரணப்பிரமம் உபாசிக்கத்தக்கது காரியப்பிரமங்கள் உபாசிக்கத்தக்கனவல்லவென்பதாம்; அப்படியே ஸ்காந்தபுராணமுதலிய சைவகிரந்தங்களில் சிவன், மகேசன் முதலியபதங்கள் காரணப்பிரமத்தையும், விஷ்ணு, கணேசன், தேவி, சூரியாதிபதங்கள் காரியப்பிரமங்களையும் உணர்த்துவனவாம் ஆதலால், அவைகளிலும் காரணப்பிரமத்தின் ஸ்துதியும், காரியப்பிரமங்களின் நிந்தையும் உள கணேசபுராணத்தில் கணேசபதம் காரணப்பிரமத்தின் வாசகம் விஷ்ணு, சிவன்முதலியபதங்கள் காரியப்பிரமங்களின் வாசகங்களாம், அதிலும் காரணத்தின் ஸ்துதியும், காரியங்களின் நிந்தையும் உள காளிபுராணம், சூரியபுராணங்களிலும் அப்படியேயுண்டு; இவ்வாறு, சகலபுராணங்களிலும், காரியகாரணங்களின் நாமசங்கேதங்கட்குபேதமுள, கொள்ளற்பாலதும், தள்ளற்பாலதும் ஆகிய பொருள்கட்குப்பேதமில்லை. சகலபுராணங்களிலும் காரணப்பிரமத்தின் உபாசனை கொள்ளற்பாலதும், காரியங்களின் உபாசனை தள்ளற்பாலதுமாம், அதனால் சகலபுராணங்களும் ஓர் காரணப்பிரமத்தை உபாசிக்கத்தக்கதாகவே உணர்த்துகின்றன, அவைகளுக்குத் தம்மில் விரோதமில்லை.

(உ௩) எப்படியும் சதுர்ப்புஜ, திரிநேத்திர, சதுர்முக, அஷ்டபுஜாதி மூர்த்திகள் மாயையின் பரிணாமமும், சேதனத்தின் விவர்த்தமுமாம்; ஆகலின், காரியம் அவைகளின் உபாசனையுங்கூறப்பட்டிருக்கின்றது, அங்ஙனங்கூறப்பட்டிருப்பினும், அச்சதுர்ப்புஜாதி மூர்த்திகளுக்கும், மாயா விசிட்ட காரணப்பிரமத்திற்கும் விசாரிக்குமிடத்துப்பேதமில்லை. ஆதலால், காரியப்பிரமங்களின் ஆகாரங்களை வாதித்து* அவர்களைக் காரணரூபமாக உபாசிக்க வேண்டுமென்பது தாற்பரியம். என்னை? ஆகாரம் காரியமாதலின், துச்சம் காரணம் சத்தியம். யாவரது மந்தப்பிரஞ்ஞை ஆகாரத்திலேயே ஸ்திதமாமோ! அவர் சாஸ்திரத்திற்சொன்ன ஆ

* வாதித்தல் = காரியம், காரணப்பிரமமே அன்றியமன்று என்பதாம்.

காரத்தைதயே உபாசனைசெய்க ; அதனாலுய பிரஞ்ஞை நி சசலமாயக காரணபபிரமத்தின் உபாசனையில் ஸ்திதி பெறும இவவாறே திருவாய்மொழியிலும், "உணாநதுணா ந இழிந்தகனறுயாங் துருவியந்த விநிலைமை, யுணாநது ணாநதுணரினு மிறைநிலை யுணாவரி துயிகா, ளுணாந து ணாந துணாத துணாத தரியய னரனெனனு மிவனா, யுணா நதுணாநத துணாத துணாத நிறைஞ்சமின் மனபபட்ட தொனறே." எ-ம, ஒனறெனப் பலவென வறிவருமவடி வினுளினற, நனறெழி ஞான ஞன்முக னரனெனனு மவனா, ஒனறநும பனதது னைத்துள ளிநுமிரு பசைய றுதது, நனறென நலஞ்செயவ தவனிடை நபமுடை நாளே " எ-ம, அருளிசசெயதிருப்பதுகாணக.

(உ௭) ஜகதகாரணன, சததியகாமன, சததியசஙகறபன, சாவஞ ஞன, சுதநதரன, சாவபபிரேரகன, கிருபாலு எனறிவவா று ஈசுரததனமஙகளைச சிநதிப்பாயாகவெனறு காரணபபிர மததின உபாசனைகூறியிருககினறது.

காரணபபிரமமனறியேறே அநேக மூாததிகளும சாஸதிரஙக ளிற கூறபபடடுளளன, அவை யெல்லாம உபாசனையின நியததம அனறு. சகலமும காரணபபிரமததின உபலடசணமாகவே கூறபப டடிருககினறன

(உ௮) உபலடசணமாவது, ஒனறன ஏகதேசததிருபபதும், ஓ போதிருபபதும, வியாவாததக* மாயிருபபதும யாது அது. எனனை ? காகமிருப்பது தேவதததனது கிரகம் எ னனுமவாக்கியததில காகம உபலடசணம் எஙஙனம காக மானது தேவதததனது கிரகததின ஏகதேசத திருபபதாயு ம, ஓாபோதிருபபதாயும, வியாவாததகமுமாயிருககிறதோ அஙஙனம ஜகத காரண பிரமததின ஏகதேசததில சதுா பபுஜாதிமூாததிகள உளளன ஓாபோது உண்டாகினறா ன, அச சதுாப்புஜாதி மூாததிகள காரணப பிரமததின

*வியாவாததகம = அநியததினினறும ஒனறை வேறுபடுததுமது. இ- து சு-வது பிரசஙகததிற்காணக.

கண்ணேயே உண்டாகின்றன. அந்நியத்தினைக் கண்ணில்லை
என வியாவர்த்தகமாகவிருத்தலின், அவை உபலட்சண
மாம். உபலட்சணத்திற்கு விசேஷியவஸ்துவின் சொரூ
பஞானம் உளதாதலே பிரயோஜனமாம். காகத்தால் தே
வதத்தனது கிரகத்தின் ஞானம் உளதாதலே பிரயோஜ
னமல்லாமல் அந்நியப் பிரயோஜனம் இல்லாததுபோல
சதுர்ப்புஜமுதலிய ஆகாரங்களால் நிராகாரமான காரண
பிரமத்தின் ஞானமே உபாசனையின் சித்தம் ஆதலின்
பிரதிபாதனத்தின் பிரயோஜனமல்லாமல் அந்நியமில்லை.

மந்தப்பிரஞ்ஞையுடையோர், சாஸ்திராபிப்பிராயம் அறி
யாமல் அவதாரங்களில் ஆக்கிரகஞ்செய்கின்றதுமன்றி
சியாலசாரமேயநியாயத்தால் பரஸ்பரம் கலகமும் விளை
க்கின்றனர். சியாலா என்பது ஒருஸ்திரீயின் தமையன்
பெயர். சாரமேயன் என்பது நாயின்பெயர். நியாயம்
என்பது திருஷ்டாந்தம். ஒரு ஸ்திரீயினுடைய தமைய
னுக்கும், அவள் கணவன் வீட்டுக்கு அடுத்தவீட்டு நாய்க்கு
ம் உற்பாலகன் என்றுபெயர் இருந்தன. அந்த ஸ்திரீயி
ன் தமையனுடைய சத்துருவுக்கும், அவள் கணவன் வீட்
டு நாய்க்கும் தாவகன் என்று பெயர் இருந்தன; இப்படி
யிருக்க, அந்தஸ்திரீயானவள் பிரதமத்தில் கணவன்வீட்டு
க்கு வந்தாள்; அப்போது மேற்கூறிய இரண்டு நாய்களும்
ஒன்றோடொன்று சண்டைசெய்துகொண்டிருந்தன; அ
தைக்கண்ட அவளுடையகணவன், அடுத்தவீட்டுநாய்க்கிட்ட
உற்பாலகனே, பன்றி, கழுதை என்பனமுதலியவார்த்தைச
களால் வைது, தன்னுடையதாவகனைப்போற் றிடையாதெ
ன்று பெருமைப்படுத்திக்கொண்டாடினான்; அதைக்கே
ட்டிருந்த அந்தஸ்திரீக்குத் தன்தமையனை வைகிறதாகவும்,
தமையனுடைய சத்துருவைக் கொண்டாடுகிறதாகவும்,
பிராந்தியுண்டாகி அதனால் அவள் துக்கமுடையவளாய்த்
தன் பர்த்தாவோடு கிலேசித்திருந்தாள். நாயகன் அபி
பிராயம்அறியாமல் சமானமானநாமத்தாலே பிராந்திகொ
ண்டு அவள் எப்படிக் கிலேசித்திருந்தாளோ அப்படியே

வைணவக்கிரந்தங்களில் சிவன் முதலிய நாமங்களால் காரியப்பிரமங்களை நிந்தைசெய்திருப்பதைக்கண்ட சைவர் முதலியோர்களும், சைவக்கிரந்தங்களில் விஷ்ணுநாமத்தால் காரியப்பிரமத்தை நிந்தைசெய்திருப்பதைக்கண்ட வைணவர்களும், துக்கத்தையடைகின்றனர். காரணப் பிரமம் உபாசிக்கத்தக்கது. காரியப்பிரமங்கள் விடத்தக்கனவென்பதே சகல புராணங்களின் அபிப்பிராயமாம். மாயா விசிட்டசேதனம் காரணப்பிரமமென்றும், மாயையினாற் பண்ணப்பட்ட காரியவிசிட்டசேதனம் காரியப்பிரமமென்றும் சொல்லப்படும். பாரதவியாக்கியானத்தின் ஆரம்பத்தில் அறிஞர்சிகாமணியாகிய நீலகண்டபண்டிதரால் இவ்வாறெழுதப்பட்டிருக்கிறது. சகல வேதாந்தங்களின் சித்தாந்தமும் இதுவே என்று விசாரசாகரத்தின் ஏழாந்தரங்கத்திற் கூறியிருக்கின்றது.

இந்நூலாசிரியர், இவ்வபிப்பிராயத்தை அறிவித்தற்பொருட்டே காரியப்பிரமங்களின் சின்னங்களான சதுர்ப்புஜம், திரிநேத்திரம், சதுண்ட, அஷ்டபுஜாதிகளுள்ளே யாதொன்றையும் எடுத்து விசேடியாமல், "ஏகநாயகன் பதங்கள் போற்றி" என்றார்.

இலக்கணையினால் தன்னனுபூதிமயமான இருக்குவேதமகாவாக்கியப்பொருளையே சிந்தித்ததாம். (க)

ஆன்மசொரூப நமஸ்காரரூப
மங்கலம்.

ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவா மயனும் மாலாய்
ஆன்றவீ சனுமாய்த் தானே யநந்தமூர்த் தியுமாய் நிற்கும்
ஊன்றமுத் தனுமா யின்பப் புணரியா யவனும் நாளும்
தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே (உ)

(இ-ள்) தானே—ஈன்று-உலகத்தைச்சிருஷ்டித்து—அளித்து-இரட்சித்து—அழிக்கும்-சம்மரிக்கும்—செய்கைக்கு-(இம் மூன்று)தொழிற்கும்—ஏது ஆம்-காரணமாகும்—அயன் ஆய-பிரமனாகியும்—மால் ஆய்-நாராயணனாகியும்—ஆன்ற ஈசனும் ஆய்-மாட்சிமைபொருந்திய உருத்திரனாகியும்—அநந்தமூர்த்தியும்ஆய்-(இன்னும்) அளவிறந்தசரா ந

ரதிரியக்காதி சேதனப்பிரபஞ்சங்களாயும் ஸ்ரீகதியாதிய அசேதனப் பிரபஞ்சங்களாயும்—பூணற முததனுமாய்-(அனைததினும்) பூரணமாகும் நிததிய முததனான ஈசுரனுமாய—நிறகும்-(நிறைநது) நிறகினற—இனபப்புணரி ஆதவன் ஆய-ஆநநதசமுததிரமாயும் (பர)மாதிததனுமாய—நாளும் தோன்றிய-சதாகாலமும் விளஙகுவதாகிய—விமல போதசொரூபததை-நிரமலமான ஆனமசொரூபததை—பணிகின்றேன்-வணஙகுகின்றேன்—எ-று.

"தானே, ஈனறளித தழிககுஞ் செயகைக் கேதுவா மயனுமாலா, யான்றவீ சனுமா யநநதமூர்த தியுமாயப் பூணறமுத தனுமாய நிறகும விமலபோத சொரூபததைப் பணிகினறேன்" எனககூட்டுக.

"அயனும் மாலாயா னறவீசனு மாய" என்றது காரியபபிரமஙகளை. "பூணறமுததனுமாய" என்றது காரணபபிரமததை இஙஙனமனைத்துமாய நிற்பதும் தனது ஏகதேசததில்; அதுவும் தோறறவுமாததிரமே என்னும் பொருடோனற "இன்பப் புணரியா தவனும" என்றார். அன்றியும், "இனபப் புணரியாதவனும்" என்றதை ஏதுகாபபவிசேடண மெனினுமமையும். "இனபம" என்பது பிரசித்த சமுததிரததினும் ஆனமமகோததிக்குள்ள விலட்சணத் தனமையையும், "நாளுந்தோன்றிய" என்பது பிரசிதத சூரியனினும் பரமாதிததனுக்குள்ள விலட்சணத்தனமையையும் குறிப்பிதது நின்றது. "விமலபோதம" என்றதால் பஞ்சகோசஙகளே ஆனமாவென்பாரையும், "போதசொரூபம" என்றதால ஆனமாவிறகு ஞானகுணமென்பாரையும் மறுததன ரென்றும், "தானே" என்றதால அநநிய நிமிததோபாதானம இனமையைக்குறிபபிததனரென்று கொளக.

ஈதனைததுமய ஆனமாவே யெனனுஞ்சுருதியால, தனனையணங்கினதாம.

குருவின நமஸகாரரூபமஙகலம

எவருடை யருளால யானே யெங்குமாம் பிரம மெனபால்
கவருடைப் புவன மெல்லாங் கற்பித மென்ற றிநது
சுவரிடை வெளிபோல் யானென் சொரூபசு பாவ மானென
அவருடைப் பதும பாத மறுதினம பணிகின் றேனே. (௪)

(இ-ள்) எவருடை அருளால்- (தாயினுஞ்சிறநத) யாவருடைய கிருபையினால்—சுவரிடைவெளிபோல்-குடடியததினகண்(அதனு

லாச்சாதிக்கப்பட்டுள்ள) ஆகாயத்தை (அக் குடத்தை யிடித்தொழித்து அதுவே மகாகாயமென்றறிந்தார்) போல — யானே-( அசங்கசித்தாத்மாவான வென்னையாச்சாதித்துள்ள பஞ்சகோசங்களையும், அவை என்னாலறியப்பட்டுச் சடமாயிருத்தலின், இது நானல்ல இது நானல்லவென்று நேதித்து, மேலே அவைகளின்பாவரூபமான சூனியத்தையுமொழித்து அவைகட்குச்சாட்சியாய அசங்கசித்தாத்மவான) நானே — எங்குமாம் பிரமம்-அரியயன் சிவன் அந்தகன் இந்திரனாதிய விடந்தோறும் (முத்திலுள்ள நூல்போல அநுசூதமாய்ச்சாட்சியாய்) நிறைந்திருப்பதாகிய பிரமமாம் — என்பால-(இப்படிப் பரப்பிரமமான என்னிடத்து)—கவருடையபுவனம் எல்லாம்-நாநாகூறுபாடுடைய பிரபஞ்சமெல்லாமும்—கற்பிதம் - (கானற்சலம்போல அத்தியஸ்தமாதலின்) மித்தையாம்—என்று அறிந்து-என்று (சமுசயமில்லாமற்) சாட்சாத்கரித்து—சுபாவம் - சுபாவமாக—யான் என சொரூபம் ஆனேன்-நானென்து(நிச) சொரூபமாயினேனோ — அவருடைய பதுமபாதம்-அக்குருமூர்த்தியினுடைய தாமரைமலர்போலும் திருவடியை—அநுதினம் பணிகின்றேன் - நாடோறும் வணங்குகின்றேன்—எ-று.

எவருடையருளால் ஆனேனெனக்கூட்டுக.

யாவரும் முடிமேற்கோடலானும், யாவரினும்பெருமையுடைமையானும், அபக்குவர் அணிமைக்கணிருந்தும் அடையாமையானும், பக்குவர் சேய்மைக்கணிருந்தும் தேடிவந்தடைதலானும் "பதுமபாதம்" என்றார். ஞானம் வந்தபின் பணிதலொழியின் செய்ந்நன்றி கொன்ற தோடம் வருமென்பதை, "அநுதினம்" என்னும் பதத்தாற்குறிப்பித்த

(௭) "சுபாவம்" என்றபதத்தால் அம்ஸாம்ஸிபாவம், விகாரவிகாரிபாவம், உபாசகவுபாசியபாவமுதலியனபோல எனக்கும்பிரமத்திற்குங்கொஞ்சமும் பேதமின்றென்பதையும், பேதமின்மையின்; காரியத்தன்மை, பிரகாசியத்தன்மை, ஆதேயத்தன்மை, ஆகிய பரதந்திரமுடையன் அன்றென்பதையும் குறிப்பித்தனர். "யானே யெங்குமாம் பிரமம்" என்பதற்கு, உதாரணம். பிரபுலிங்கலீலை. "வானமல்லேன் வளியல்லே னழனீ ரல்லேன் மண்ணல்லேன்ஞான மல

லேன் வினையல்லே னானே சிவமென் றெண்ணினேனு, னா னெனல்லா லொருசிவமே யாவ னிவ்வா றன்றாதா, னா னெல்லா முடையவுடம் பெடுத்துச் சுழலு மென்று ணறும்" எனவரும். மற்றும்வருவனவற்றுங்காண்க. "அநுதினம் பணிகின்றேனே" என்றதற்கு-௨-ம்-பிரமகீதை. "மாய வன்புலத் தெழாவகை நீக்கத்தன் வாய்மையான பயிர்க்காலாற், பாய வினைமுளை யிருசெவித் துணைவழி பாய்ச்சினனை பதுமத்தா, டாயுந் தந்தையுஞ் சுற்றமு மற்றுந் தனமுமென் றடைவானறனை, காய முள்ளனாள் வும்புகழ்ந் தேத்துவான் கற்றோர் கலையாலே" எனவரும். மற்றும்வருவனவற்றுங்காண்க "யானே" என்பது மஹாவாக்கியத்தினை-அகம்பதம். "எங்குமாம்பிரமம்" என்பது பிரபதம். "ஆனேன" என்பது அஸிபதம்.

அநுபூதிவாக்கியார்த்தஸம்ருதியோடு குருவினது பெருங்கருணையை வியந்தது. (௯)

[குருவின் சிபாத்வல்லபத்தைத் துதித்தல்]

என்னுடை மனது புத்தி யிந்திய சரீர மெல்லாம்
என்னுடை யறிவி னாலே யிரவிமுன் னிமமே யாக்கி
என்னுடை நீயு நானு மேகமென் றைக்கியஞ் செய்ய
என்னுடைக் குருவாய்த் தோன்று மீசனை யிறைஞ்சி னேனே.

(இ-ள்) என்னுடைமனது-எனது (சமுசயரூபமான) மனதும்— புத்தி-(நிச்சயரூபமான) புத்தியும்— இந்திரியம்-(ஞானகரு) மேந்திரியங்களும்—சரீரம்- (பிராணபஞ்சகத்தோடு இயவிலிங்கதேகத்திறகிடமானதூல) சரீரமும் — எல்லாம்-(இவ்விரண்டிற்கு மூலமான அஞ்ஞானக்கூட்டறனனும் காரணசரீரமும், இவைகளைப்பற்றி வாராநின்ற சாக்கிராதி அவஸ்தாத்திரயமும், விசுவாதி அபிமானித்திரயமும், இனனும் விராட்டாதி சட்டிட சரீரத்திரயங்களும், சிருஷ்டியாதி அவத்தாத்திரயமும், வைசுவானராதி அபிமானித்திரயமும், ஆகிய இவைபதத்தற்பதங்களிலுள்ளமாயாகற்பிதங்க)ளனைத்தையும்—என்னுடை அறிவினாலே-(தமமாற்போதித்த யுத்தியினாலேயுளதாகிய) எனது பி

ஞானியினாலேதானே—இரவிமுன்னிமமே ஆக்கி-சூரியன்முன்னே பனியைப்போலவே (அபாவ)மாக்கி—நீயும்-(துவம்பதலட்சியார்த்தமென்னும் கூடஸ்தனாகிய) நீயும்—நானும்-(தத்பதலட்சியார்த்தமென்னும் பிரமமாகிய) நானும்—ஏகம் என்று-(கடாகாயம் மடாகாயம்போல) ஒன்றேயென்று—என்னுடை ஐக்கியம் செய்ய-என்னுடைய ஐக்கியத்தை (எனக்கு) உபதேசித்தருள—என்னுடைக் குருவாய்த்தோன்றும் ஈசனை-என்னுடைய குருமூர்த்தமாயெழுந்தருளிய ஈசுரனை—இறைஞ்சினேன்-வணங்கினேன்.—எ-று.

தத்துவசமூகங்களுள் மனத்தைமுன்னே காட்டினது, வாசிட்டத்தில், "பரமமா மறிவின் முன்னே புறப்படும் பொய்யாமுள்ளப் புவனவிகற்பங்களெனும் பொய்யைக் காட்டும்." எனக் கூறியபடியே, சகலசகற்பனைக்கும் மனமேகாரணமாதல்பற்றி "எல்லாம்" என்பதத்தால், சமஷ்டி சரீரத்திரயமுதலியவை வருவித்தாம். "எல்லாம் இரவிமுன்னிமமேயாக்கி" என்பதால், அனர்த்தநிவிர்த்தியும், "ஐக்கியஞ்செய்ய" என்பதால், ஆனந்தப்பிராப்தியும், குருவினாலாயினவென்பது பெறப்படும். இப்பேறு குருவின் சீபாதவல்லபத்தாலாதலின், இதுவே குருவின் சீபாதவல்லபமாமெனக்

"நானும்" என்றது, பிரமவித்து பிரமமேயென்னுஞ் சுருதியாலென்க. ஐக்கியந்தனக்குப் புறம்பேயுள்ளதாயிருத்தலான், "என்னுடை ஐக்கியம்" என்றும், "ஈசனிங்கருள் செய்யவந்திருக்கிற விடவன் திருமேனி" என்னும் சுருதியால் "என்னுடைக் குருவாய்த் தோன்றுமீசனை" என்றுங்கூறினார்.

[ "ஈசன்" என்பதற்கு ஐசுவரியசம்பன்னனென்று பொருள். இறைஞ்சாநின்றேன் என்னாது, "இறைஞ்சினேன்" என்று, இறந்தகாலத்தாற்கூறினது, ஜகதீசுரன் குருமூர்த்தமாய் வந்தருளியது, கழிபோன அநந்தஜநநங்களில் யான் நிஷ்காமமாய்ச் செய்த ஈசுவரோபாசனையின் பெரும்பேறெனனுங்குறிப்பு. "குரு" என்பதில், குகாரம்=அஞ்ஞானம். ருகாரம்=ஞானமாம், ஆகவே, ஞானத்தால் அஞ்ஞானத்தை நிவர்த்திசெய்பவரே குருவாம். மற்றையோர் குருச்சத்தத்திற்கு அருகரல்லரென்றறிக. இதற்கு, உ-ம- பிரபுலிங்கலீலை
"உண்டோபிற ரென்று முலகெலா முண்மை யன்றென வுணர்த்தி

யெப் பொருளுங், கண்டசான் றதனைக் காட்சிய தறவே கணடிடக கரியெனக் காட்டும, பணடைவே தாநத வாக்கியரு சொனன படி யிலே பரமனே டொன்றாய, விணடிடா வண்ண மூணாததுவான றனனே வியனகுரு வென றிடும வேதம." எ-ம், "காட்சியையெல்லா ங கணணதாய்க் கரைததுக் கண்ணொழிக தொருபொரு ளில்லா, மாட்சியை யளிகக வலலவன குருவா மாரிபோன மாறுவேண டா தே, மீட்சியில பததனைக் கருணையா லளிக்கும. விததகக குரவனே யெவருந், தாழசசிசெய தேததற குரியதத துவமாகு சஙகர னென றிடத தகுவான" எ-ம வரும. மறறும வருவனவறறுறகாணக.

குருவின றிருமேனிககணணிருந்துசாமவேதமஹாவாககியததை உபதேசிப்பதும, ஈசுரனேயெனனுஞ்சுருதியினபொருளை யறிவிதத தாம. (ச)

[குருவைவணஙகி அவரருளால் நூல்செயப்புகுநது, நூலின அதிகாரி, சமபநதம், விடயம, பயனெனனும் அநுபநத ச துஷ்டயமறிந்தாலலலாமல [illegible] [illegible] [illegible]
ன முனனேகூறதலதொடஙகி, இதில அதிகாரியையும, விடயததையும கூறுகினறார.]

அநதமு நடுவு மின்றி யாதியு மின்றி வான்போல
சநதத மொளிரு ஞான சறகுரு பாத மபோறறிப
பநதமும வீடும காட்டப் பரந்தநூல பாரகக மாட்டா
மநதரு முணரு மாறு வத்துதத துவஞ்சொல லேனே. (இ)

(இ-ள) ஆதியும நடுவும இனறி-(தனக்குத)தோறறமுநிதியுமி லலாமல—அநதமும இனறி-நாசமுமிலலாமல—வானபோல-ஆகாய மபோலச(சூடசுமமாயவியாபகமாய் அசஙகமாய)—சநததம ஒளிரு-எ சாவகாலமும விளஙகாநிற்கும—ஞானசறகுரு பாதமபோறறி-ஞா னமயமானசறகுரு*வினுடையசீபாதஙகளைத்துதிசெய்து(அப மபுஜபிரசாதலேசததால)—பநதமும்வீடும காடட-பநதலடசண மி இனனது, மோடசலடசணம இன்னதென்று(அதிகாரிக)கறிவிததற பொருடடு—பரந்தநூல-(வாதராயணாமுதலியபூாவாசாரியரால் அரு

*சற்குரு=சததுபதேசஞ்செய்பவா

ளிசசெயயப்பட்டுள்ள சூததிரபாடியம், வார்ததிகமுதலிய) வேதாநத நூலகளை—பாாக்கமாட்டாமநதரும-விசாரிததறியச சமாததமினறிய மநதபுததியுடைய வதிகாரிகளும—உணருமஆறு- (அபபநதமோட்ச சொருபஙகளையெளி) தறியுமபடி—வதது தததுவமசொலவேன-வஸ துவின உணமையை (இந்நூலினகட்) சொலலுவேன—எ-று

"மநதா"=இநநூலின் அதிகாரி. "வததுதத்துவம்"=இந்நூலின விடயம்; "வதது"=சீவபபிரமஙகள. "தததுவம" = அவைகளின ஏகததுவம.

(உஅ) சகலபிராணிகளின அநதக்கரணததுளள மலம,‡ விட்சேபம,ஆவரணமனனும மூவகைததோடஙகளுளளே நிட்காமகாமாநுட்டானததால், மலதோடமும, உபாசனையால,விட்சேபதோடமும, ஞானததால, சொருபாவரணரூபமான அஞ்ஞானதோடமும நீங்காநிற்குமென்று கூறப்பட்டிருபப்பதால், நிட்காமகருமததால், மலதோடமும், உபாசனையால, விட்சேபதோடமும் நீஙகி ஓரஞ்ஞானதோடமாததிரத்தோடுகூடி நானகுசாதனங்களையுமுடைய புருடரோ இந்நூறகதிகாரிகளாம.

(உகூ) பிரதிபாதனமபண்ணப்படுவதுயாது ? அது விடயமெனப்படும. இநநூலினகணணே சீவப்பிரமஙகளின் ஏகததுவவம பிரதிபாதனமபணணபபடுதலின, அவவேகததுவமே இந்நூறகுவிடயமாம.

"மநதரும" எனபதில, உமமை இழிவு சிறபபாயககூரிய மதியுடைய ஏனையோரும என எதிரதுதழீஇ நினறது.

"மநதரு முணரு மாறு வததுதததுவஞ்சொல் வேன" எனபதனகருதது, பூர்வாசாரியரான வாதராயணாமுதலியோரால தெயவவாணியால வெகுகிரந்தஙகள முனனமே அருளிசசெய்திருக்க, நீரூதனமாகசசெநதமிழ்ப்பாஷையாலியறறுமநூலானது நிட்பலமாமெனறுவரும ஆசஙகையைப்பறறித்தெய்வவாணியாலுள்ள அநநூல்களா

---

‡ மலம=பாவம.

றகூறியமதியுடையோர்க்கே போதமுண்டாம். மந்தமதியுடையோர்க்குப்பாஷாகிரந்தங்களாலல்லாமல் அந்நூல்களால் போதம் உண்டாகாதென்பது துணிவாதலால், நூதனமாகவிந்நூலாரம்பிப்பது சபலமாமென்பது. (௫)

[ஆனால், செந்தமிழ்ப்பாஷையினும் பிரபந்தங்கள் அநேகமிருத்தலின், நீர் நூதனமாகச்செய்வதில் விசேடம் இன்மையின், இது நிட்பிரயோஜனமாமென ஞசங்கித்துத் தாம் நூதனமாகச் செய்யப்புக்கநூலின் விசேடத்தைத் தெரித்துணர்த்துகின்றார்.]

**படர்ந்தவே தாந்த மென்னும் பாற்கடன் மொண்டு முன்னூற்
குடங்களி னிறைத்து வைத்தார் குரவர்க ளெல்லாங் காய்ச்சிக்
கடைந்தெடுத் தளித்தே னிந்தக் கைவல்ய நவநீ தத்தை
அடைந்தவர் விடய மண்டின் றலைவரோ பசியி லாரே. (க)**

(இ-ள்) படர்ந்த வேதாந்தம் என்னும்-(அநேகமாய்) விரிந்துள்ள உபநிஷத்துக்களென்றுகூறும்—பாற்கடல் மொண்டு-பாற்கடலில் முகந்து—முன் நூல் குடங்களில்-(சூத்திரபாஷ்யம், வார்த்திகமுதலிய) புராதன கிரந்தங்களென்னுங் குடங்களிலே—நிறைத்து வைத்தார்-பூரித்துவைத்தார்கள்— குரவர்கள் எல்லாம்-(வாதராயணர்முதலிய) பூருவாசாரியர்களெல்லாம்—காய்ச்சி-(உபநிஷத்து வாக்கியங்களென்னும் அப்பாலைச்சற்குரு சந்நிதியிற்) காய்ச்சி—கடைந்து-எனதநுபூதிமத்தான மதனஞ்செய்து—எடுத்து அளித்தேன்-(திரட்டி) யெடுத்துக்கொடுத்தேன் — இந்தக்கைவல்ய நவநீதத்தை-இந்தக் கைவல்யநவநீதமென்னும் (ஞான) நூலினை,—அடைந்தவர்- இதனையநுபூதியளவிற் பெற்றோர்—விடயம் மண்டி இன்று-(சாரமற்ற) விஷமாகிய மண்ணையுண்டு—அலைவரோ-(அவ்விடயவாசனையான மேன்மேலும் ஜநநமரணங்களையடைந்து) வருந்துவரோ (வருந்தார்)—என்னை? பசியிலார்-இருப்பராகலின்.—எ-று.

ஆத்தகெம்பீரத்தால் அளத்தற்கரிதாகலானும், பரிபூரணபரமானந்தரூபமான சீதளத்தைப்பயத்தலானும், அமலமாயும், அற்புதமாயுமிருத்தலானும் வேதாந்தத்தைப், "பாற்கடல்" என்றும், பூர்வாசாரி

யார்கிய வாதராயணர் முதலியோர் தாம் உபதேசிக்கும் வகைக்கேற்கத் தமக்குவேண்டிய வாக்கியங்களை அங்கங்கே எடுத்துக்கொண்டதை, “மொண்டு” என்றும், அவ்வாக்கியங்களை நூலாகப் பூர்த்திசெய்ததை, “முன்னூற்குடங்களில் நிறைத்து” என்றும், அப்புராதன கிரந்தங்களை இவ்வாசிரியர் குருமுகமாக ஆராய்ந்து, அவற்றில் இன்னது பூர்வபட்சம், இன்னது சித்தாந்தமென்று தாம் தேர்ந்ததை, “காய்ச்சி” என்றும், சித்தாந்தத்திலும் ஆஞ்ஞாயிகை* ஆஞ்ஞானம்§ முதலியவற்றை ஒழித்துச் சாராம்ஸமான பிரகரணார்த்தங்களைத் தமது அநுபவமாகக்கொண்டு பலபடவிசாரித்ததை, “கடைந்து” என்றும், பிரமாத்மைக்கிய ஞானத்திற்கு முக்கிய உபயோகிகளான பதார்த்தங்களைத் தமதுமனதிலே தாரணைசெய்ததை, “எடுத்து” என்றும், அவைகளைப் பத்தியரூபப்பிரபந்தமாகச்செய்ததை, “அளித்தேன்” என்றும், இக்காரணத்தால், இந்நூற்குக் கைவல்லியநவநீதமென்று நாமமிட்டேமென்பார், “கைவல்ய நவநீதத்தை”¶ என்றும், இதைக்குருமுகமாகக்கேட்டு அநுபூதிபெற்றவர், செய்யத்தக்கவையெல்லாஞ் செய்து அடையத்தக்கவையெல்லாம் அடைந்தேம் என்னும் அமைதிரூபமான நிரங்குசதிருப்தராய்ச் சம்சாரவனர்த்தத்தினின்றும் முத்தராவர் என்பார், “விடய மண்டின றலைவரோ பசியி லார்” என்றுங்கூறினார்.

“எடுத்தளித்தேன்” என்பது, சம்பந்தம். “விடய மண்டின றலைவரோ பசியி லார்” என்பது, அனர்த்தநிவிர்த்தி ஆநந்தப்பிராப்தி ரூபமான இந்நூலின் பயன்.

(௫0) கிரந்தத்திற்கும், விடயத்திற்கும் பிரதிபாதிய பிரதிபாதக பாவசம்பந்தம். கிரந்தம், பிரதிபாதகம் விடயம், பிரதி

* ஆஞ்ஞாயிகை=பிரத்தியட்சதடத்தசத்தாந்தம்.

§ ஆஞ்ஞானம்=பரோட்சவிருத்தாந்தம்.

¶ கைவல்ய நவநீதம், என்பது கைவல்லியத்தை, ஞானவாயிலாகப் பயக்கத்தக்க நவநீதம்போன்றது என இரண்டாம் வேற்றுமை உருபும் பொருளுமுடன்றொக்க தொகையாய் நூற்கு உவமவாகு பெயரென்னும் காரணக்குறியாயிற்று.
கைவல்லியம்=மோக்ஷம். நவநீதம்=வெண்ணெய்.

பாதகியம்; யாது பிரதிபாதகஞ்செய்வதோ' அது பிரதிபாதகம்; யாது பிரதிபாதனஞ் செய்யப் யோக்கியமாமோ' அது பிரதிபாதகியமாம். அதிகாரிக்கும், பலத்திறகும் பிராப்பிய பிராபக பாவசம்பந்தம் பலம், பிராப்பியம் அதிகாரி, பிராபகன்; யாதொன்று பிராப்தமாமோ' அது பிராப்பியம் எவன் பிராப்தமாகப்பெறுவனோ' அவன் பிராபகன். அதிகாரிக்கும், விசாரத்திறகும், கர்த்துரு,கர்த்தவ்வியபாவசம்பந்தம் அதிகாரி, கர்த்தா விசாரம், கர்த்தவ்வியம், செய்பவனயாவன், அவன் கர்த்தாவாம் யாது செய்யயோக்கியமாமோ' அது கர்த்தவ்வியமாம் கிரந்தத்திறகும், ஞானத்திற்கும் ஜநகிய ஜநகபாவசம்பந்தம் விசாரவாயிலாகக்கிரந்தம், ஞானத்திறகு ஜநகமாம் ஞானம், ஜநகியமாம் உறபத்திபண்ணுவதுயாது' அது ஜநகமாம் யாது உறபத்தியாமோ' அது ஜநகியமாம் இவை முதலான சம்பந்தங்கள் இன்னும் அநேகம் உள

(௩௧) பிரபஞ்சத்திற்குக்காரணமான அஞ்ஞானமும், பிரபஞ்சமும ஜநநமரணரூபமான துக்கத்திற்கேதுவாகலின், அவை அனர்த்தமாம்; ஆகவே, அவ்வனர்த்தநிவிர்த்தியும், பரமானந்தப்பிராப்தியும் மோட்சமெனப்படும், இதுவே, கிரந்தத்திறகுப்பரமப்பிரயோஜனமாம் அவாந்தரப்பிரயோஜனம் ஞானமாம். யாதொன்றனிடத்துப்புருடனுக்கப்பேரவா யுண்டாமோ' அது பரமப்பிரயோஜனமாம், அதனையே முக்கியார்த்தமெனப; அவ்வனர்த்த துக்கநிவிர்த்தியிலும், சுகப்பிராப்தியிலும் சர்வபுருடருக்குமுளதாம; அதுவே மோட்சத்தின்சொரூபமாம, ஆகவே, பரமப்பிரயோஜனம் மோட்சமாம் ஞானம்அன்று. என்னை? ஞானமுக்கப்பிராப்திக்கும், துக்கநிவிர்த்திக்குமசாதனமதான், ஆயினும், ஞானமே சுகப்பிராப்தி, துக்கநிவிர்த்திரூபமானதன்று; இதனான், ஞானமஅவாந்தரப்பிரயோஜனமாம் யாதொருவத்துவினவாயிலாகப்பரமப்பிரயோஜனம் பிராப்தியாமோ! அதுஅவாந்தரப்பிரயோஜனமெனப்படும், அப்படிப்பட்டது ஞானம். என்னை? கிரந்தத்தினால ஞானவாயிலாக முத்திரூபமான பரமப்பிரயோஜனமபெறப்படுதலின், ஞான

அவாந்தரப்பிரயோஜனமாம் இவ்வாறான சம்பந்தப்பிரயோஜனங்களை இவ்வாசிரியர் இரண்டுசெய்யுளாற்சுருக்கத்துக் கூறினார்.

சொல்லிய உருவகத்தால், இந்நூலானது சகலவேதாந்தசாஸ்திரத்தசாராம்ஸங்களையும் சூத்திரம்போலச்செய்யுளுள்ளே அடக்கிக்கொண்டிருப்பதென்பதும், ஓரிடத்திலாவது வேதாந்தசாஸ்திரத்திற்கு விரோதமில்லாததென்பதும், ஞானத்திற்குமுக்கியஉபயோகியான பதார்த்தங்களைப் பிரதிபாதிப்பதென்பதும் ஏனைய பாஷாகிரந்தங்களோடு இணையானதன்று, சர்வபாஷாகிரந்தங்களினும், உத்தமோத்தமமாம் என்பதும்பெறற்றாம். (௬)

[இந்நூலின் படலவகை கூறுகின்றார்.]

**முத்தனை வேங்க டேச முகுந்தனை யெனையாட் கொண்ட**
**கர்த்தனை வணங்கிச் சொல்லுங் கைவல்ய நவநீ தத்தைத்**
**தத்துவ விளக்க மென்றுஞ் சந்தேகந் தெளித லென்றும்**
**வைத்திரு படல மாக வகுத்துரை செய்கின் றேனே. (௭)**

(இ-ள்) முத்தனை-(சம்சாரபந்தம்)விட்டவனை—வேங்கடேசமுகுந்தனை-வேங்கடமென்னும்மலைக்கிறைவனான திருமாலை—எனை ஆட்கொண்டகர்த்தனை-என்னை அடிமைகொண்ட கருத்தனை—வணங்கிச்சொல்லும்-(என்மயமாக)வணங்கிச்சொல்லலெடுத்துக்கொண்ட கைவல்ய நவநீதத்தை-கைவல்லியநவநீதமென்னும்பெயரையுடைய இந்த ஞானநூலினை—தத்துவவிளக்கமென்றும் சந்தேகந்தெளிதலென்றும்—இருபடலமாக வகுத்துவைத்து-இரண்டுபடலமாகப்பிரித்துவைத்து—உரைசெய்கின்றேன்-சொல்லுகின்றேன்.—எ-று.

மு என்பது, முத்தி. கு என்பது, புத்தி; இவைகளைமுறையேஞானிகட்கும், பத்திமான்கட்குங்கொடுப்பவன், "முகுந்தன்" ஆம். "முத்தன்" என்பது விட்டவனென்னுங்கருத்தியால் சுபாவமாகச்சம்சாரபந்தம் இவர்க்குச்சர்வதா இல்லை; இதனான், "முத்தன்" யாதொருசகாயமும் அபேட்சியாமல் பிரபஞ்சசிருட்டியைச்சுதந்தரனாகச் ஸ்வேச்சையினாலே பண்ணுகின்றமையால், கர்த்தாவாம்; இவ்வண்ணமி

ஷ்ணுசகஸ்திரநாமபாஷ்யத்திற் கூறப்பட்டுள்ளன. நாராயண தேசிக னென்னும் நாமத்திற்கியைய "வேங்கடேசமுகுந்தன்" என்று

குருவருளுடையோர்க்கே சகலசுருதிப்பொருள்களும் உள்ளவாறு தோன்றுமாதலான், "எனையாட்கொண்டகாத்தனை வணங்கிச்சொல்லும்" என்றார். இதனால், குருவினது கிருபாபலங்கொண்டு, இந்நூல் சொல்லுகின்றேனல்லாமல், எனது புத்திவலிகொண்டு சொல்லவில்லையென்பது குறிப்பு.

இங்ஙனங்கூறியது அவையடக்கம்.

ஜீவபிரமங்களின் ஐக்கியஞானத்தைப்பிரகாசிப்பித்தலால் முதற்படலத்திற்கு "தத்துவவிளக்கம்" என்றும், அதன்கணுள்ளவாகுஞ் சந்தேகங்களைத்தெளிவித்தலால் இரண்டாம்படலத்திற்குச் "சந்தேகந்தெளிதல்" என்றும், நாமஞ்சூட்டினர்.

படலம்=கிரந்தபேதம்; அதாவது நூலினுட்பிரிவு (எ)

## பாயிரம் முற்றிற்று.

சிவமயம்.

# கைவல்லிய நவநீதம்.

## முதலாவது

## தத்துவவிளக்கப்படலம்.

———

[குருச்-சம்வாதரூபமாக அந்தநிரூபணஞ்செய்யும் நூல் அப்பியாசயோகம் போதம் உண்டாமாகலின், அந்நூலை இந்நூல் நயமுந்தொடங்கி, இதுகேட்கும் அதிகாரிகளுடைய சாதனங்களை இங்கே கூறுகின்றார்.]

(கஉ)நித்திய வநித்தி யங்க ணிண்ணயந் தெரிவி வேகம்
மத்திய விகப ரங்கள் வருபோகங் களினி ராசை
சத்திய முறைக்க வேண்டுஞ் சமாதியென் றாறு கூட்டம்
முத்தியை விரும்பு மிச்சை மொழிவாசா தனமிந் நான்கே. (அ)

(இ-ள்) நித்திய அநித்தியங்கள்-நித்தியாநித்திய வஸ்துக்களினுடைய—நிண்ணயம் தெரிவிவேகம்-நிச்சயமானதன்மையை அறிய நின்ற விவேகமும்—மத்திய இகபரங்கள்-மத்தியமான இகலோகபரலோகங்களில்— வருபோகங்களில் நிராசை-(முறையேகரும ஞானிய ங்க) வருகின்ற (மாலை, சந்தனமுதலியனவும், அப்ஸரஸ்திரீ, அமுதமுதலியனவும் ஆகிய) போகங்களில் விராகமும்—சமாதி ஆறுகூட்டம்-சமாதிஷட்கசம்பத்தியும்—முத்தியை விரும்பும் இச்சை-மோட்சத்தையடைய விரும்புகிற்கும் இச்சையும்—(ஆகிய) இந்நான்கே—சத

தியம உரைக்கவேண்டும்-உண்மையாக (அதிகாரிக்குரியனவாகக்) கூற த்தக்க—சாதனம் என்று மொழிவர்-சாதனமாமென்று சொல்லுவார் பெரியோர் —எ-று.

"நித்தியம" = ஆன்மா. " அநித்தியம "= தேகாதிப்பிரபஞ்சம. "நிணயம"= ஆனமாநாசமினமையதும, கிரியையினமையதுமாம. பிரபஞ்சம,நாசமுடையதும, கிரியையுடையதுமாமெனனுந்தனமை, இவைகளினபகுத்தறிவு "விவேகம" இகலோகபரலோகஙகளிலுள்ள போகஙகளில அநித்ததுக்காதி தோடதரிசனததால வாநதாசனமுதலி புரீஷஙகளிறபோல அருவருபபுறறு ஆசைவிடுகை, "இகாமுத்தி ராத்தபலபோகவிராகம" சமமுதலிய ஆறினபிராபதியே "சமாதி சடசமபததி" பிரமபிராபதியும, அனாத்தநிவிர்த்தியும மோடசத்தி னசொரூபமாகலின், இவற்றினகணணுளதாகும இசசை "முமுடசுத் துவம "

சமமுதலிய ஆறையும ஒருசாதனமாக எண்ணியிருபபதால சா தனம் ஒனபதலலவெனபார, "நானகே" எனததேறறஙகொடுத்தார் "சத்தியி னுரைக்க வேண்டும" எனபது பாடமாயின, வைராக்கிய மும, சரீரவலியினளவு கூறவேணடுமெனறு பொருளுரைத்துக் கொளக சாதனநானகனுள்ளே முனனாவிவேகத்தைச்சொன்ன து, முனனேவிவேகம உளதாயிறறன பினனாவைராக்கியாதியுத் தரசாதனஙகள உளவாம; அஃதுளதாகாதேல, உத்தரசாதனஙகளு ளவாகாவாகலின எனக. (௫)

[சமாதிசடகஙகளின நாமமும, அவைகளின்
இலக்கணமுஙகூறல ]

சமந்தமம் விடல்ச கித்தல் சமாதான சிரத்தை யாறும
சமமகக் கரண தண்டந் தமமபுறக் கரண தண்டம்
அமாதரு கருமம் பற்று தறுத்தலே விடலென் றுரும்
மமாசெயுங் காம மாதி வரினடக் குதல் சகித்தல். (௬)

(இ-ள்) சமமதமமவிடலசகித்தல் சமாதானமசிரத்தை-சமம, தமம, உபராமம, திதிட்சை, சமாதானம், சிரத்தை (யெனும் இவை) —ஆறுஆம-ஆறன் நாமமாம—(இனிச்சமமுதலிய நானகன் இலக்க

ருக்கின்றதென்றும்—கறுப்புதங்கிய சேப்பு ஓடுது என்றும்-கறுப்புநிற்கச் சிவப்போடுகின்றதென்றும்—ஸோயம் தேவதத்தன் என்றும்-அந்த இத்தேவதத்தனென்றும்—இவ்வுதாரணங்கள் ஆக்கி-(வாக்கியார்த்தங்கள் விரோதமான) விட்டது (இம்மூன்றையும்) உதாரணங்களாகக்கற்பித்து — சொல்வார்கள் - (அவ்வடநூல்வல்லோர்) சொல்லாநிற்பர் — இந்த மூன்று உரைகளாலே இம்மூவகை (இலட்சணு) வாக்கியங்களாலே—துங்க நூல்-பெருமைபொருந்திய சாஸ்திரங்களில்—விரோதம் ஆன சொல் எலாம்-விரோதமுடையவாக்கியங்களெல்லாம்—தானே பொருள் ஆம் -(விரோதபரிகாரமாய்த்) தானே அர்த்தமாம் —எ-று.

தங்கிய=செய்யிய என்னும் வினையெச்சம். கறுப்புத் தங்கிய சேப்போடுது என்று பொருள்கொள்ளப்படுவதால் எதிர்நிரனிறைப பொருள்கோள். ஓடுகின்றது எனற்பாலது ஓடுது எனமரீஇயிற்று; ஏகவுருவாய்க்கிடக்குது என்றாற்போல.

வாச்சியார்த்தமுழுதும்விட்டு வாச்சியார்த்தசம்பந்திலையுணர்த்துவது விட்டலட்சணையெனப்படும். எப்படியெனில்; — ஒருவன்கங்கையில் கிராமம் இருக்கின்றதென்னின்;-அங்கே கங்காபதத்தின் விட்டலட்சணை தீரத்திலிருக்கின்றது. என்னை? கங்கையெனும்பதத்தின் வாச்சியார்த்தம் தேவநதியின்பிரவாகமாம்: அதன்கணணே கிராமத்தின் ஸ்திதி கூடாது. ஆகலின், அப்பதம் தன்வாச்சியார்த்தம் முழுதும்விட்டு அதன தீரத்தையுணர்த்தல்காண்க. வாச்சியத்தின்சம்பந்தத்திற்கு லட்சணையென்றுபெயராம்: இங்கே கங்கையெனும்பதத்தின் வாச்சியமான பிரவாகத்திற்குத் தீரத்தோடு சமயோகசம்பந்தமுண்டு. ஆதலால் கங்கையென்னும் பதத்தின் வாச்சியத்திற்குத்தீரத்தோடு உளதாயிருக்கிறசம்பந்தம் லட்சணை. வாச்சியமுழுதுந்தியாகம்பண்ணுவதால் இது விட்டலட்சணை.

வாச்சியார்த்தத்தோடுகூட வாச்சியத்தினுடைய சம்பந்தியின் ஞானம்; எப்பதத்தினுண்டாமோ; அப்பதத்தில் விடாதலட்சணையுண்டென்றறிக. எங்ஙனெனின்? கறுப்புநின்றது சிவப்போடிற்றென்று ஒருவன்சொல்லில் அங்கே கறுப்பு சிவப்பென்னும்பதங்களின் விடாதலட்சணைகருநிறஞ் செந்நிறங்களையுடைய பசுவினும், அசுவத

இதுபிருக்கின்றன. என்னை? கறுப்பு, செப்பெனுனும் நாமங்கள் கருநிறஞ்செந்நிறங்களையுணர்த்தும். ஆதலின், கறுப்பு செப்பெனனும் பதங்களின்வாச்சியம் கருநிறஞ் செந்நிறங்களாம். அவைகள் தனியேநிற்றலும் இடனுண்டோ. இக்காரணத்தால் கறுப்பு செப்பெனனும்பதங்களின் வாச்சியமான கருநிறஞ் செந்நிறங்களோடுகூடப் பசுவிலும், அசுவத்திலும் கறுப்புச் செப்பென்னும்பதத்தின் விடாதலட்சணையுண்டு. குணகுணிகட்குத் தாதாத்மியசம்பந்தமுண்டெனபர் கருமைசெம்மைகள் உருவத்தின்பேதமாவதாங் குணமாம். ஆதலால் கறுப்பு,செப்பென்னும்பதங்களின்வாச்சியமான கருமை செம்மைக் குணங்கட்கு அவைகளின்குணிகளானபசு,அசுவங்களோடு யாதொரு தாதாத்மியசம்பந்தமுண்டோ! அதுலட்சணை. வாச்சியத்தைவிடாமல் அதிகத்தைக் கிரகணஞ்செய்வதால் இதுவிடாதலட்சணையாம்.

எங்கே பதத்தின் வாச்சியார்த்தமத்தியில் ஓர்பாகத் தியாகமும, ஓர் பாகங் கிரகணமுமாமோ! அங்கே பாகத்தியாகலட்சணையுண்டெனப்படும். அந்தப்பாகத்தியாகத்தையே விட்டுவிடாதலட்சணையென்றுங்கூறுவர். எங்ஙனெனின்? முன்னேகண்ட தேவதத்தனெனனும ஓர் புருஷனை, அந்நியதேசத்திற்கண்டு அவன் இவனும் என்று ஒருவன்சொல்லில் அங்கே பாகத்தியாகலட்சணையுண்டு. எதனாலெனின்;—அதீதகாலத்தில் அந்நியதேசத்திலுள்ளவனை அவனென்பா ஆகலின் அதீதகாலம் அந்நியதேசங்களோடுகூடினவன் அவனெனனுமபதத்திற்கு வாச்சியார்த்தமாம்; வர்த்தமானகாலத்திற் சமீபதேசத்திலுள்ளவனை இவனென்பர். ஆகலின் வர்த்தமானகாலம் சமீபதேசங்களோடுகூடினவன் இவனென்னும்பதத்திற்கு வாச்சியார்த்தமாம. அதீதகாலத்தோடும் அந்நியதேசத்தோடுங்கூடினவனே வர்த்தமானகாலம் சமீபதேசங்களோடு கூடினவனுமென்னும்இது வாச்சியார்த்தமாம; ஆகவே, அதீதகாலமும் வர்த்தமானகாலமும் ஒன்றுக்கொனறு விரோதமாயும், அப்படியே அந்நியதேசத்திற்கும், சமீபதேசத்திற்கும் விரோதமாயும் உள்ளனவாகலின், இரண்டுபதங்களினுந்தேசகாலங்களாகிய வாச்சியபாகத்தைவிட்டு தேவதத்தனுடையதேகமாத்திரத்தில் இரண்டு பதங்களின் பாகத்தியாகலட்சணை உண்டென்பர்.()

[இலட்சணைமூன்றனுள், விட்டலட்சணை, விடாதலட்சணை என்னும் இரண்டும் மகாவாக்கியமல்லாத சத்தியஞானானந்தம்பிரமமென்பனமுதலிய வாக்கியங்களில் உபயோகமல்லாமல் தத்துவமசியாதிமகாவாக்கியங்களில் உபயோகமின்மையின், அவைகளைவிரிக்காமலொழித்து, தத்துவமசிமகாவாக்கியத்தில உபயோகமான பாகத்தியாகலட்சணையின் உதாரணத்தை விரித்துரைக்கின்றார்.]

பன்னிய சோய மென்னும் பதங்களின் வாச்சி யார்த்தம்
அன்னிய தேசங் கால மவனிவ னென்ப வெல்லாம்
சொன்னவிவ் விரோதம் விட்டுத் தொடரிலக் கியம்வி டாமல்
உன்னிடிற் றேவ தத்த னொருவனே வெளியாக் காட்டும். (அ0)

(இ-ள்) பன்னிய-(முன்)சொல்லிய—சோ அயம் என்னும் பதங்களின்-அவன் இவனென்னும்பதங்களினுடைய—வாச்சியார்த்தம்-வாச்சியார்த்தமாவன — அன்னியதேசம் காலம்-தூரதேசம் சமீபதேசம அதீதகாலம் வர்த்தமானகாலம்—அவன் இவன்-அந்தத்தேவதத்தன் இந்தத்தேவதத்தன்—என்ப எல்லாம்-என்பனவனைத்துமாம்.—சொன்ன இவ்விரோதம் விட்டு-(இவை ஒன்றற்கொன்றுவிரோதமுனமையின்) சொல்லிய இவ்விரோததர்மங்களான (வாச்சியார்த்தங்களை) விட்டு—தொடர் இலக்கியம் விடாமல்-(அவைகளை) அநுசரித்திருக்கின்ற இலட்சியார்த்தமென்னும் (சரீரமாத்திரத்தை) விடாமல—உன்னிடில்-ஆலோசித்துப்பார்க்கில்—தேவதத்தன் ஒருவனே-தேவதத்தனென்னும் ஓர்புருஷனே—வெளியாக் காட்டும்-(விரோதமில்லாமற்) பிரத்தியட்சமாகக்காட்டாநிற்கும் (சோயம்தேவதத்தனென்னும்வாக்கியம்.)—எ-று.

தொடரிலக்கியம்விடாமல என்னும் தொடர்விசேஷியம்விடாமல் என்னும் பாடமுளது.

இவ்வுதாரணத்தை முற்செய்யுளின் விசேஷவுரையிலேயே விரித்துரைத்தாம். (அ0)

(கசு௨) [பாகத்தியாகலட்சணையைத் தாஷ்டாந்தத்திற் றரிசிப்பிக்கிறார்.]

தத்துவ மெனும்ப தங்கள் பிரமமாய்ச் சாட்சி யான
வத்துவை விடாமற் பேதவாச்சியார்த் தத்தை விட்டு
சித்தமு மதுநீ யாகு நீயது வாகு மென்னும்
அர்த்தமு மகண்ட மென்றே யைக்கியங் காட்டும்.

(இ-ள்) தத் துவமெனும் பதங்கள்—(சாமவேதமஹாவாக்கிய மானது) அதுநீ என்னும்பதங்களின்—பிரமம் ஆய் சாட்சி ஆன-பிரம மாயும்,சாட்சியாயுமுள்ள—வத்துவை விடாமல்-சேதனபாகமான(லட்சியார்த்தத்தை) விடாமல் — பேதவாச்சிய அர்த்தத்தை விட்டு-பேததர்மங்களையுடைய வாச்சியபாகங்களை விடுத்து—சித்தமும்-சர்வகாலமும்—அது நீ ஆகும்-பிரமமே நீயாம்—நீ அது ஆகும்-நீயே பிரமமாம்—என்னும் அபேத அர்த்தமும்-என்றசொல்லும் அபேதத்தின்பொருளும்— அகண்டம் என்றே-ஏகமேயென்று—ஐக்கியம காட்டும்-ஐக்கியத்தையுணர்த்தாநிற்கும்.—எ-று.

சாமவேதமஹாவாக்கியம் தோன்றுமெழுவாய். வாக்கியம்விடாமல், விட்டு, அகண்டமென்று, காட்டும் எனமுடிக்க.

மாயை,மாயையின்கண்ணுமாபாசம், மாயைக்கதிஷ்டானசேதனம் மூன்றுங்கூடி சர்வசத்தி, சர்வஞ்ஞத்வாதிதர்மசகிதனுனஈசரன்-அவனே தற்பதத்திற்குவாச்சியம். வியஷ்டிஅவித்தை, அதில்ஆபாசம், அதனதிஷ்டானசேதனம் மூன்றுங்கூடி அற்பசத்தி, அற்பஞ்ஞத்வாதிதர்மங்களையுடையவனுஞ்சீவனும்: இவன் துவம்பதத்திற்குவாச்சியம்; இவரிருவர்க்கும் தத்துவமசிவாக்கியம் ஏத்தன்மைபோதிக்கின்றது; இதுபொருந்தவில்லை. ஆகலின், ஆபாசசகிதமானமாயை, மாயாகிருதமானசர்வசத்தி, சர்வஞ்ஞத்வாதிதர்மம் இவ்வாச்சியபாகத்தையும்விட்டு சேதனபாகத்தில் தற்பதத்தின்பாகத்தியாகலட்சணை; அப்படியே ஆபாசசகித அவித்தைசகிதமும் அவித்தையாற்பண்ணப்பட்ட அற்பசத்தி, அற்பஞ்ஞத்வாதிதர்மமுமான துவம்பதத்தினவாச்சியபாகத்தைவிடுத்து சேதனபாகத்தில் துவம்பதத்தின்பாகத்தியாகலட்சணை.

இவ்வாறு பாகத்தியாகலட்சணையினால் ஈசரனும், சீவனும் ஆகிய இருவருடையசொரூபத்தில் லட்சியமான சேதனபாகங்களின் ஏகத்வத்தைத் தத்துவமஸிமஹாவாக்கியம் போதியாநின்றது.

(கக௩) அப்படியே அயமாத்மாப்பிரமம் என்னும் மஹாவாக்கியத்தில, ஆன்மபதத்திற்குச் சீவனும், பிரமபதத்திற்கு ஈசுரனும வாசசியம். பூர்வம்போல் இரண்டுபதங்களினும லட்சணையுளது; இலட்சியார்த்தம் பரோட்சமல்லவென்னும் அர்த்தத்தை அயமென்னும்பதம் காட்டுகின்றது எல்லாருக்கும அபரோட்சமான ஆன்மாவே பிரமமாமென்பது வாக்கியார்த்தமாம். அகம்பிரமாஸ்மி என்னும மஹாவாக்கியத்தில, அகமபதத்திற்குச் சீவனும, பிரமபதத்திற்கு ஈசுரனும் வாசசியம், இரண்டுபதங்களின்சேதனபாகத்தில, லட்சணை நானபிரமமாயிருக்கிறேனென்பது வாக்கியார்த்தமாம பிரஞ்ஞானமாநந்தம பிரமம என்னும மஹாவாக்கியத்தில, பிரஞ்ஞானபதத்திற்குச் சீவனும், பிரமபதத்திற்கு ஈசுரனும வாச்சியம். பூர்வம்போல லட்சணை லட்சியமான பிரமானமா ஆநந்தகுணமுடையதன்று. பின்னை எப்படிப்பட்டதெனின்;—ஆநந்தரூபமாமென்னும அர்த்தத்தைக்காட்டுகின்றது ஆநந்தபதமெனக ஆன்மாவுக்கபின்னமானபிரமம ஆநந்தரூபமாமென்பது வாக்கியார்த்தம்.

(கக௪) மஹாவாக்கியத்திறபோல, அந்நியவாக்கியங்களிலுள்ள சத்தியஞானநந்தப்பதங்களும சுத்தப்பிரமத்தைப பாகத்தியாகலட்சணையினாலேயே உணர்த்துகின்றன சக்தியினால உணர்த்தவில்லை ஏனெனில்? சுத்தப்பிரமம யாதாமொருபதத்திற்கும வாசசியமாவதல்ல இது சித்தாந்தம.

இதன்றி சகலபதங்களும விசிஷ்டத்தின் வாசகம் சுத்தத்தினி லட்சகமாம. மாயையின் ஆபேட்சிகசத்தியத்தன்மையும, சேதனத்தின நிரபேட்சிகசத்தியத்தன்மையுங் கூடிநிற்கில் சத்தியபதத்திற்குவாசசியம நிரபேட்சிகசத்தியம் லட்சியம். புத்திவிருத்திரூபஞானமும, சுயம்பிரகாசஞானமுங் கூடிநிற்கில், ஞானபதத்திற்குவாசசியம சுயம்பிரகாசபாகம லட்சியம. விஷயசம்பந்தஜந்நியசுகாகார சாத்வீகவந்தக்கரணவிருத்தியும, பரமப்பிரேமாஸ்பதசொரூபசுகமுங் கூடிநிற்கில ஆநந்தபதத்திற்கு வாச்சியம விருத்திபாகத்தை விட்ட சொரூபபாகம லட்சியம. இவ்வாறு, சர்வபதங்களின லட

ரணையும சத்தத்தில சஞ்சேபசாரீரகத்தில் பிரதிபாதன்ம்பணை . ।
ளௌனவெனறறிக.

முனனும பினனும பிராசுதி சமயத்தும, லட்சியார்ததஙகட்கு அபேதமுணமையின "சிததமும்" என்றார்.

அதா யோகும சி யதுவாகும் எனறு, ஓதப்புரோதபாவமாகவே முசொன்னது முறையே பரோட்சப்பிராந்தியும, பரிசினனத்த பிராந்தியும சிவிர்தியாகும்பொருட்டென்க.

அதுாான நான அதுவென, மாறிச்சிநதிபடைத் ஓதபபுரோத பாவமெனப இதனைத்தென்மொழியில், குறுக்குநெடுக்கெனறு பி . . . (௮௪)

[சிவப்பிரமஙகளினபேததனைத திருஷடாநததானும உணாத்தி இதனை, உனதநுபூதிககணிருந தறிதியெனல்.]

**கடநீரின மேக நீரிற கண்டவா னிரணடும பொயயே**
**குடவானும பெரிய வானுங கூடியொன் றுமெப.போதும**
**இடமான பிரமஞ சாட்சி யிரணடுமெப போது மேகம**
**திடமாகச சுவாநு பூதி சிவோகமெய் திருநதி டாயே (௮௨)**

(இ-ள) கடநீரில்-கடசலததிலும—மேகநீரில-மேகசலததிலு— கணட வான இரண்டும்-பிரதிபிமபிததிருகினறசலாகாசம, மேகாகாசஙகளிரணடும — பொயயே – (உபாதிகளாறகறபிதஙகளாதலால) மிதையே—குடவானும பெரியவானும-கடாகாசம, மகாகாசம (இவையிரணடும)— எப்போதும-சாாவகாலமும—கூடி ஒனறு-பேதமிலலாமல (எப்படி) ஏகமோ (அப்படி)—இடம் ஆன பிரமம - வியாபகமானபிரமமும், சாட்சியும— இரண்டும் -(ஆகிய) இரணடும—எபபோதும்-சாாவகாலமும்—ஏகம- ஐக்கியமாம—திடமாக- (இவவைக்கியவநுபவம் சமுசயாதிப்பிரதிபந்தமின்றித) திடமாகப்பொருட்டு—சிவோகம் எனறு-சிவமேநான (நானேசிவம)என்று (சிநதியாசிதது)—சுவாநுபூதி- (சிநதியாசனபரிபாகவசததாலுணடாகும அதவைதாவஸதாநரூபமான) பிரமாநுபூதியில்—இருநதிடாய-இருப்பாய—எ-று.

“ஏபோ ராதமேகம்” என்றது,சொரூபநிருவிகற்பசமாதியிலெனக (௫௫)

(௫௬) [குருவருளியநெறிப்படியே தானநுபவித்தல.]

தஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழிதப் பாமல
பஞ்சகோ சமுங்க டந்து பாழையுந் தள்ளி யுள்ளில
கொஞ்சமா மிருப்பும் விட்டுக் கூடஸ்தன் பிரம மென்னு
நெஞ்சமு நழுவி யொன்றாய் நின்றபூ ரணத்தைக் கண்டான

(இ-ள்) தஞ்சம ஆம குருவும்*சொன்ன-தனக்குப்புகலாகிய ஆசாரியருமருளிய — தத்துவ வழி தப்பாமல-உணமை நெறிதவறாமல—பஞ்சகோசமும் கடந்து-அன்னமயமுதல ஆனந்தமயகோசபரியந்தம(தானலலவென்று) நேதிநது(அவைகடகுவிலட்சணமாய)—பாழையும தள்ளி-(அதறகுமேலேகணடபஞ்சகோசங்களின அபாவரூபமான) சூனியததையும (அதைக்காணுகிறதுமஅநுபவரூபநதானாகலின, தானனறென) றொழிதது— உள்ளில - அகததில— கொஞசம ஆம இருபபும விடடு-(பஞ்சகோசசூனியஙகளைக்காணுதறகு அநுபவரூபமானசாட்சி (தானெனறிருந்த) அறபமாகியஸ்திதியையும விடுதது—கூடஸதன பிரமம எனனும்-அகமபிரமமெனனும—நெஞசமும-(அகண்டாகார)விருத்தியும்—நழுவி-(நிதிதியாசனபாகவசததினாலுறங்கினவனகையிற்பதார்த்தமபோல)நழுவி—ஒன்றாய நின்ற-அகணடைகரசமாயுளள—பூரணத்தைக் கண்டான— பரிபூரணமானபிரமத்தைஅநுபவித்தான.—எ-று.

பஞ்சகோசசூனியங்களாகிய துவிதங்களைத் தானெனலபாதகமாகலின, அநததுவிதவிருத்தியைவிட்டெனபார், “பஞ்சகோசமுங்கடந்து பாழையுந்தள்ளி” என்றும், சாட்சிதானெனல பந்தமனறாயினும புருஷார்த்தசாதனஞானமன்றாகலின், சாட்சிவிருததியையும் விட்டெனபார, “உள்ளிலகொஞ்சமாமிருப்பும்விட்டு” என்றும், புருஷார்த்தசாதன ஞானமாயினும், அத்வைதாவஸ்தாரூபமெனனும் சாததியமானநிருவிகறபவனுபவததிற்கு அஞ்ஞாதமான அகண்டபிரமாகாரவிருத்தியும் ஒழிதல்வேண்டும், ஆதலான அகண்டாகா-

* குருவும், என்றதன்கண் உம்மை, இறந்ததுதழீஇய எச்சம.

விருத்தியும் விட்டென்பார், "கூடஸ்தன்பிரமமென்னுமநேருசமூ ரூவி" என்றும், வெகுவித பிரயாசங்கட்குக் காரணமானசித்தவிக ற்பங்களைத்தொலைத்து அகண்டைகரசசொரூபம் ஆயினனெ ன்பார், "ஒன்றாயின்றபூரணத்தைக்கண்டான்" என்றுங்கூறினார்.

சமாதிலட்சணம் இரண்டாம்படலத்தில், ௯௩-ம் செய்யுளுரை யில் விரித்தெழுதப்படும்; ஆண்டுக்காண்க.

இதற்கு, உ-ம், ரிபுகீதை. "தேகமுத லென்னன றுவித வி ருத்தி இகழ்சாட்சி நானென்னல் சாட்சி விருத்தி, யேகபர மென்னை ன லகண்ட விருத்தி யிம்மூன்று விருத்திகளி லிரண்டைத் தள்ளி, பாகமகண் டாகார விருத்தி தன்னை யகலாத மாதரவா யபியாசித் துச, சோகமுறுஞ் சித்தவிகற் பங்க ளாதத்துச் சொன்னவகண் டை கரச சொரூப மாவாய்." எனவரும். மற்றும்,வருவனவற்றுட்காண்க.

(௯௩௬) [அநுபவத்திற் சீடனடைந்துள்ள ஸ்திதியைக் கூறுகின்றார்]

அநுபவா னந்த வெள்ளத் தழுந்தியே யகண்ட மாகித்
தனுகர ணங்க ளாதி சகலமு மிறந்து சித்தாய்
மனதுபூ ரணமாய்த் தேக மானசற் குருவுங் காண
நனவினிற் சுழுத்தி யாகி நன்மகன் சுபாவ மானான். (அச)

(இ-ள்) அநுபவ ஆநந்த வெள்ளத்து-அநுபூதிரூபமானபிரமா னந்த சமுத்திரத்தின்கண்ணே — அழுந்தி-படிந்து—அகண்டம் ஆகி-பேதரகிதமாய—தனு கரணங்கள் ஆதி-தேகேந்திரியமுதலிய—சகலமும் இறந்து சித்து ஆய்-அனைத்து நாமரூபங்களும் ஒழிந்து(சலத்தி லிட்ட லவணம்போலச்) சித்துருபமாய்—மனது பூரணம் ஆய்-மனப் பரிபூரணமாய—தேகம் ஆன-(அருளே)திருவுருவான—சற்குருவும் காண-சற்குருவுந் திருக்கண்ணாற் பார்த்தருள — நனவினில் சுழுத் தி ஆகி-நனவிற் சுழுத்தியுடையவனாய்—நன்மகன்-நல்லசிட்டனானவ ன்—சுபாவம் ஆனான் - தன்னுடசுபாவரூபமாயினான்.—எ-று. ஏ-அசை

சமாதியில் இந்திரியங்கடமதுகாரணமான அஞ்ஞானத்தில் சுழு த்தியிற்போலலீனமாகாமல் தத்தங் கோளகைகளிலிருத்தலானும்,

அங்ஙனமிருப்பினும் விஷயாநுபவரூபமான பகிர்முகவிருத்தி யமைகடஇன்மையானும் சமாதி, நனவிறசுழுத்தியாம்.

"நனவினிறசுழுத்தியாகி" என்றதற்கு, உ-ம் வாசிட்டம் "நனவிற சுழுத்தி நிலைமேவி நன்று யெல்லா முள்ளகற்றித், தனதிச்சை யிலவாந் தனுப்புறத்தே சமைப்பாய சித்த முண்டாகை, கனதுகக் காதலு சித்தமற்ற கனத்த சுகமாஞ் சித்தத்தை, யுனதுட் பத்தி யுணர்வினமை யாலே யொழிப்பா யுணர்வுருவாய." என்வரும் மற்று வருவனவற்றாற்காண்க. ([illegible])

[சீடன் அநுபூதியினின்றெழுந்தானந்த பரவசனாய் ஆசாரியரைப் பணிந்து அவரதருளை வியந்து துதித்துக் கைம்மாறுகாணேனென்றல் ]

அளிமிக நெடும்போ திவ்வா றானபின் மனது மெள்ள
வெளியில்வந் திடவு ணர்ந்தான் விமலதே சிகனைக் கண்டான்
துளிவிழி சொரியப் பாதந் தொழுதுவீழ்ந் தெழுந்து சூழ்ந் [தான்
குளிர்முகச் சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான்.

(இ-ள்) அளி மிகன நெடும்போது - அன்புள்ளசீடனானவன் வெகுநேரம்—இவ்வாறு ஆன பின்—முன்சொல்லியவண்ணம் இருந்ததன்பின்னே—மனது-அந்தக்கரணமானது—மெள்ள வெளியில் வந்திட-கிரமமாகவெளியில்வர—உணர்ந்தான்-அறிந்து— விமலதேசிகனைக் கண்டான்-அவித்தியாமலமற்றகுருவைத்தரிசித்து—துளிவிழி சொரிய-ஆனந்தபாஷ்பம்விழியுதிர்ப்ப— பாதம் வீழ்ந்து தொழுது-குருவின்ஸ்ரீபாதத்தில்(தண்டம்போல)வீழ்ந்துநமஸ்கரித்து — எழுந்து சூழ்ந்தான்-எழுந்து பிரதட்சணஞ்செய்து—கும்பிட்டு நின்று-கைகூப்பிநின்று—குளிர்முகச் சுவாமி கேட்கச் சொல்வான்-(உவாமதி போற்) குளிர்ச்சிபொருந்திய திருமுகமுடைய ஸ்ரீகுருசுவாமிகேட்டருள விண்ணப்பஞ்செய்வான் —எ-று.

மெள்ளவெளியில்வந்திட என்பதை, வாசிட்டத்திற் பிரகலாத சமாதியினின்றும் உத்திதமானவிடத்திற்காண்க. ([illegible])

[குருவின்கருணைக்குக் கைம்மாறுகாணேனெனல்.]

ஐயனே யெனதுள ளேநின் றநந்தசன் மங்க ளாண்ட
மெய்யனே யுபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி
உய்யவே முத்தி நல்கு முதவிக்கோ ருதவி நாயேன்
செய்யுமா றொன்றுங் காணேன் றிருவடி போற்றிபோற்றி. ()

(இ-ள்) ஐயனே-(எனது)பிதாவே—எனது உள்ளே நின்று-எனது அந்தக்கரணத்தின்கண்(ணந்தரியாமியாய்)நின்று—அநந்த சனனங்கள் ஆண்ட-அநந்தகோடிஜனனங்களில் கர்மோபாசனைகளிற்செலுத்தி எனது அந்தக்கரணத்தின்கண்ணுள்ள மலதோஷ விட்சேபதோஷங்களைப் போக்கியென்னையாண்டருளிய—மெய்யனே-கடவுளே—உபதேசிக்க-(ஆவரணதோஷநீங்கி எனது நிஜரூபத்தை யானுபவித்தானந்தமடைய) உபதேசித்தருளும்பொருட்டு—வெளி வந்த-வெளியே (அருளேதிருவுருவாய) எழுந்தருளிய—குருவே போற்றி-குருவே (உமக்கு) நமஸ்காரம்—உய்யவே முத்தி நல்கும் ஓர் உதவிக்கு-(யான்) ஈடேற (அநர்த்தநிவிர்த்தி ஆனந்தப்பிராப்திரூபமான) மோட்சத்தை (ஞானவாயிலாகத்)தந்தருளியஇணையற்றவுதவிக்கு—உதவி-கைம்மாறு—நாயேன் செய்யும் ஆறு-நாயடியேன் செய்யும்படிக்கு—ஒன்றும் காணேன்-யாதொன்றுங்கண்டிலேன்—திருவடி போற்றிபோற்றி-திருவடிக்குவந்தனம்வந்தனம்.—எ-று.

மெய்ப்பொருள் பொய்ப்பொருளென்னும் இரண்டனுள், மெய்ப்பொருள் உம்மாற்பெற்றமையானும், பொய்ப்பொருளான உடலமாதிஇணையாகாமையானும், திருவடியையடைந்தவனதே அவை உம்முடையவாகவே ஆயினமையானும் கைம்மாறொன்றுங்காணேனென்பான், "முத்திநல்கு முதவிக்கோருதவிநாயேன்செய்யுமாறொன்றுங்காணேன்" என்றும், உமது திருவடியே தாயுந்தந்தையுஞ்சுற்றமுந்தனமுமாமென்று எனதுடலமுள்ளளவும் புகழ்ந்தேத்துவதேகைம்மாறாகக்கொள்ளல்வேண்டுமென்பான், "திருவடி போற்றிபோற்றி" என்றும் கூறினன். (அசு)

[தனதுபதேசஞ் சேடனிடத்துச்சபலமானமையான், அவனையாதரவுசெய்து நீ எனக்குச் செய்யுங்கைம்மாறிது வென்றாசிரியர் கூறுகின்றார்.]

சிட்டனிவ் வாறு கூறத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்
கிட்டவா வென்வி ருத்திக் கிருபையோ டருளிச் செய்வார்
துட்டமாந் தடைகண் மூன்றுந் தொடராமற் சொரூப ஞான
நிட்டனா யிருக்கி னீதே நீசெயு முதவி யாமே. (அஎ)

(இ-ள்) சிட்டன இவவாறு கூற- நல்ல சிட்டனானவன
ா செயதவுபகாரத்தைப பாராட்டி அதற்குப்பிரதியுபகாரஙகாணேனெ
னறுசொலல—தேசிகா மகிழ்ந்து நோக்கி-ஆசிரியா சநதோஷித்துத
(தமதுகிருபாநோக்கததால அவனைப்) பார்த்தருளி—கிட்டவா என
இருதது-இஙகேவாவெனறு (விளித்து ஆதரவாகத்தமது) சமீபததில
வைதது—கிருபையோடு அருளிச் செய்வார்-கருணையோடு மதுகிர
கிபபா—துட்டம ஆம தடைகள் மூன்றும்-தீமையவாகிய பிரதிபந
தஙகளை மூனறும்—தொடராமல்-(உனனை)யடையாமல—சொரூப
ஞானநிட்டன ஆய-சொரூபஞானததில ஆரூடனாய—இருக்கின-இ
ருநதனையாயின—ஈதே-இதுவே—நீ செயும்உதவி ஆம-நீ (எனககுச)
செயயாநிறகும (பிரதி)யுபகாரமாகும்.—எ-று. ஏ-அசை.

அபரோடசஞானத்தையும் பேதிததலால், "துட்டம" எனறா.
"சொரூப ஞான நிட்டனா யிருக்கினீதே நீசெயு முதவியாம" என
றதால, "மாறிபோன மாறுவேண டாதே, மீட்சியில் பததனைக கரு
ணையா லளிககும விததகக் குரவனே யெவருந், தாட்சிசெய் தேதத
ற குரியதத துவமாஞ் சங்கர னென்றிடத் தருவான்." எனனும பிர
மகீதையின செய்யுட்கு இவவாசிரியர் இலக்கியமாயினர் என்றறிக.(

[அபரோட்சஞானம் நீங்குமாவென்னுஞ் சிட்னகடா
விற்கு ஆசிரியர் விடைகூறல்.]

நீநானென் றிரண்டி லாம னிறைந்தபூ ரணமா யெங்கும்
நானுகத் தெளிந்த ஞான நழுவுமோ குருவே யென்றான
தானுகும பிரம ரூபஞ் சற்குரு தானாற் றேன்றும
ஆனாலுந் தடைக ளுண்டே லநுபவ முறைததி டாதே.(அஅ)

(இ-ள) நீ நான்- என்று-(தற்பதலட்சியாாத்தமான) நீபிரம
மெனறும, (துவம்பதலட்சியாாததமான) நானகூடஸதனெனறும

—இரண்டு இலாமல் - (கருதாநிற்கும்) இத்துவிதக்கற்பனையுமில்லா மல்—நிறைந்த பூரணம் ஆய்-நிறைந்தபரிபூரணமாய்—எங்கும்-எவ்விடத்தும்—நான் ஆக-(சின்மயனை) யானொருவனேயுளனாக—தெளிந்த ஞானம்-(அநுபவமாக) அறிந்தஞானமானது—நழுவுமோ குருவே-நீங்குமோ ஆசாரியரே—என்றான்-என்று (சீடன்) வினவினன்—தானே ஆகும் பிரமரூபம்-தன்மயமாகும்பிரமரூபமானது—சற்குரு நூலால் தோன்றும்-சற்குருவுபதேசத்தாலும் (சற்) சாஸ்திர விசாரத்தாலும் அநுபவமாம்—ஆனாலும்-இவ்வாற்றால், பிரமாநுபவமுளதாயினும்—தடைகள் உண்டேல்-பிரதிபந்தங்களுண்டாமாயின்,—அநுபவம் உறைத்திடாது-அவ்வநுபவத்திடப்படமாட்டாது.—எ-று.

ஏ-அசை.

இராஜாவானவன் ப(ஹ)ர்ச்சலைவ நேத்திரத்தினலறிந்தும், விபரீதபாவனையெப்படிநிவிர்த்தியாகவில்லையோ! அப்படிக் குருவருளாலும் மஹாவாக்யவிசாரத்தாலும் பிரமாபரோட்சஞானமுண்டாயினும், யாவருடையபுத்தியில் அசம்பாவனை விபரீதபாவனையாகிய தோஷமுண்டாமோ! அவருடையதோஷரூபமான களங்கத்தோடு கூடியஞானம் பலத்திற்கேதுவாகாதென்பார், "தானாகும்பிரமரூபஞ் சற்குருநூலாற்றோன்றும், மானாலுந்தடைகளுண்டேலநுபவமுறைத்திடாதே." என்றார். (கஎஉ)

தடையெவை யெனிலஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்
படர்செயு மிந்த மூன்றும் பலசன்ம பழக்கத் தாலே
உடனுடன் வரும்வந் தக்கா லுயர்ஞானங் கெடுமி வற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்த றெளித லாலே. ()

(இ-ள்) தடை எவை எனில்-பிரதிபந்தங்கள் யாவையென்று கேட்பாயாயின்,—அஞ்ஞான சந்தேக விபரீதங்கள்-அஞ்ஞானம், சந்தேகம், விபரீதங்களாம்.—அபரோட்சஞானம்வந்தும், இவையுண்டாதற்குக்காரணம் என்னையோவெனின்;—படர் செயும் இந்த மூன்றும்-துன்பத்தைப்பயவாநின்ற இம்மூவகைப்பிரதிபந்தங்களும்—பலசன்மப் பழக்கத்தாலே-(பூர்வம்) நானாவிதஜநநங்களிற்(பழகிவந்த) பரிசயத்தினாலே—உடன் உடன் வரும்-அடிக்கடியுண்டாகும்—அவையுண்டாயிற்படுமிழுக்கென்னையெனின்;—வந்தக்கால்- அவையுண்டாயி

ன,— உயர் ஞானம் கெடும்-மேலான (பிரமாணமயமாகிய) ஞானம் (பலத்திற்கேதுவாகாமற்) போம்—(ஆகலின்) இவற்றை-இவ்வஞ்ஞானசந்தேகவிபரீதங்களை—கேட்டல் சிந்தித்தல் தெளிதலாலே-சிரவண, மனன, நிதித்தியாசனங்களினாலே—திடமுடன் கெடப்பாய்-தைரியத்தோடுகூடின நாசம்பண்ணுவாய்,—எ-று.

திடமாவது, சிட்டுக்குருவி தர்ப்பைதுணியாற் சமுத்திரத்தை இறைத்துப்பாழாக்கத் தான்கொண்ட முயற்சிபோலும் பிரதிபந்தங்கள் அடிக்கடியுதிப்பதானாலும் மலையாமல் அவைகெடுதற்குரியவாயிலில் நெடுங்காலம் நிரந்தரம் ஆதரவோடுகூடிநிற்குமுயற்சி. (௮௬)

[பிரதிபந்தசகிதஞானம் பலத்திற்கேதுவாகாதென
பதைத் திருஷ்டாந்தமுகத்தினாலறி
வித்து முற்கூறியதை வற்
புறுத்துகின்றார்.]

அக்கினி கட்டுப் பட்டா லற்பமுஞ் சுடமாட் டாது
மக்கின ஞானத் தாலே வந்தபந் தமும்வே வாது
சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்த றெளித லாலே
விக்கின மஞ்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே. (௯0)

(இ-ள்) அக்கினி கட்டப்பட்டால்-அக்கினியானது (மணிமந்திர அவுஷதங்களினாலே) அடக்கப்படுமாயின்,— அற்பமும் சுடமாட்டாது-கொஞ்சமும் (காஷ்டமுதலியவற்றைத்) தகிக்கயோக்கியமாகாது;—(அதுபோல) மக்கின ஞானத்தாலே-(அஞ்ஞானசந்தேகவிபரீதங்களாலே) மழுங்குண்டதத்துவஞானமாகிய அக்கினியினாலே—வந்த பந்தமும் வேவாது-(அநாதிகாலந்தொடுத்து) வந்துள்ள (கர்த்தத்துவாதி) பந்தமும் வேகாது.—(ஆகலின்) சிக்கெனப் பழகி கேட்டல் சிந்தித்தல் தெளிதலாலே-நெடுங்காலநிரந்தரம்நேசத்தோடும் அப்பியசித்துச் சிரவண, மனன, நிதித்தியாசனங்களாலே—விக்கினமாம் சந்தேகம் விபரீதம்-(ஞானபலமானமோட்சப்)பிரதிபந்தங்களான அஞ்ஞானசந்தேகவிபரீதமென்பவற்றை — போக்குவாய்-ஒழிப்பாய்,—எ-று. (௯0)

[விவர்த்திக்கத்தக்கவைகளான பிரபஞ்சங்களின்
சொரூபங்களைக் கூறுகின்றார்.]

பிரமபா வனையை மூடிப் பேதங்காட் டுவதஞ் ஞானம
குரவன்வாக் கியமம் பாமற் குழம்புவ தாஞ்சந் தேகம்
இரம றுசகமெய் யென்றுந் தேகநா னென்று முள்ளே
விரவிய மோக நானே விபரீத மென்பர் மேலோர். (கக)

(இ-ள்) பிரமபாவனையை மூடி-சிவோகமென்னும்பாவனையை மறைத்து—பேதங் காட்டுவது-நான் (பிரமம்) அல்லனென்னும் நினைப்பூட்டுவது—அஞ்ஞானம்-அஞ்ஞானமாம்.—குரவன் வாக்கியம் நம்பாமல்-(நீபிரமமென்றருளிய) ஆசிரியர் வாக்கியத்தை விசுவசித்து நம்பாமல்—குழம்புவது சந்தேகமாம்-(நானபிரமமோ! அலனோ! என்று) கலங்குவது சமுசயமாம்.—இரம் அறு சகம் மெய் என்றும்-திருஷ்டநஷ்டமான ஜகத்துச்சத்தியமென்றும்—தேகம் நான் என்றும்-(அநாத்மாவாகிய) தேகம்நானென்றும்—உள்ளே - அகத்தே—விரவிய மோகம்தானே-பொருந்துவதானமோகமே—விபரீதம் என்பர் மேலோர்-விபரீதமாமென்பர் பெரியோர்.—எ-று. (கக)

[முன்சொல்லிய அஞ்ஞானதிகளின் விரோதிகளான
சிரவணுதிகளினியல்புகூறுகின்றார்.]

தத்துவ வநுபோ கந்தான் சாதித்தல் கேட்ட லென்பார்
ஒத்துள பொருளு சுத்தா லுசாவலசிந் தித்த லென்பார்
சித்தமே காந்த மான தெரிசனந் தெளித லென்பார்
நித்தமிப் படிசெய் துக்கா னிர்வாணம் பெறுவாய் நீயே.(கஉ)

(இ-ள்) தத்துவ அநுபோகம்-பிரமாகாரவிருத்தியை—தான் சாதித்தல்-(வேதாந்தார்த்தசிந்தனத்தினுலே) தான் அடிக்கடி ஆவிர்த்திசெய்யாநிற்பதையே—கேட்டல் என்பார்-சிரவணமென்பர் (பெரியோர்)—ஒத்து உளபொருள்-(சிரவணத்தாற)சம்மதித்துள்ளபொருளை— யுகத்தால-(அபேதத்தைச்சாதிப்பதும், பேதத்தைவாதிப்பதுமான) யுத்தியினுல— உசாவல்-ஆராய்தலே—சிந்தித்தல் என்பார்-மனனமென்றுசொல்லுவர்—சித்தம் ஏகாந்தம் ஆன தெரிசனம்-சித்

தம பிரமாகாரமாத்திரமாக நிற்கும அநுபவத்தை—தெளிதல என பார்-நிதித்தியாசன மென்பர்—நித்தம்-காட்டோறும்—இப்படி செய்த ககால-இவ்வாறு(சிரவணாதிகளை) அநுஷ்டித்துவந்தாயாயின்,—கீர்ட்டணம பெறுவாய்-(அவ்வஞ்ஞானதிப்பிரதிபந்தங்களினீங்கி) நீமோட்சமடைவாய்.—எ-று.

சண்டிதுவிவேகம்.

மோட்சமானது ஞானத்தால் நியமமாகவுண்டாகாநிற்கும இது வேசித்தாந்தமாம ; அந்தஞானம் சிரவணத்தாலுளதாம. சிரவணம இருவகைத்து ஒன்று வேதாந்தவாக்கியத்திற்கும், சுரோத்திரத்திறகும் உளதாயசமயோகரூபம். மற்றொன்று வேதாநதவாக்கியத்தின்விசாரரூபம. ஞானத்திற்கேது பிரதமசிரவணம் இரண்டாவ தலல. என்னை ? சத்தஜந்யஞானத்தில், இந்திரியத்தோடு சத்தத்தினசமயோகமே சாவதிரஏதுவாம. ஆகலின், வேதாந்தவாக்கியத்திறகும், சுரோத்திரத்திறகும்உளதாயசம்யோகரூபமானசிரவணமபிரமஞானத்திறகேதுவாம. அவாந்தரவாக்கியத்தின்சிரவணம பரோட்சஞானத்திறகேதுவாம். மஹாவாக்கியத்தின்சிரவணம் அபரோட்சஞானத்திறகேதுவாம ஒருவனுக்கு ஞானம் உதயமாயினும், அசம்பாவனை, விபரீதபாவனைகளுண்டாமாயின், அவனால் இரண்டாவதானசிரவணமும், மனனநிதித்தியாசனங்களுஞ் செய்யற்பாலனவாம். வேதாநதவாக்கியத்தின விசாரரூபமானசிரவணத்தால் வேதாநதவாக்கியத்தினசமபாவனைநிவிர்த்தியாம். சமுசயத்தை அசம்பாவனையென்பர். வேதாந்தவாக்கியம பிரமத்தைப்பிரதிபாதிக்கிறதோ ! அல்லது அநியங்களைப்பிரதிபாதிக்கிறதோ ! என்றுளதாகாநிற்குஞ்சமுசயம் வேதாந்தவாக்கியத்தினசம்பாவனையாம் ; அது அதனவிசாரத்தினால நிவிர்த்தியாம் · மனனத்தினால் பிரமேயத்தினசமபாவனை நிவிர்த்தியாம். ஜீவபிரமங்களின்ஏகத்வம் வேதாந்தத்தினபிரமேயமென்பர் ; அவ்வேகத்வம் சத்தியமோ ! அல்லது ஜீவபிரமங்களினபேதம சத்தியமோ ! என்றிவ்வாறுளதாகுஞ்சமுசயம் பிரமேயவசம்பாவனையெனப்படும்: அதுமனனத்தினால்நிவிர்த்தியாம், விபரீதபாவனை நிதித்தியாசனத்தினால் நிவிர்த்தியாம். இவ்வாற்றால், பிரதமசிரவணமோ ஞானவாயிலாகமோட்சத்திற்கேதுவாம். விசாரரூபசிரவணமும், மனனநிதித்தியாசனங்களும் அசம்பாவனை, விபரீதபாவனைகளைநிவிர்த்திசெய்வாயிலாகமோட்சத்திற்கேதுவாம.

இவ்வாறு, பிரமாணகத, பிரமேயகதவசம்பாவனைகள் ஞானத்திற்குப்பிரதிபந்தங்களென்று விசாரசாகரத்திற் கூறியிருப்பதுபோல இவ்வாசிரியர்கூறாமல், "பிரமமல்லனென்னை யஞ்ஞானமுநான பயிரமமோ! வலனே! வென்றியேயாம்" என்று வேதாந்தசூடாமணியிற்கூறியிருப்பதுபோல, "பிரமபா வனையை மூடிப் பேதங்காட்டுவதஞ் ஞானவ ஞானவாக்கியகம் பாமற் குழம்புவ தாஞ்சத் தேகம்." என்றமுற்செய்யுளிற்கூறியிருப்பதால், "தத்துவ வநுபோகந்தான சாதிதல கேட்டல்" என்பதற்கு,பிரமாகாரவிருத்தியை வேதாந்தத்தின ஆர்த்தசிந்தனத்திலலே அடிக்கடிஆவிர்த்திசெய்யாநிற்பது சிரவணமாமென் றுவேதாந்தவாக்கியத்தினவிசாரரூபமான இரண்டாவதான சிரவணத்தையுரைசெய்யப்பட்டது. வேதாந்தத்தின் அர்த்தசிந்தனத்திலலே அடிக்கடிபிரமாகாரவிருத்தியுண்டாகாநிற்கும்; ஆகலான் அடிக்கடிவேதாந்தத்தின் அர்த்தசிந்தனரூபமானஇரண்டாவதானசிரவணத்திலலேயே அஞ்ஞானப்பிரதிபந்தநிவிர்த்தியாம். நிதித்தியாசனத்தின பரிபாகாவஸ்தையைத்தானே சமாதியென்பாராகலின், சமாதியும நிதித்தியாசனத்தில்அந்தர்பாவம்: வேறுசாதனமன்று. கடாகாரமானஅந்தக்கரணத்தின்அபரோட்சவிருத்தியைக் கடாநுபவமென்பதுபோலப், பிரமாகாரமானஅந்தக்கரணத்தின்பரோட்சவிருத்தியை இங்கே, "தத்துவவநுபோகம்" என்றார்.

"தொக்க பிறவித் தொடர்ந்துவந்த வாதனா, மிக்க கால யோகத்தின் பழக்கத் தல்லால் விடாது" என்று, வாசிட்டத்திற்கூறியிருப்பதுபற்றி, "நித்தமிப் படிசெய் தக்கா னிர்வாணம் பெறுவாய் நீயே." என்றார். (௧௨)

[ஞானத்திற்குப் பிரதிபந்தங்களான அஞ்ஞானாதிகளின்சொரூபமும், அவைகளின்விரோதிகளான சிரவணாதிகளின்சொரூபமுங்கூறி "நித்தமிப்படிசெய்தக்கானிர்வாணமபெறுவாய்நீயே" என்றமுற்செய்யுளில்அருளிச்செய்தமையால் பிரதிபந்தநிவிர்த்தியின் பொருட்டுச் சிரவணாதிகள் சடபரதாதியர்போல, மரணபரியந்தம்வேண்டுமென்கொலெனவருமாசங்கையைத் தொலைத்தற்கு அவைஅநுஷ்டிக்குங்காலவளவைகூறுகின்றார்.]

எத்தனை நாண்ஞா தாவுஞானமு மிருக்கு முன்பால்
அத்தனை நாளும் வேணடு மப்பாலோர் செயலும வேண்டா
நித்தமும வெளிபோற் பற்றா ஞேயமாத் திரமாய்ச சீவன்
முத்தரா னவாவி தேக முத்திபெற் றிருப்பா ரென்றும.(௬௩)

(இ-ள்) எத்தனை நாள்-எவவளவுகாலம்—ஞாதாவும-(ஞானத்தினகாத்தாவாகிய) அந்தக்கரணமும்—ஞானமும - (பிரமாகாரமான அநதககரணததினவிருத்திரூப) ஞானமும—உன்பால இருக்கும-உனனிடததிருககுமோ—அததனைநாளும்-அவவளவுகாலமும—வேணடும-(அஞ்ஞானநிவிர்த்திப்பிரதிபந்தவிரோதிகளானசிரவணாதிகள்)வேணடும —அப்பால-(ஞாதாஞானமெனனுமவிகற்பங்களிறந்து மனமாவாகவிட்டபின் ப்ரமாணஜநகியஞானவிஷயமான ஞேயமாத்திரமாக நீ அவசேஷித்த) பினனா—ஓா செயலும வேணடா- (சிரவணாதியநுஷ்டானஙகளுளஓரநுஷ்டானமும (உனககு) வேண்டுவதில்லை—நித்தமும -நாடோறும—வெளிபோல-ஆகாசமபோல—பற்றா ஞேய மாததிரம ஆய-அசஙகசிதானமாமாததிரமாய்—சீவன் முத்தர் ஆனவா-சீவனமுததராயினோர்—விதேகமுத்தி பெற்று-(பிராரத்தநாசததில்) விதேகமுததியடைந்து—என்றும் இருப்பார்-சார்வகாலமும் (அதுவா) யிருபபா.—எ-று.

இங்கே இது சித்தாநதம.

மநதமென்றும, திடமென்றும் ஞானம் இருவகைததாம சமுசயாதிசகிதஞானம் மநதஞானமென்றும், சமுசயாதிரகிதஞானம திடஞானமென்றுஞ்சொலலப்படும. யாவர்க்குத் திடஞானமுண்டாமோ! அவாககுக் கிஞ்சின்மாததிரமுங் கர்த்தவவியமிலலை. ஓாபோதுற்பநநமாகாநிற்கும் சமுசயாதிரகிதவந்தக்கரணததின விருததிரூபஞானமே அவிதரையை நாசம்பண்ணித் தானும நிவிாததியாயவிடும நனறாககக்கண்ட ஆனமாவின்கண் மீண்டும்பிராந்தியுணடாகாது என்னை? பிராநதிக்குக் காரணமாகிய அவிததை ஓாபோதுற்பநநமாகும ஞானததால் நஷ்டமாய்விடுதலின. பிராநதியும் அவித்தையும் இனமையின், விருத்திஞானத்திறுவிாததிக்கு யாதொருபிரயோஜனமுமில்லை. ஆதலால், "அப்பாலோர்செயலும்வேண்டா" என்றும். "ஞானமுதித் ததனபினபைங கோசஙகடகு நலைமேயுறய யிகவுமறிந் ததுவே போல, ஞானம்வரு முனுஙகோச மனைக்கு

வேறாய னாயிருந்தோ மென்பதுசித் தித்த லாலும்" என்று இலட்ச ணாவிருத்தியிற் கூறியிருப்பதுகொண்டும், நமதாசிரியர்கொண்டு ம "நிர்த்தமுமவெளிபோற்பற்றேயமாத்திரமாய்" என்றுங்கூறினார். இதனையுய்த்துணர்க. ஜீவித்திருக்கிற புருஷனுக்குக் கர்த்துருத்வாதி க்லேச ஏதுவாதலால் பந்தமாம்: அவைநிவிர்த்தியாதலே ஜீவன்முத்தி யாம. எக்காலத்தும், எவ்விடத்தும் ஓர்தேகத்தையும் தானடையா ல அகண்டாகாசப்பிரமமாத்திரமாயிருப்பதே விதேகமுத்தியா மெனக

"ஜீவன் முத்தரானவர் விதேகமுத்திபெற் றிருப்பாரென்று" என்றதற்கு, உ-ம். ஈசரகீதை. "எங்குந் தானாய் யாவையுமாய் நின்றே யொன்றும் பற்றின்றி, யங்க மொன்றின் றறிவேயாய் நுண்ணி தாய வருள்வடிவைத், தங்கு ஞான யோகத்தா லுணர்ந்து பாச சித்துப பினைவந்தே, மங்க மான பேரொளியோ டொன்றி யானு மடங்கிடுவார்." எ-ம், "சுத்தனு யொன்று மெனவினைக் கூடிடுமே தொல் லையோகத், தொத்தனை நூறு கோடி கற்பங்க டானுசென் றாலும், மெய் பத்தர்களா ரென்றன் விளங்குமெய் யருளா லன்றே, யித்தகைத் தனவே வேத மியம்பிடு மென்று ரீசன்." எ-ம வரும். மற்றுமவை நுவனவற்றுற்காண்க. (கக)

(கடு) [இனிச் ஜீவன்முத்தர்களின்பேதங்கூறுகின்றார்.]

ஞானமார் ஜீவன் முத்தர் நால்வகை யாவர் கேளாய்
வானிகர் பிரம வித்து வரன்வரி யான்வ ரிட்டன்
ஆனவர் நாம மாகு மவர்களிற் பிரம வித்தின்
தானமு மற்றை மூவர் தாரதம் மியமுஞ் சொல்வேன் (கச)

(இ-ள்) ஞானம் ஆர் ஜீவன்முத்தர்-ஞான நிறைந்த ஜீவன்முத் தர்கள்—நால்வகை ஆவர்-நான்குபேதமாயிருப்பர் — கேளாய்-(அப் பேதங்களைச்சொல்லக்கேள்.— வானிகர் பிரமவித்து - ஆகாசத்தை யொப்பான பிரமவித்தெனவும்,—வரன்-வரனெனவும்,—வரியான்- வரியானெனவும்,—வரிட்டன்- வரிட்டனெனவும—ஆனவர் நாம மாகும்-அச்சீவன்முத்தர்களின் பெயராம்— அவர்களில-அந்நால்வ கருள்ளே,—பிரமவித்தின் தானமும்-பிரமவித்தினுடைய (அநுபவ) வலியையும,—மற்றை மூவர்-ஏனைமூவருடைய—தாரதம்மியமும்-த

ரதம்மியத்தையும்—சொல்லின்-இனிக்கூறுவேன்.—எ-று

அங்ஙிய பரிபக்குவப்புருஷரைக் கர்மோபாசனைகளைய நுஷ்டிக்கப் பண்ணும்பொருட்டு, ஆன்மாவை அசங்கமாகவும், கிரியைகளனைத் தையும் மனவாக்குக்காயங்களின் சரிதமாகவும் அறிந்து காமோபாச னைகளைப் பிரமவித்துச்செய்யாநிற்பதால், "வாணிகாபிரமவித்து" என்றார்.

"ஞானமாசீவன்முத்தாநால்வகை" என்றதாலும், "மறை மவர்தாரதம்மியமுஞ்சொல்வேன்" என்றதாலும், இந்நாலவருமஞா னத்திற்றாரதம்மியம் இன்மையரென்றும், விசிராந்திசுகத்திற் றாரத ம்மியமுடையரென்றும் அறிக. (கூஉ)

[பிரமவித்தினியல்புகூறுகின்றார்.]

தீரராய்ப் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியு முன்னம்
வாரமா யிருந்த தங்கள் வருணமாச் சிரமஞ் சொன்ன
பாரகா ரியமா னாலும் பலர்க்குப கார மாக
நேரதாச் செய்வர் தீர்ந்த நிலைவிடார் சீவன் முத்தர். (கூ௩)

(இ-ள்) தீரர் ஆய்-மனத்தைரியமுடையராய்—பிரமவித்து ஆய-பிரமஞானிகளாகி—தெளிந்தவர்-(யாமார்என்பதுமுதலியகலக்கங் கள்)தெளிந்தோர்—தெளியும் முன்னம்-அப்படித்தெளிதற்குமுன்னே—வாரம் ஆய் இருந்த-உரிமையாகவிருந்த — தங்கள்-தங்களுடைய —வருணம் ஆச்சிரமம்§ சொன்ன-வருணாச்சிரமங்களைப்பற்றிய சாஸ் திரங்களிற் சொல்லியகிரியைகள்—பாரகாரியம் ஆனாலும்-கனமான கிரியைகளாயினும்—பலர்க்கும்* உபகாரம் ஆக-(பரிபக்குவரான)பலரு க்குஞ்சகாயமாகவேண்டி—நேரதாச் செய்வர்-(மந்திரலோபம், கிரிய லோபம், திரவியலோபமின்றிச்)சாஸ்திரோக்தமாகச்செய்யாநிற்பர்-(அப்படிச்செய்யாநின்றும்) தீர்ந்த நிலைவிடார்-(சுருதிகளாற்சொல் லிய)முடிவான அத்வைதநிச்சயத்தைவிடாரான—சீவன் முத்தர்-சீவி த்திருக்கும்போதேமுத்தராயுள்ளோர்.—எ-று.

---

* பலர்க்கும் என்னுமுற்றும்மை, விகாரத்தாற்றொக்கது.
§ வருணமாச்சிரமமென்பன அவைகளைப்பற்றியசாஸ்திரங்கட்கு ஆகுபெயர்.

இங்கேசிசயம் என்றது அநுபவத்தை

ஈசுரனுற்பராக்குகளாகச் சிருஷ்டித்த இந்திரியங்களை வேகமுளளநிச்சலத்தைத் திருப்பினாற்போல, அகமுகமாக்கிச் சர்வேந்திரியங்கடங்கும ஆந்தரமானபரமாத்மாவைச் சாட்சாத்கரித்திருப்பதால், "தீரா" என்றும, யாமார்! ஜகம் எத்தன்மைத்து! என்பனமுதலிய கலக்கங்களை கலங்கனீர் கதகரேணு¶வாற்போல, பிரமவித்தையாற றொளிந்திருத்தலால், "பிரமவித்தாய்த்தெளிந்தவர்" என்றும, ஆப்தகாமராதலாற் றமக்கெனச்செய்யாது லோகசங்கிரகார்த்தம் வருணாசிரமவிதிகளை விதிப்படிசெய்வதால், "பலர்க்குபகாரமாக, நேர்தாச செய்வர்" என்றும், சோரநாயகனைத்தொழில்செய்வினும், சோரநாயகன்களத்தினைவிடாததுபோல, அந்நியரைச் சன்மார்க்கத்திற்பிரவிர்த்திப்பித்தற்பொருட்டுக் கர்மோபாசனைகளைச்செய்யினும், பிரமநாமென்னும் அநுபவம் க்ஷணமும் விடாமையின், "நிரந்த நிலைவிடார்" என்றுங்கூறினர். (கூ)

இதுவுமது

காமமா திகள்வந் தாலுங் கணத்திற்போ மனத்திற் பற்றா
தாமரையிலைத்தண் ணீர்போற் சகத்தொடுங் கூடி வாழ்வார
பாமர ரெனக்காண் பிப்பர் பண்டிதத் திறமை காட்டா
ரூமரு மாவா ருள்ளத் தவலையொஞ் சிவன் முத்தர். (கக)

(இ-ள்) காமம் ஆதிகள் வந்தாலும்*-(பிராரத்தவசியால)காமக்ரோதமியமை(பிரமவித்துக்களிடத்து)எழுமாயினும—(அவை)கணத்திற்போம- (உடனேதிட்டமானவைராக்கியமுதலிய சுத்தவாசனைபிரயத்தனமின்றியெழுவதால்) க்ஷணத்தில்நாசமாம்—மனத்தில் பற்றா-(அஞ்ஞானிகளைப்போலஅவைகளை) அந்தக்கரணத்தின்கண்(வாசனையாகப்)பற்றார்கள்—தாமரை இலைத் தண்ணீர் போல்-தாமரையிலையிற்சலம(கூடியின்றும்பற்றாதது)போல—சகத்தொடும் கூடிவாழ்வார-(அசங்கிதானமா [illegible] அநுபூதியால்அகத்திற்பற்றுபடேல) பிரபஞ்சத்தோடுங்கூடிவாழ்ந்திருப்பர்—பாமரர்எனக்காண்பிப்பார்-(கர்

---

¶ கதகரேணு—தேற்றாம்பொடி.

* வந்தாலும் என்றதன்கணும்மை-எதிர்மறை.

மகாண்டத்தையும், உபாசனகாண்டத்தையும் நிச்சேஷமாகவிடுத்து, ஞானகாண்டத்தினுலேமுத்திசம்பாதித்துக்கொண்ட தைரியசத்தியிருப்பினும உலகத்திலஞானவாசனையில்லாமற் கர்மோபாசனைகளையநுஷ்டிக்கும)*மூடசிரோமணிகளைப்போலத் (தம்மைக்) காட்டுவார—பண்டிதத் திறமை காட்டார- (அநேகமதங்களைக்கண்டித்து அநேகமதங்களைஸதாபிக்கத்தக்கசக்தியுள்ள சர்வஞ்ஞராயிருந்தும் அடக்கமுடைமையின்) வித்துவத்சாமாத்தியத்தைக்காட்டார்கள்--ஊமருமாவர் - (சின்மயமாகிய சிவமே இவையாவையுமெனறும் கழுத்திமௌனாநுபூதியால விகற்பமெழாமையின்) மௌனருமாயிருப்பார—உள்ளத்து உவகை ஆம் சீவன்முத்தா - அந்தக்கரணத்தினைகண்ணிரங்குசநிருபதியுடையரான சீவன்முத்தாகள.—எ-று.

"பாமர ரெனககாண் பிப்பார பண்டிதத திறமை காட்டா ஊமரு மாவார்" எனறதற்கு, பாகவதத்திற்கூறுகிற்கும் சடபரதனை இலக்கியமாகக்காணக

"ஊமருமாவார்" என்று இவவாசிரியர்கூறியிருப்பதுபோலவே வாசிட்டத்தில, "விவாதமறு மோனத்தோன்" எ-ம, "இருபபுழி மௌனஞ் சாந்தி சமமெய்தி யிராகமின்றி" எ-ம், அருளிச்செய்திருப்பது காணக

இந்திரசாலத்திற் கந்தாவநகரத்தைப்பார்ப்பவனுக்கு ஓாபோகத்திலும இச்சையெழாததுபோல, பிரமஞானிக்கும் மித்தியாபபிரபஞ்சத்திற பிராரத்தவலியாலலலது காமமுதலியவையெழாதாதலால, "காமமா திகளவந் தாலும" என்றா

காமமாதி, எனறதனுல் காமம், சங்கற்பம், சந்தேகம, இராகம, துவேஷம, சிரத்தை, பயம, இலச்சை, இச்சைமுதலியவுங்கொளக

"காமமாதிகளவந்தாலும" எனறதற்கு,உ-ம. வாசிட்டம "மிகவருகா மாதிகளாம் விகாரமடைந் தும்விண்போல் மிகநொய தானே, ரகமெனவின் றிச்செயலகள் செய்தாலுந் தவிர்ந்தாலு மழுந்தமற்றோர், சகநெறிகள் செய்திடினு மன்னியர்போற் கண்டுகுளிர் தனமை சான்றோர், திகழ்மனது நினைவுமிருந் துஞ்சிறிது மிலலாதோர் சீவன்முத்தர்" எனவரும், மற்றும் வருவனவற்றுற்காண்க.

'கணத்திற்போம்" என்றதற்கு, உ-ம், திருவள்ளுவர். 'குண

மெனனுங் குன்றேறி நின்றா ரெவருக்கும் காணயேயுங் காத்த லரிது.''
எனவரும். மற்றும் வருவனவற்றுற்காண்க.

"மனத்திற்பற்றார்" என்றதற்கு, உ-ம். சுவா னுபவத்திருவாக்கு.
'காணபானுங் காண்பவையைக் காணுமிடத் தேகமதாய்ப், பூண்பன
வால வாதனையும் பூண்டிடுமே, வீண்பயினும்-வாசனையைச் சித்தத்தி
ல வையா ததுமுத்தி, யாசிலிதற் கர்த்தமிதே யாம்'' எனவரும். மற
று. வருவனவற்றுற்காண்க. (கசு)

[ஞானிகளின் சரீரவியவகாரத்தில் நியமமில்லை.
ஏனெனின்? ஞானிகளின் வியவகாரத்திற்கு அஞ்ஞானமும்,
அதன்காரியமான பேதப்பிராந்தியும் அதனலுளவாகும்
இராகத்துவேஷங்களுமில்லை. மற்றியாதுளதெனின்;—
பிராரத்தகர்மசேஷமேயுளது. அதுவே அவர்களின் விய
வகாரத்தில் நிமித்தமாம்; அந்தப்பிராரத்தகர்ம புருஷபே
தத்தால் நானாப்பிரகாரமாம் ஆகலின், ஞானிகளின் பி
ராரத்தகர்மனுக்கியவியவகாரத்திற்கு நியமமின்றெனனுஞ
சித்தாந்தபட்சத்தை இங்கே கூறுகின்றார்.]

பேதகர் மத்தால் வந்த பிராரத்த நாநா வாகும்
ஆதலால் விவகா ரங்க ளவரவர்க் காவ வாகும்
மாதவஞ்செயினுஞ்செய்வார்வாணிபஞ்செயினுஞ்செய்வார்
பூதலம் புரப்பா ரையம் புகுந்துண்பார் சீவன் முத்தர். (கஎ)

(இ-ள்) பேதகர்மத்தால் வந்த-(கிரைவிற்றதானியம்போலப்)
பேதமான(சஞ்சித)கர்மத்தினலுண்டான—பிராரத்தம்- பிராரத்தகர்
மமும—நாநா ஆகும்-நாநாப்பிரகாரமாம்—ஆதலால்,—விவகாரங்கள
அவர் அவர்க்கு ஆவ ஆகும்-வியவகாரங்களும் அவரவர்கட்குப் (பிரா
ரத்தத்திற்குத்) தக்கனவாகப்பொருந்துவனபொருந்தும் — மாதவம்
செயினும்செய்வார்-பெருமைபொருந்தினதவத்தைச்செய்யினுஞ்செ
ய்வார்கள்—வாணிபம் செயினும் செய்வார்-வியாபாரஞ் செய்யினுஞ
செய்வார்கள்—பூதலம் புரப்பார்-பூமியைப்(புரப்பினும்)புரப்பார்—ஐ
யம்புகுந்து உண்பார்-பிச்சைபுகுந்து (உண்ணினும்) உண்பார்—சீவன்
முத்தர்-சீவன் முத்தர்கள்.—எ-று.

"மாதவஞ் செயினுஞ் செய்வார் வாணிபஞ் செயினு செய்வாரு ர்" எனபதனால், நிவ்ருத்தியுமில், ஞானி பிரவிர்த்தியாகிறபது வேதஆஞ்ஞையினாலல்ல, தனது இச்சையினாற் பிரவிர்த்தியாகிறப னென்றறிக.

யாவர்க்குப் பிட்சைமாத்திரத்திற்கேதுவாகப் பிராரத்தமிருக்கு மோ! அவர்க்கே ஞானமுண்டாம்: அதிகவியவகாரத்திற்கேதுவாக யாவர்க்குப்பிராரத்தமிருக்குமோ! அவர்க்கு ஞானமுண்டாகாது. ஆகலான், பிட்சையுண்டன்முதலியவியவகாரத்திலும் அதிகவியவகார ம ஞானிக்குண்டாகாது: யாவர்க்கு அதிகப்பிரவிர்த்தியுண்டாமோ! அவர் ஞானியலலரெனறு சிலர்சங்கைபண்ணுகிறபர்; அச்சஙகைகூடாது. எனனை? யாக்ஞவல்கியா, ஜனகாதியர்ஞானியென்றுசொலலபபட்டிருக்கின்றனர்; இவர்களில், சபாவிஜயத்தினாற் றனசஙகிரகவியவகாரம யாக்ஞவல்கியருக்கும், இராச்சியபாலன வியவகாரம ஜனகருக்குஞ்சொல்லபபட்டிருக்கின்றது. வாசிட்டமிரத்தத்தில, அநேகஞானிகட்கு வியவகாரம் நாநாப்பிரகாரமாகச்சொல்லியிருக்கின்றது. ஆதலால், ஞானியினுடைய பிரவிர்த்திக்கு அல்லது நிவிர்த்திக்கு நியமமில்லை; எப்படியும், யாக்ஞவல்கியர் சபாவிஜயத்திற்குப்பின்னர் வித்துவத்சந்நியாசரூபமானநிவிர்த்தியைத்தானே அடைந்தனர். பிரவிர்த்தியில் வைராக்கியத்திற்கேதுவான நாநாவித தோஷங்களைக்கூறினா; அப்படியாயினும், யாக்ஞவல்கியர்க்கு வித்துவத்சந்நியாசத்திற்கு முன்னம் ஞானமில்லையென்றுசொல்வது கூடாது ஞானமோ முன்னும் இருந்தது. ஆயினும், வித்துவத்சந்நியாசத்திற்குமுனனே சீவன்முத்தியின் ஆநந்தமடையப்படவில்லை. ஆதலால், சீவன்முத்தியின் ஆநந்தத்தின்பொருட்டுச் சாவசஙகிரகங்களையுந் தியாகஞ்செய்தனா. யாக்ஞவல்கியர்க்குப் பிராரத்தஞ் சிலகாலம்அதிகபோகத்திற்கேதுவாகவும், பிற்காலம் நியூனபோகத்திற்கேதுவாகவும் இருந்தது. ஆகவின், முன்னேயாக்ஞவல்கியர்க்கு வைராக்கியமின்றி அதிகபோகமும், பின்னேவைராக்கியத்தினாற் சாவபோகங்களின்தியாகமுமுண்டாயிருந்தது. ஜனகர்க்குப்பிராரத்தமமரணபரியந்தம் இராச்சியபாரமுதலிய அதிகபோகத்திற்கேயேதுவாகஇருந்தது. ஆதலால், சநாத்தியாகமில்லாமலேயிருந்தது: போகங்களில்வைராக்கியமுமுண்டாகவில்லை, வாமதேவாதிகளின்பிராரத

தம் நியூனபோகத்திற்கேதுவாகவிருக்கும், அவர்கட்குச்சுகபோகத்தில் வைராக்கியத்தினுல் பிரவிர்த்தி இல்லையென்றே சொல்லப்பட்டிருக்கின்றது. வாசிட்டத்தில், சித்தாலனுக்கு ஞானத்திற்குப்பின்னே அதிகப்பிரவிர்த்தியுண்டாயிருந்ததென்னும்பிரசங்கமுமுண்டு. இவ்வாறன்றல, நாநாப்பிரகாரமானவிலட்சணவியவகாரம் ஞானிகட்குச்சொல்லப்பட்டிருக்கின்றது; அவர்களனைவருக்கும் ஞானம் சமானமே அதனதுபலமான மோட்சமும், அப்படியேபிராரத்தபேதத்தால் வியவகாரமாத்திரம் பேதமாமென்றறிக. (௧௭)

[இவ்வாறு ஜீவன்முத்தர்க்கு நாநாவியவகாரமுண்டென்றால், அஞ்ஞானிகளினும் அவர்களிடத்து விசேஷம் என்னையோ வெனவரும் ஆசங்கையைப் பற்றி அவர்களிடத்துள்ள விசேஷங்களைக் கூறுகின்றார்.]

சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார கண்முன்
நின்றது புசிப்பார் வெய்யி னிலவாய்வின் விழுது வீழ்ந்து
பொன்றினசவம்வாழ்ந்தாலும் புதுமையா வொன்று மபாரா
கனறுநீ தென்னுர் சாட்சி கவோன சிவன் முத்தர். (௧௮)

(இ-ள்) சென்றது கருதார்-(பிரபஞ்சத்தில் அதீதியாபுத்தியால் செலகாலத்திற்) போனதைப்பற்றி நினையார்கள்—நாளைச்சேர்வது நினையார - வருகாலத்தில் இனிவாராநிற்பதைப்பற்றியும் நினையார்கள்—கண்முன் நின்றது புசிப்பார் - (நிகழ்காலத்தில்) கண்முனனே (பிராரத்தவசத்தால்வந்து) நிற்கின்றபோகங்களைப் புசியாநிற்பார்கள்—வெய்யில் நிலவாய் - சூரியகிரணமான வெய்யிலானது சந்திரகிரணமான நிலவைப்போலச்சீதளமாகி—வின்விழுதுவீழ்ந்து-(ஆலவிருட்சத்திற்போல) ஆகாசத்தில் நின்றும் விழுதுகளிறங்கி—பொன்றினசவம் வாழ்ந்தாலும்-மரித்துப்போன பிரேதம் பின் ஜீவித்தாலும்—புதுமையாவொன்றுமபாரார்-ஆச்சரியமாகவொன்றையுங்காணார்கள்—நன்று தீது என்னுர்-(ஒன்றை இது) நன்றென்றும் (மற்றொன்றை) இது தீதென்றுஞ்சொல்வார்கள் — சாட்சிகவோன-சாட்

சியாய்த்(திரிபுடியின்) கவொன்—சீவன் முத்தர்-சீவன் முத்தாகள் எ-று

"புதுமையாவொன்றும்பாரார்." என்றது "இதுவெனதநோன றியவெல்லாஞ்சிற்சொருபமிவவண்ணம பலசத்தியிலகும" எனறும் அநுபூதிவிவியால்.

"நன்றுதீதெனஞா." எனறது, "செப்புநா மத்தா னுண்மையா லெலலாத் திகழ்வுமா தேவனே யாகி, விப்படி யறிநத ஞானிகைக கொளவா னெத்தையன றெனவெத்தை விடுவான்." எனறுஞ்சுருதி யால எனக்காண்க.

"நடுவானசீவனமுத்தா" என்றதறகு,முன்னைய மூனறுபூமிக்கும பினனையமூனறுபூமிக்கும மதநியமானசத்வாபததியென்னும நானகாமபூமியினையுடைய சீவன் முதநர் என்றுபொருளுரைப்பினும அமையும; அமையுமாறு "முனனிலஙக ளேறியமூ வருமப்பி யாசிக ளா முத்த ரலலா, பினனிலஙகள் வரனவரியான ரிட்டனெனுஞ் சீவன முத்தா பேத மாகுஞ், சொனனகப பூமிவந்த ஞானிகளே பிரமவிததாம" எனனும இரணடாமபடலத்து-கஙச-ம செய்யுளாலறிக.

"சென்றது கருதாா நாளைசசோவது நினையார்கண்முனினறது புசிப்பார்' எனறதறகு, உ-ம. வாசிட்டம. "வாளனுகதிரவி நாளியறும வாறெனன வநது வநது, தானேதோன றியதொழிலேட பநறின றிச செயதுமெனச சனகனெண்ணித், தினைய வருகாலஞ் செல கால மினையளவுஞ் சிநதைசெய்யா, னூனேறு நிகழ்காலத தேர் மைப்பி னகைதலோ லொவ னுற்றான்" எனவரும். மற்றுமவருவன வற்றுற்காண்க. (கூ.ங)

[நீரரயென்னும் கஙு-ம் செய்யுடொடங்கி, சென்றதெனனும், கூஅ-ம் செய்யுள்வரையும், பிரமவித்துக்களினியல்பு கூறி இனி எனையபூவரின் தாரதம்மியமானவியல்பு கூறுகினறார்.]

பின்னைமூ வரினி ரண்டு பேர்களுஞ் சமாதி யோகந்
தன்னையுற் றிருப்பார் தேக சஞ்சார நிமித்தந் தானும்
உன்னுவோன் வரன்வேற் றோரா லுணர்பவன் வரியா னாகும்
அன்னியர் தம்மாற் றன்னை லறியாதோன்வரிட்ட னாமே.(கக)

(இ-ள) பின்னைமூவரில்-(வரன் வரியான் வரிட்டனென்னும்) பின்னையமூவர்களில்—இரண்டுபேர்களும்-(வரன் வரியான்என்னும்)இருவரும—சமாதியோகந் தன்னை-சமாதியோகத்தை— உற்று இருப்பார்-பொருந்தியிருப்பார்கள்—தேக சஞ்சார நிமித்தம-தேகஸ்திதிக்கு(இன்றியமையாத பிட்சைமுதலியவற்றின்)பொருட்டு—தான் ஆய உன்னுவோன்-(பிராரத்தவசத்தால்சமாதியினின்றும்) கேவலம்உததி தனுய்நினையாநிற்பவன்—வரன்-வரனாகும்—வேற்றோரால் - (சமீபத்திலுள்ள)அந்நியரானசீடர்முதலியோரால்— உணர்பவன்-அறியாநிற்பவன்—வரியான் ஆகும்-வரியானும்—அன்னியர் தம்மால் தன்னை-அந்நியராலுந்தன்னாலும்—அறியாதோன் வரிட்டன் ஆம்-அறியாதவனவரிட்டனாகும்.—எ-று.

"இரண்டு பேர்களுஞ் சமாதி யோகந், தனையுற் றிருப்பார்." என்பதனால், வரிட்டன் சமாதியிலதீதனாயிருப்பனெனபது அருத்தாபத்தியினாற்பெறப்படுகின்றது.

"வேற் றோரா லுணர்பவன்வரியானாகும்." என்றதற்கு, உ-ம. வசிட்டம. "அறைந்தபத மைந்தாலுந் தானும் போதத் தழுந்தியவின் பத்தமைவாற் புறனு முன்னு, முறைந்தபதார்த்த தவகனமறைந் தயலோா வன்பா லுணர்வதுவே பதார்த்தநினை வொழித லாகு, நிறைந்தவிவை யாறாலும் பேதம் போக்கி நிலைபெறுதற் சுபாவத்தே நிற்றாேனே,மறைந்தபொருள் வெளியாக்குந் துரியமாகு மாசறுசீ வனினமுத்தா வழியீ தாகும்."எனவரும். மற்றுமவருவனவற்றாற்காண்க.

"அந்நியாதம்மாற்றன்னைலறியாதோன்." என்றதற்கு, உ-ம். டிகவதம். "சாற்றிய குணமூ மாக்கையு மனமுந் தானலவென்பதை யுணாந்தாற், போற்றிய வாக்கை யுடனிருப் பதுவும் போவது மறிகிலா ராகி, யேற்றதம் புயமேற் றுயில்கழி வதுவு மிருப்பதும் வெணணைறை பருகி, மாற்றரு மதத்தி னறிந்திடா தொழுகு மாக்களைப்போலுவர் மாதோ." எனவரும். மற்றும்வருவனவற்றாற்காண்க. (கக)

[இவ்வாறு ஜீவன்முத்தர்களாவாயின் அவர்கட்கு
விதேகமுத்தியும் நானாவாகுமோவெனின்;—
அற்றன்று: அதுசமமாம் ஜீவன்முத்
திச்சுகமேதாரதம்மியமா
மென்று கூறு
கின்றார்.]

அரிதாகு மிவர்க ளிவ்வா றநேகரா னாலு முத்தி
சரியாகும் பாடு பட்ட சமாதிக்குப் பலனே தென்றால்
பெரிதான திருஷ்ட துக்கம் பிரமவித் தநுப விப்பன்
வரியானும் வரனு மற்றை வரிட்டனுஞ் சுகமாய் வாழ்வார்.()

(இ-ள்) அரிது ஆகும் இவர்கள் - (திரிலோகத்திலுங்)கிடைத்த ற்குத்துர்லபமானஇச்சீவன்முத்தர்கள்—இவ்வாறு அநேகர் ஆனாலும்-இந்தப்பிரகாரம் (பிராரத்தவசத்தால்) நானா பேதமான வியவகாரங்களையுடையவராயிருந்தாராயினும்,—முத்தி சரி ஆகும்-(ஞானத்திற்றாரதம்மியமின்மையின், ஞானபலமான) மோட்சசுகம் (அவர்கட்குத்தாரதம்மியமின்றிச) சமமாம்—பாடுபட்ட-(வரன்முதலியோர்வருந்தப்பட்டடைந்திருப்பதான—சமாதிக்கு-(நிர்விகற்ப)சமாதிக்கு—பலன் ஏது என்றால்-பிரயோஜனம்யாதென்று நீஆட்சேபிப்பாயாயின்,—பெரிது ஆன திருஷ்டதுக்கம்- (பிராரத்தவசத்தாலுண்டாகாநின்றும்) பெரிதாகிய பிரத்தியட்சதுக்கத்தை—பிரம வித்து அநுபவிப்பன்-பிரமவித்தநுபவியாநிற்பன்,— வரியானும் வரனும் மற்றை வரிட்டனும்—சுகம் ஆய் வாழ்வார்-(சீவன்முத்திச்)சுகத்தினையேயுடையராய் வாழ்வார்கள்.—எ-று.

யாவர் சீவன்முத்திச்சுகத்தைவிடுத்துத் துச்சமான போகங்களினபிரவிர்த்தியாநிற்பரோ! அவர் விதேகமோட்சத்தைவிடுத்து வைகுண்டாதியுலகங்களினிச்சையுடையராய் அங்கே செல்லாநிற்பரென்று சிலர்சங்கைசெய்யாநிற்பர்; அச்சங்கைகூடாது. என்னை? சீவன்முத்திச்சுகத்தைத் தியாகம்பண்ணுவதும், போகத்திற்பிரவிர்த்திப்பதும ஞானிக்குப்பிராரத்தவசியாற்கூடும். பிராணன்வெளியிற்செல்லாததாகலான் பரலோககமனமும், விதேகமோட்சத்தின்றியாகமுங் ஞானத்தினால் அஞ்ஞானம் நிவிர்த்தியாய்ப் பிராரத்தபோ

கத்தினனந்தரம ஸ்தூல சூக்ஷ்மசரீரகாரணமான அஞ்ஞானம சேதனத்தின்கண் லயமாவதே விதேகமோக்ஷமெனப்படும். அஃதவசியமுண்டாகாநிற்கும். மூலாஞ்ஞானம் சேஷமாயிருக்குமாயின், அல்லது நஷ்டமான அஞ்ஞானம் மீண்டுற்பத்தியாமாயின், விதேகமோக்ஷம இன்றாம்; அம்மூலாஞ்ஞானத்தின் விரோதியான ஞானமுண்டானபின், அஞ்ஞானம் சேஷமாகவிருப்பதில்லை. பிரமாணதத்தால நாசமானவஞ்ஞானம் மீண்டுற்பத்தியாவதுமில்லை; ஆதலால் விதேகமோக்ஷமில்லாமற்போகாது. ஞானிக்கிச்சையானது கேவலபிராரப்தத்தாலுண்டாம். எவ்வளவுசாமக்கிரிகளின்றிப் பிராரப்தபோகங்கூடாதோ! அவ்வளவுசாமக்கிரிகளையும் பிராரத்தமுண்டுபண்ணுகிற்கும். இச்சையின்றிப்போகங்கூடாதாதலால் ஞானிக்கு இச்சையும் பிராரத்தத்தின் பயனும். அந்நியலோகத்தில் அல்லது இந்தலோகத்தில் அந்நியசரீரசம்பந்தம் ஞானிக்குப் பிராரத்தத்தினாலுமுண்டாகாது; ஆகலின், முன்சங்கித்தசங்கைகூடாதென்க. சீவன்முத்திச்சுகத்திற்கு விரோதியான வர்த்தமான சரீரத்தில் அதிகபோகங்களிலிச்சையோ பிட்சைமுதலியவைபோலச் சனகன்முதலியோர்க்குக் கூடும்.

ஈண்டிது இரகசியம்.

ஞானியிடத்துண்டாகும்வாசியப்பிரவிர்த்தி அவனதுசீவன்முத்திக்குவிரோதியல்ல; சீவன்முத்தியின்விலட்சணசுகத்திற்கு விரோதியாம. என்னை? ஆன்மாநித்தியமுத்தமாம் அவித்தையினாற்பந்தம் பிரதீதியாகின்றது; எப்போதுஞானமுண்டாமோ! அப்போதுஅவித்தையினாற்பண்ணப்பட்டபந்தப்பிராந்திநஷ்டமாய்விடும். ஞானமுண்டானதனபின்னே பந்தப்பிராந்தியுண்டாகாது. சரீரசகிதனுக்குப்பந்தப்பிராந்தியினபாவமே சீவன்முத்தியெனப்படும். தேகாதிகளின்பிரவிர்த்தியிலாவது நிவிர்த்தியிலாவது ஞானிக்குப்பந்தப்பிராந்தி ஆன்மாவின்கணுண்டாவதில்லையாகலின், வாசியப்பிரவிர்த்தியினாற் சீவன்முத்திநாசமாகாது; ஆயினும், வாசியப்பிரவிர்த்தியில் சீவன்முத்தனுக்கு விலட்சணசுகமுண்டாகாது: ஏகாக்கிரரூபமான அந்தக்கரணபரிணாமத்திலேயேசுகமுண்டாகாநிற்கும்; அவ்வேகாக்கிரபரிணாமம் வாசியப்பிரவிர்த்தியிலுண்டாகமாட்டாதாகலின், "பெரிதான நிருஷ்டதுக்கமபிரமவித் தநுபவிப்பன்" என்றும், "வரியானும் வரனும் மறையு வரிட்டனுஞ்சுகமாய்வாழ்வார்" என்றுங்கூறினர்.

ஜீவன்முத்தாகளவர்க்கும் ஞானம்சமமாவதால் ஞானபலமானவிதேகமுத்தி சமமாமென்றும், சித்தவிசிராந்திதாரதம்மியத்தால் சுகதாரதம்மியமாமென்றுங்கூறியதாம் (கoo)

[பிரமவித்துக்கள் வியவகாரத்தில் அஞ்ஞானிகட்கொப்பாயிருத்தலின், அவர்கட்குப்பிறவாநெறியுறுமாறேதோ வெனுங்கடாவுக்குவிடையாக அவ்விருவர்க்குமுள்ளதாத் தருத்வதாரதம்மியங்கூறினரர் ]

பிரமஞா னிகளுங் காமப் பேதையா போலே வாழ்ந்தால்
திரமுறு மஞ்ஞா னமபோயச் செனியாத வழியே தென்றால்
பரவுமா காச மொன்றிற பற்றாது மற்றை நாலும
விரவின தோடுங் கூடும விதமிரு வோரு மாவார். (கoக)

(இ-ள்) பிரமஞானிகளும்-பிரமவித்துக்களும்—காமப்பேதையாபோலே வாழ்ந்தால-(ஜநநவேதுவான அவித்தைகாம) கர்மங்களையுடைய அறிவீனரைப்போலவே(பிராரத்ததிற்குத்தக்கபிரபஞ்சவியவகாரங்களையுடையர்களாய்ச்)ஜீவித்தால்—திரம் உறும் அஞ்ஞானமபோய்-(கடத்தற்கரிய)வலிபொருந்திய அவித்தை (காமகர்மங்கள்)நழிந்து—செனியாதவழி-மீண்டுபிறவாதிருத்தற்குக்காரணம்—ஏதுஎன்றால்-யாதெனறுகேட்பாயாகில—பரவும ஆகாசம-(வாயுவாதிபூதபௌதிகங்களனைத்திலும)விரிந்திருக்கும ஆகாசமானது—ஒன்றில்பற்றாது-ஒன்றிலுஞ்சமபந்தியாமல—மற்றைநாலும-ஏனைய(வாயுவாதி)நானகுபூதங்களும—விரவினதோடுமகூடுமவிதம்-தமமோடுகலவாநிற்கும்பதார்த்தங்களோடுஞ் சமபந்தியாநிற்குஞ்செயல்போல—இருவோரும ஆவார-ஞானி அஞ்ஞானிகள் இருவரும் ஆவர்கள்.—எ-று.

ஞானிகளு ஆனமாவின்கண்வியவகாரம் பிரதீதியாகின்றதில்லை சமபூரணமானவியவகாரங்களும் தேகாதிகளின்ஆச்ரிதமாகப் பிரதீதியாகின்றன. ஆன்மாவினகண் வியவகாரசகிதமான தேகாதிகளின்சம்பந்தம் இல்லையென்னும்புத்தியோடேகூடிச்சகலவியவகாரங்களையும்ஞானிசெய்கின்றனன்: இக்காரணத்தால்ஞானியினுடையபிரவிருத்தியும நிவிருத்தியென்றேசொல்லப்பட்டிருக்கின்றது; இதனால்பிரமவித்து பிரபஞ்சவியவகாரங்களுடையனுக அந்நியருக்குத்தோற்றினு

ம், அவன் ஆன்மாவை ஆகாசம்போல் அசங்கமாக அறிந்து பிராரத்த வலியால் பிரபஞ்சவியவகாரங்களைச்செய்தலால் ஜக்கவேறுகான அவித்தைகாமகர்மங்களொழிந்து முத்தியடையாநிற்பனென்றறிக. (கoக)

(க௯.க) [ஈசுரசேவையால் அதிர்ஷ்டபலமாத்திரமுண்டாம்; குருசேவையால் அதிர்ஷ்டபலம்,* திர்ஷ்டபலம்§ இரண்டுமுண்வாகாநிற்கும்; ஆகலின், முமுட்சுக்கள் ஈசுரனைப்பார்க்கிலுங்குருவினிடத்து அதிகமாகப்பக்திசெய்துஜ்ஞாநவிர்த்தியுபாயம்பெறவேண்டுமாகலான் சீவன்முத்தர்களின் மகிமையை இங்கேகூறுகினார்.]

சீவன்முத் தரைச்சே வித்தோர் சிவனய னெடுமா லான
மூவரு மகிழ நோன்பு முழுவதுஞ் செய்து சன்ம
பாவன மாறு ரென்று பழமறை முழங்கு மிப்பால்
மேவருஞ் சீவன் முத்தர் விதேகமுத் தியுநீ கேளாய். (கoஉ)

(இ-ள்) சீவன்முத்தரைச் சேவித்தோர்-ஜீவன்முத்தர்களைச்சேவித்தவர்கள்—சிவன் அயன் நெடுமால் ஆன மூவரும்-அரன், அயன், அரியென்னும்மூவரும்—மகிழ-சந்தோஷிக்க—நோன்பு முழுவது செய்து-(கிருச்சிரசாந்திராயணமுதலிய) தவங்களனைத்தையுஞ்செய்து—சன்மபாவனம் ஆறுர் என்று-ஜந்மபரிசுத்தமானவர்களாமென்று—பழமறை முழங்கும்-அநாதியான வேதங்கள் பிரதிபாதியாநிற்கும்— இப்பால்-இனி — மேவரும் சீவன்முத்தர்-பொருந்துதற்கரியசீவன்முத்தர் (அடையாநிற்கும்) — விதேகமுத்தியும்-விதேககைவல்யத்தையும்—நீ கேளாய்-நீ கேட்பாயாக.—எ-று.

ஜந்மம் மலமாகலின், அதனை நீவிர்த்தியைப் பாவநம் என்று "துவாதுவங்கபே[illegible]செய்து" என்றாற்போல.

"சீவன்முத்தரைச்சேவித்தோர்" என்றதற்கு, உ-ம். வாசிட்டம் "போற்ற வணங்கப் பூசிக்கப் புகழ வருந்திப் போய்க்காண, வாற்ற

* அதிர்ஷ்டபலம்=புண்ணியம்.

§ திர்ஷ்டபலம்=உபதேசம்.

வரியோனெவனவன்வன் பிறவி யறுப்போர்க் கனவரதஞ், சாறு மகததாற தீர்த்தத்தாற் றலத்தாற் றனந் தாற்கிட்டா, ஞற்ற வறிவ ற பிறவியறுத் துயர்க்தோன் பத்தி தரும்பயனே." எனவரும. மற்றுமவருவனவற்றுற்காண்க.

"மூவருமகிழ." என்றதற்கு, உ-ம். வாசிட்டம். "அதுலமா வதேற ரங்கைநீ ருணவா யரிமகி ழருந்தவம் புரிந்தான்." எனவரு-மற்றும வருவனவற்றுற்காண்க.

"பழமறைமுழுதும்." என்றது, சிவஞானபோதம, முத்தி ணடமுதலியசுருதியை. (௧௦௨)

(௧௫௦) [கனமத்திரயவொழிபுகூறல்.]

பஞ்சினை யூழித் தீப்போற பலசன்ம விவித வித்தாம
சஞ்சித மெல்லா ஞானத தழல்சுட்டு வெண்ணீ றாகும
கிஞ்சிதா காமி யந்தான் கிட்டாமல் விட்டுப் போகும
விஞ்சின பிராரத் தத்தின் வினையது பவித்துத் தீரும். (௧௦௩)

(இ-ள்). பஞ்சினை-பருத்திப்பஞ்சுமுதலியவற்றை—ஊழித்தீ-போல-வடவாமுகாக்கினிசாநதால் எப்படியெரித்துநீறுபப்பணணுமோஅதுபோல—பலசன்ம விவித வித்து ஆம-அநேகவிதஜநநங்கட்கு நாநாவிதபீஜங்களாகிய— சஞ்சிதம் எல்லாம் - சஞ்சிதகர்மங்களனைத்தையும — ஞானததழல-ஞானக்கினியானது—சுட்டு வெணணீறு ஆகும-எரித்துப்பஸ்மமாகப்பண்ணும்—ஆகாமியம் தான்-ஆகாமியகமமானது—கிஞ்சித-அற்பமும—கிட்டாமல்-சம்பந்தியாமல—விட்டு பபோகும்-விட்டுப்போம்—விஞ்சின-சேஷமான — பிராரதத்தின வினை-பிராரததகர்மமானது — அநுபவித்துத் தீரும்- அநுபவித்துத் தொலையும.—.எ-று.

சஞ்சிதம், ஆகாமியம், பிராரத்தம்என்று [redacted]மங்கள்மூவகைபா ப அவற்றுள், சென்றஜநநங்களிற்செய்து பலத்தைஆரம்பம்பணணுாவிருக்கிறகர்மம் சஞ்சிதமென்றும், இனிவரப்போகிறகாமம் ஆகாமியமெனறும், சென்றஜநநங்களிற்செய்து வர்த்தமானஜநநததிறகேதுவாயுள்ளகர்மம் பிராரத்தகர்மமென்றுஞ்சொல்லப்படும்; அவைகளில

ரஞ்சிதகாமம ஞானத்தியினல்நாசமாய்விட்டதால் ஆன்மாவினகண ேணை காத்தருதவாதிபிராரத்தியில்லையாதலால், அவனுக்கு ஆகாமியக ரததினசம்பந்தமில்லை, எப்பிராரத்தகர்மம்ஞானியின்சரீரத்தைதஆர ம்பித்ததோ அபபிராரத்தகர்மமே சரீரஸ்திதிக்கேதுவான பிடைசமு தலியவற்றிற்பிரவிர்த்திப்பியாநிற்கும்; பிராரத்தகர்மம் அநுபவியாம ல நாசமாகாது.

(கஉக) சஞ்சிதாகாமியகர்மங்களைப்போல,ஞானிக்குப்பிராரத்தகா மமுபிராதாதலால் போஜனதிப்பிரவிர்த்தியும் ஞானிக்குட பொருத்தமென்று ஓரோவிடததிற்கூறப்படும்.

அதற்கபிப்பிராயம்.—ஞானியின் திருஷ்டியால் ஆன்மாவிலக மம, அதனுடையவன்இவைகளின் சம்பந்தமில்லை இதனால், ஆன்ட விஸ்சகலகர்மங்களின் நிஷேதவபிப்பிராயததால பிராரத்தத்தையுட நிஷேதித்திருக்கின்றது. ஞானதிற்குப்பூருவஞசெய்யப்பட்ட பிரா ரததபோகம ஞானியின்சரீரததிற்குணடாகாதெனனுமபிப்பிராயத தால பிராரததத்தை நிஷேதித்ததல்ல. ஆதலால, “விஞ்சினபிரார ச்சததின வினையநுபவிததுததீரும” எனறார்.

(கஉஉ) இதனுல், ஓர்சங்கையுண்டாகாநின்றது அது எங்கே ஓ கர்மமானது நாநாசரீரங்களையாரமபிக்கிறதாயிருக்குமோ அங்கே அப்படிப்பட்டகாமததினுலுண்டான பிரதமசரீ த்தில் ஒருவனுக்குஞானமுண்டாமேல், அந்தஞானிக்கு அ ந்நியசரீரப்பிராப்தியுமுண்டாதல்வேண்டும.

எனனை? பலத்தையாதொன்றாரமபித்ததோ அது பிராரதத மெனபபடும் அஃதநுபவியாமல் நாசமாகாது. அநேகசரீரததிற் கேதுவான ஓர்கர்மமானது யாதொருபிரதமசரீரத்தையுண்டாக்கிற தோ அதில்ஞானமுண்டாயிற்று; ஞானத்தின்பின்னர் அக்கர்மத்தி னபயனுக அந்நியசரீரம் சேஷமாகவிருக்கின்றதாகலான், ஞானிக குமஅந்நியசரீரப்பிராப்தியுண்டாதல்வேண்டும். பிராரத்தகர்மததி னபயனுக வெவவளவுசரீரமுண்டாகுமோ அவ்வளவுசரீரம் ஞானிக குண்டாகும் பிராரத்தபோகத்திலும் அதிகமாகவுண்டாகாது. ஆத லால், ஞானமும்சபலமாமென்னின்;—அதுகூடாது. என்னை? ஞா னியினுடைய பிராணன் அந்நியலோகத்தில் அல்லது இந்தலோகத

லைத்து அலைவதுலைசிலைப்போதுமலையாகிற்பதே—தன்சுபாவமதாகி-தனதுஇயற்கையாய் —ஒருகண்த்தில்-ஒருக்ஷணநேரத்தில— பலவுலருஆய்உதிக்கும்-நாநாஉலகங்களாய்த்தலியாநிற்கும— இந்த நெஞ்சம-இச்சித்தமானது—வததுவில்-(அசஞ்சலஅதிருட்சுமமான) பிரமத்தில—அசையா-அசையாத—நிவாத தீப நிலை-நிவாததீபத்தின ஸ்திதியை—அடைவது எப்படியோ-அடையாநிற்பதெவ்வாறோ (யானறியேன)—நீ சொல்வீர்-தேவரீரருள்வீராக.—எ-று.

[இது பிரமேயசந்தேகம்.] (க௰)

(கஎ) [சங்கைக்குத்தரங்கூறப்புகுந்து, அதற்கு ஏதுவான விசேஷங்களைக்கூறுகின்றார்.]

கருதுமனே குணமூன்று மூன்றிலொன்று கதித்தெழுந் தாலு மற்றிரண்டுங் கரந்து நிற்கும், தருமமிகுஞ் சத்துவமே லான போது சன்மார்க்க மானதெய்வ சம்பத் துண்டாம், மருவு ரசோ குணமாகி லுலக தேக வாதனையுஞ் சாத்திரவா தனையு மாகும், அருமகனே தமோகுணமே லான போதி லசுர சம்பத் துண்டாகு மறிந்து கொள்ளே. (கக)

(இ-ள) கருதுமனேகுணம் மூன்றுஆம-(விஷயங்களைக்)கருதுகிறதும்மனத்தின்குணங்களமூவகைத்தாம்—மூன்றில் ஒன்று கதித்து எழுந்தால்- அமமூவகைக்குணங்களுள்ளேஓர்குணமானது அதிகரித்தெழுந்ததாயின—மற்றுஇரண்டும கரந்து நிற்கும்-ஏனையஇரண்டுகுணங்களுமஅடங்கிநிற்கும்—தருமம்மிகும்-தருமமமிகுந்துண்டாதற்குக்காரணமான—சத்துவமமேல்ஆனபோது-சத்துவகுணம்மேலிட்டபோது—சன்மார்க்கம்ஆன தெய்வசம்பத்து உண்டாம்-சன்மார்க்கமாகியதெய்வசம்பத்துண்டாகும்—மருவு ரசோகுணம் ஆகில்-கலவாநின்ற இராஜோகுணம்மேலிடுமாயின்—உலக தேகவாதனை ஆம் சாத்திரவாதனையும ஆகும்-உலகவாசனை, தேகவாசனை, சாஸ்திரவாசனைஎன்னுமமூவிதவாசனையுமுண்டாம் —அருமகனே-அருமையானமைந்தா — தமோகுணம் மேல்ஆனபோதில்-தமோகுணம்மேலிட்ட பொழுது—அசுரசம்பத்துஉண்டாகும்-(துன்மார்க்கமான) அசுரசம்பத்துணடாகும்—அறிந்துகொள்-(நீ இங்ஙனம்)தெரிந்துகொள்ளுதி.—எ-று

"தூயசத்துவங்கொள் சங்கற்பம் மிக்கதற்றருமுஞானம்வீ றெ தாய வேந்தாவேக தெனமிக விளங்கும்" என்னும் சுருதியால், "த ருமமிகும் சத்துவம்." என்றும், "சத்துவ ஞானமாந் தமமுஞ் ஞான ம பதிமங் கலப்பதாம்." என்னுங்கருதியால், "மருவுரசோ குண ம" என்றுங் கூறினர்.

சனமார்க்கமெனவே துன்மார்க்கம் வருவித்தாம்.

(கஎசு) சாவயவமாய், அநித்தியமாய் அரக்குச்சுவர்ணம் மெழுகு முதலியவைபோல வெகுவிதபரிணாமயோக்கியத்திரவியம் யாது அதுமனது. நேத்திரமுதலிய இந்திரியங்களால கடபடாதிவிளங்குவபோலச்சாட்சியாகிய பிரத்தியகான்மாவாலே பிரகாசமாக விளங்குவனவான காமக்குரோதாதிவிருத்திகட்கு உபாதானகாரணமாயிருப்பது மனது

கண்ணுக்கு எதிரே வெளிச்சத்திலிருக்கும கடபடாதியும், காது களுக்கு சமீபத்திற்றிடமாயுசசரிக்கும் சத்தமும், யாதொன்று சாவதானமாயில்லாவிடில அறியப்படாமல, யாதொன்று சாவதானமாயிருந்தால அறியப்படுகின்றனவோ! அதுவே அந்வயவியதிரேகங்களால சகலவிஷய ஞானத்திறகும் சாதாரணகாரணமான மனமென்று பிருகதாரணிய உபநிடதத்திற் கூறப்பட்டிருக்கிறது.

அது மனனம்பண்ணுகின்றமையால மனமென்றும், சிந்தனை செய்கின்றமையால் சித்தமென்றுஞ்சொல்லப்படும அச்சித்தமானது முக்குணகாரியங்களானஞானம, பிரவிருத்திமோகமெனும்மூன்றனையும அநுபவித்தலால் திரிகுணாத்மகமாகவிருக்கும்

அந்தத்திரிகுணங்களும் சமுத்திரத்தின்லேபோல கிரக்கரம் பரிணாமமடையும்; அப்பொழுதுஇரண்டுகுணம்அடங்கிஒருகுணம்அதிகரித்திருக்கும். சத்துவகுணமதிகரிக்கும்போது தெய்வசம்பத்தும், ரஜோகுணமதிகரிக்கும்போது உலகவாசனை, தேகவாசனை, சாஸ்திரவாசனையும், தமோகுணமதிகரிக்கும்போது அசுரசம்பத்தும் உண்டாகும்

(கஎஎ) வாசனையாவது, திடபாவனையால் முன்பின்னென்றையுமாலோசியாமலுண்டாகுங்குரோதாதிவிருத்திக்கேதுவானசி

த்ததினுள் குட்டைமாலிலைதயாகியசம்ஸ்காரம்; சுத்தாசுத்தபேதத்தால் அஃதிருவகைத்தாம். [அசுத்தமெனினும், மலினமெனினும் ஒக்கும்.]

(கஎஎ) அவற்றுள் டம்பம், கர்வம், அடங்காதஹங்காரம், காமம், குரோதம், உலோபம், அவிவேகம், நித்திரை, ஆலசியம், பயம், மைதுனம்இவைமுதலிய துர்க்குணங்களாகியவசுரசம்பத்துஒன்று, உலகவாசனை, சாஸ்திரவாசனை, தேகவாசனைமூன்று, ஆகநான்கும்மலினவாசனை, இவற்றுள் தம்பம், தாப்பமமுதலியவசுரசம்பத்து நரகத்திற்கேதுவாதலால மலினமெனப துபிரசித்தம்.

(கஎஅ) சாவசனங்களும், நாமஎவ்வாறிருக்கின்கனமைமிந்தியாமலஸ்துதிசெய்வரோ அவவாறுநடக்கவேண்டுமென்னுந் துரபிமானமஉலகவாசனை; இதுசம்பாதிப்பதருமையாகலின, மலினவாசனையெனப்படும்.

(கஎக) இதறகுதாரணமனனையோவெனின்;—சர்வகுணசம்பனனரானஸ்ரீராமசசந்திராக்கும், பதிவிரதாசிரோமணியாகிய சீதைக்குமகாதிறைகேட்கக்கூடாதவபவாதம் சனங்களாலுண்டாயிருப்பது. [அபவாதம்—நிந்தை.]

தேசபேதததால்ஒருவரையொருவர்நிந்திப்பதுகாணப்படுகிறது எனனை? தடசணதேசததுப்பிராமணரால் உத்தரதேசத்துநிவாசிகளாயவேதமறிநத மாமசபடசணம்பணணுஞ்சனங்கள் நிந்திக்கப்படுகினறன உததரதேசத்துப்பிராமணரால் மாதுலன்கந்நியைமணம்புரியுமதடசணதேசதது நிவாசிகளானபிராமணர்கணிந்திக்கப்படுகின்றனா இபபடியே தத்தங்குலம், கோத்திரம், பக்துமர்க்கம், இஷ்டதேவதைமுதலியவைகளைததுதிப்பதும், அந்நியகுலகோத்திராதிகளைநிந்திப்பதும வித்துவான்முதல்கோபாலர் பரியந்தம் பிரசித்தம்.

(கஅ0) இவ்வுலகவாசனைநசிக்கும்படியான உபாயம் என்னையோவெனின்;—சர்வசனங்கட்கும்சந்தோஷம்வரும்படி நடககத்தக்கவுபாயமியாதொன்றுமில்லை. தத்தம் மனதுக்குத்தோற்றினவாறே சொல்லாநிற்குஞ்சனங்களுடையசொலலால நமக்குஎன்னை; எவவழியாலும்நமக்குஉறுதியப்ப

ஹைதயே நாம் அ[illegible]விவேகமே உலகவாசனை[illegible] உபாயமாம். [illegible]ப்ராயமுடகொண்டே [illegible]சாஸ்திரங்களில் அ[illegible] பிராணியாகியபுருஷனுக்கு [illegible]தையிலும், [illegible]லும்சமயத்திலே ண்டுமென் றடைபிருக்கின்றது.

(கஅக) கர்மசாஸ்திரபாடாபிமானம், அர்த்தாபிமானம், அநுஷ்டானாபிமானம் எனச்சாஸ்திரவாசனைமூவகைத்தாம்.

(கஅஉ) அவற்றுள் சாஸ்திரபாடாபிமானத்திற்குதாரணம் என்னையோவெனின்;—பரத்துவாசர் மூன்றுபுருஷாயுள்வரையுமெருவேதங்களை அத்தியயனம்பண்ணி நாலாம்புருஷாயுளிலேஇந்திரனுலேமீண்டும்வேதபாடத்திற்பிரவிர்த்திக்கப்பட்டபொழுது மிஞ்சியிருந்தவேதாத்தியயனத்தின்பொருட்டு முயற்சிபண்ணினர்; அப்படிப்பட்ட பரத்துவாசருக்கே வேதபாடமுழுதுங்கிடைக்காமற்போனதால் அப்பாடாபிமானம்மலினவாசனையெனப்படும்.

(கஅங) அப்படியே வெருசாஸ்திரார்த்தங்களையறியவேண்டுமெனனுமபிமானமும்பரமபுருஷார்த்ததுக்குச்சாதனமாகாமையின் மலினவாசனையே. இதற்குதாரணம்—ஓர்குடியானவர் வெருவிதசாஸ்திரபுத்தகபாரத்தோடேமஹாதேவனைத்தரிசித்தற்பொருட்டுச்சந்நிதானத்தில்வர அங்கிருந்த மற்றோர்குடி அவரைப்பார்த்துப் பாரஞ்சுமக்குங்கழுதைபோல இவர்புஸ்தகபாரங்களைச்சுமக்கின்றரெனறு இருப்பையிலேபரிகாசம்பண்ண அதுகேட்டு அவ்விருடியானவர் புஸ்தகங்களையெல்லாம் லவணசமுத்திரத்திலெறிந்துவிட்டனர்; அப்போதுகிருபாமூர்த்தியாகிய மஹாதேவர் அவ்விருடியை ஆத்மவித்தையிலே பிரவிர்த்திப்பித்தாரென்று சொல்லப்படுகின்றது.

(கஅச) சாஸ்திரார்த்தத்தின் அநுஷ்டானாபிமானம்மலினவாசனையென்பதற்கு [illegible]ணம், நிதாகரென்பவர் ரிபுவினுலே அடிக்கடி ஆத்மதத்துவமுபதேசிக்கப்பட்டும் கர்மாநுஷ்டானத்தில் சிரத்தைவிடவில்லையென்பதும், நாகுரர்க

மாநுஷ்டானத்தின்பொருட்டுப் பூமியிலோரிடத்தும பரிசுத்தவிடத்தையடைந்திலரென்பதுமாம. சாஸ்திரவாசனை பிரமாப்பியாசத்திற்கு விரோதியாவதாலும, மேனமேற் சன்மத்திற்கேதுவாதலாலும், சுவேதகேதுவுக்குப்போலக்கர்வத்திற்கேதுவாதலாலும் மலினவாசனையென்ப.

(கஅரு) தேகாத்மப்பிராந்தியானும், அதற்குக்குணஞ்சம்பாதிக்கவேணடுமென்னும் பிராந்தியானும், தோஷத்தைப்போக்கவேணடுமென்னும் பிராந்தியானும் தேகவாசனை மூவகைத்தாம அவற்றுள் தேகாதமப்பிராந்திரூபமான தேகவாசனை, சாாவாகாமுதலியோரிடத்துப பிரசித்தம்.

(கஅசு) லௌகிக, சாஸ்திரீயபேதததால் தேகத்திற்குக்குணசமபாதன இருவகைத்தாம. அவற்றுள் நலலஇராகதமோடுகூடக்கானம பணணுவதறகாக விளக்கெண்ணெய், மிளகு, நெயமுதலியவறறைபபுசிபபதும், தேகத்தைததொடுமபோது மெதமெதென விருததற்காகப் புஷ்டியைப்பண்ணத்தக்க ஔஷதஙகளைப்புசிபபதும, சரீரமழகாயிருத்தற்பொருட்டு அப்பியஙகஸநாநமுதலியவைபண்ணி நல்ல வஸ்திராபரணஙகளைததரிப்பதும, சரீரம் சுகந்தமாயிருத்தற்பொருட்டு புஷ்பமாலையணிந்துகொண்டு சந்தனமுதலியவைகளைப் பூசிக்கொளவதும லௌகிககுணசம்பாதனம். கங்கைமுதலியபுணணியதீாததஙகளில ஸநாநம் பண்ணுவதும, சாலிக்கிராமாதிதீாததததைபபுரோட்சிததுக்கொள்வதும சாஸ்திரீயகுணசமபாதனம்.

(கஅஎ) தேகத்தினமேருஷததைப்போக்குவதும் லௌகிக, சாஸ்திரீயபேதததால இருவகைத்தாம். அவற்றில்வைத்தியசாஸதிரத்திற்சொலலப்பட்டஔஷதங்களான்முகப்பிரச்சாளநுதிலௌகிகம். சௌச, ஆசமநாதிசாஸ்திரீயம.

(கஅஅ) இமமூவகைததேகவாசனைகளும் மலினவாசனைகள். எனனை? தேகமேஆத்மாவென்பது அப்பிரமாணமாகலானும், சகலதுக்கஹேதுவாகலானும் மலினவாசனையாம; இதைப்பெரும்பாலும் பூர்வாசிரியர்கூறியிருத்தலின், யாம விசேஷமாகவுரைத்திலேம்.

குணசம்பாதனமும் வெகுமுயற்சிபண்ணியக்காலும், அநேகம பேருக்கு முழுதுஞ்சித்திக்கக்காணோம். என்னை? இராகத்தோடுகோ ணம பண்ணுவதில் பிரசித்தராயிருக்கிற பாடகரும், வேதாந்தியயனம பண்ணுவிக்கிறவரும் மேற்சொன்னமுயற்சிகளைச்செய்தும் கல்கனை டதொனியையடைகிலர்; நியமமாகச்சரீரபுஷ்டியுங் காணப்படவில்லை. அழகும, சுகந்தமும் வஸ்திராபரணங்கட்கும், மாலைமுதலியவைகட்குமேயல்லது தேகத்திற்குளவாதலில்லை; இச்சாஸ்திரீயகுணசமபாதனமும் பிரபலமாகிய ஏனையசாஸ்திரங்களால் வாதிக்கப்படுகிறது; அவையாவையோவெனின்;—யாவனொருவன வாதம், பித்தம், சிலேட்டுமமென்னும் மூவகைத்தாதுக்களோடுகூடிய பிரேதரூபமான தேகத்தில் யானெனும்புத்தியும், புத்திர, மித்திர, களத்திராதிகளில எனதெனும்மமதையும், பாஷாணம், மிருத்து, தாரு, தாம்பிரமுதலியவற்றினவிகாரமான மூர்த்திகளிலமாத்திரம் தெய்வபுத்தியும, கங்கையாதியஜலமாத்திரத்தில தீர்த்தபுத்தியும உடையனோ அவன் தத்துவவித்துக்களாகிய பெரியோர்சபையில கர்த்தபமென்றுசொல்லப்படுவனென்னும் பாகவதமும தேகம் அநித்தியம்மலினம, ஆன்மா அத்தியந்தம் நிர்மலம், ஆதலான தேகத்திற்கு எவ்வளவு சௌசம்பண்ணினும் அது சுத்தியுறாது. ஆன்மா நித்தியசுத்தனாதலால் சௌசம்பிரசித்தியே அவனுக்கில்லையெனும சூதசம்மிதையும பிரபலசாஸ்திரங்களாம.

ஔஷதம்புசித்தல்முதலியவற்றால் சாத்தியமான உரோகம் பிணி டொடிக்கடியுளதாதலின, லௌகீகசரீரதோஷநீக்கங்கூடாது. மேற்சொன்னபாகவதவசனம், சூதசம்மிதைவசனங்களால் சாஸ்திரீயமான சரீரதோஷநீக்கமுங்கூடாது; ஆகலால தேகவாசனை மலினவாசனையே.

(௧௮௬) சுத்தவாசனைதான்யாதோவெனின்;—பிரத்தியகபின்னபிரமத்தைத்திடாபரோட்சமாக வறிந்தவனிடத்திருப்பதாயும், வறுத்தவித்தைப்போலத்தேகஞ்சீவித்தற்பொருட்டு உபயோகிக்கிறதாயும், டம்பம், தர்ப்பமுதலியவிகாரசம்பத்தையுண்டுபண்ணாததாயும், ஜன்மாந்தரத்திற்கேதுவாகாததாயும உள்ளவாசனை சுத்தவாசனையென்றறிக. (௧௬)

["மனமணிபோதச்செய்தின் மறைந்தொருவருக்குத்தோன்று; மனமுதலிலேயன்றே மறைவினுற்சித்திகொட்டும்." என்றதிதற்குமுன் ஆசாரியன் அருளிச்செய்த படியே சத்துவசொரூபமான மனதில் ஆகந்துகமான இராஜஸதாமதங்கள் அடைக்கிருத்தலின், சன்மார்க்கத்தின் நிரந்தராநுசந்தானத்தால் அவைநீங்கி, அது சமாதியையடையுமென்று கடு-ம் செ-வில் செய்த சங்கைக்கு உத்தரங்கூறல்.]

மனதுசத் துவசொரூப மற்றி ரண்டும் வந்துகலந் தனவவற்றை மாற்றி னுற்போம், தனதுசன்மார்க் கத்தைவிடா திருந்தபோது தமோகுணமும் ரசோகுணமுஞ் சமிக்கும்பின்னேக, கனபரிணு மஞ்சலனம போம்போ னக்காற் களங்கமற்று நின்றவா காசமபோ லும், நினதுளமப் படியாமப் பிரமத்தொன் ருய் நிருவிகற்ப சமாதியிலே நிற்குந் தானே. (௧எ)

(இ-ள்) மனது சத்துவ சொரூபம்-மனதிற்குச்சத்துவமே (உபாதானமாகலின அதறகு அதுவே) சொரூபமாம்—மற்று இரணடும வந்து கலந்தன-ஏனையவிரண்டுஞ் (சகாயமாகஇடையே) வந்துபொருந்தின—அவற்றை மாற்றினுல் போம்-அவைகளைநீக்கினுல் நீஙகுட—[நீக்குமுபாயங்கூறல்.] தனது சனமார்க்கத்தை-மனத்தினியற்கையுருவமானசனமார்கக(மாகியதெய்வசமப)த்தை—விடாதுஇருந்தபோது-விடாது(அதுவுடித்து)நிற்கும்போது—தமோகுணமும்ரசோகுணமும சமிக்கும்-(விஷயபரிணுமவேதுவான)தமோகுணமும் சலனவேதுவான) ரசோகுணமும்நசிக்கும்— பின்னே—கனபரிணுமம்சலனம போம்-கனமாகிய(விடய)பரிணுமமும்(ஒன்றினின்றுென்றிற் ருவாகிறகுஞ்)சலனமும்(அதன்கணிணப்) போம்—போனக்கால் - (அவை) போகவே—நினதுஉளம்-உன்மனமானது—களங்கம்அற்றுநின்ற-(மேகபடலமுதலிய)களங்கமொழிந்துநின்ற—ஆகாசம் போலும்-(சரற்காலவானம்போலச்(சொச்சமாய்அசஞ்சலஅநிருட்டமுமாம்; ஆகவே,)—அப்படியும் அப்பிரமத்து-அப்படி(அசஞ்சலஅநிருட்சம)மாகியஅநதபிரமத்தில்—ஒன்றுஆய்-ஏகரசமாய்—நிருவிகற்ப சமாதியில்—தானேநிற்கும்.—எ-று. ஏ-அசை.

இதனகருத்து.—மனதுக்குச்சத்துவகுணமே முக்கிய உபாதானகாரணம். ரஜோகுண தமோகுணங்கள் சகாயமாம். ஆகவினா, சன்மார்க்கமான்தெய்வசம்பத்தால் ரஜசு தமசெனும் இரண்டு குணங்களையும்போக்கும்போது சத்துவகுணமே அந்தக்கரணத்தினை சொரூபமாகச்சேவிக்கும்; அச்சத்துவமுஞ் சஞ்சலத்திற்கேதுவான ரஜோகுணமின்மையின் ஏகாக்கிரமாயும், பிராந்தியினுற் கற்பிக்கப்பட்டஅநானமரூபமான ஸ்தூலபதார்த்தாகாரத்திற்கேதுவான தமோகுணமின்மையின் சூட்சுமமாயும் ஆன்மதரிசனத்திற்குயோக்கியமாகுமென்பது. (கள)

[மனது நிருவிகற்பசமாதியில் பிரமத்தோடு ஏகமாய் நிற்றற்கு உபமானங்கூறிச் சந்தேகம ஒழிதியென உத்தரதலைதமுடித்தல் ]

களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர் களங்கமற்ற கண்ணாடி காட்டும் போது, விளங்கியதன் மயமாகி யபேத மாகி விகற்பமின்றி நிருவிகற்ப மானாற் போல, அளந்தறியபடாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்தா யானந்த மாம்பிரமத் தைகமான, உளந்தெளிந்த படியிருந்தா லுலக மெங்கே யுலைவெங்கே யென்றுசங்கை யொழிந்திடாயே. (கஅ)

(இ-ள்) களங்கம் அற்ற கண்ணாடி தனமுன்-நிர்மலமான (ஓர்) தர்ப்பணத்தினெதிரே — வேறு ஓர் களங்கம் அற்ற கண்ணாடிகாட்டும்போது - நிர்மலமானமற்றோர் தர்ப்பணத்தைககாணபிக்கும்போது —விளங்கிய தன்மயம் ஆகி-நிர்மலமாகியவக்கண்ணாடிமயமாய்—அபேதம் ஆகி-அபேதமாய—விகற்பம் இன்றி-விகற்பமில்லாமல்—நிருவிகற்பம் ஆனாற்போல-நிர்விகற்பமாயினாற்போல—அளந்து அறியபடா விபு ஆய்- இத்துணையளவினதென்றளவிட்டறியப்படாதவியாபகமாய—சத்து ஆய் சித்து ஆய் ஆனந்தம் ஆம் பிரமத்து-சத்தாயும், சித்தாயும், ஆனந்தமாயும் உள்ளபிரமத்தின்கண்—ஐக்கியம் ஆன உள்ளம் -அந்தக்கரணம் ஆன அந்தக்கரணம்—தெளிந்தபடி இருந்தால்-(தான்) தெளிந்தவண்ணமே நின்றால்—உலகம் எங்கே-(அதற்கு) உலகரூபம் தோன்றுவது—உலைவு எங்கே-சலனமுண்டாதலெது —என்று சங்கை ஒழிந்திடாய்-என இவ்வாறுவிசாரித்து (இதுவிஷயமாயெழுந்துள்ள) சந்தேகத்தையொழித்திடுதி.—எ-று.

“உளந்தெளிந்தபடியிருந்தால்.” என்றது, ஆரூடத்தன்மையை; ஆரூடர்க்குப் பிரபஞ்சத்தின் பாரமார்த்திகத்தன்மை யபாவமாய விடுதலின், அதன்பரிணாமமும், அதைப்பற்றியுளதாகுஞ் சலனமும் அவர்கண்மனத்தின்கண் இல்லையாம்; ஆகலின், “உளந்தெளிந்த படியிருந்தா லுலக மெங்கே புலையெங்கே யென்று சங்கை யொழிந்திடாய்.” என்றார். இப்படியே, “தத்துவஞானிகாணினுஞ் சகத்தையுங்கண்டிலன், நற்றவமேகண்டான்.” என்று பிரமகீதையினும், “சாதலின்ஞானியத் தைக்கண்ணினுற்றெரியக்காணான்.” என்று பகவற்கீதையினுங் கூறியிருப்பதுகாண்க. (க௯)

(கக0) [மனமபோகசாதனமாகலானும், மனமிறந்தோர் முத்தராகலானும் அவர்க்கு அஃதின்றிப்போகங்கூடுமோ றெங்ஙனேயென வினாதல்.]

ஏகமாய் மனமிறந்தாற் சீவன் முத்த ரிருக்குமட்டும் பிரா
ரத்த மெதினு லுண்பார், போகமா னதுபுசித்துத் தொலைப
ப தன்றோ புசிப்பதென்றால் மனந்தானும் போன தன்றே,
சோகமா மனமிறந்தாற் போக மில்லை தோன்றுமெனின் மு
த்தரென்று சொலக்கூடாதே, யோகமா மிதுதெளியக் குரு
வே நன்று மொழிந்தருளவாய் தெளிந்ததன்றோ முத்தி நா
னே. (கக)

(இ-ள்) ஏகம் ஆய் மனம் இறந்தால்-(கன்னீரிலுப்புப்போலப் பிரமத்தின்கண்) ஒன்றாய்மனமானது நாசமாயின்,—சீவன்முத்தர்—சீவன் முத்தர்கள்—இருக்கும் மட்டும்-(தேகம்)உள்ளளவும்—பிராரத்தம் எதினால் உண்பார்-பிராரத்தபோகம எச்சாதனங்கொண்டனுபவிப்பார்—போகம் ஆனது புசித்துத் தொலைப்பது அன்றோ-பிராரத்தபோகம் அனுபவித்துத்தொலைக்கவேண்டுவதோ) அல்லவோ—புசிப்பது என்றால்-அனுபவித்துத்தொலைக்கவேண்டுவதானென்னின;—மனந்தானும் போனது அன்றே-(போகசாதனமான) மனமும் இறந்ததல்லவே—சோகம் ஆம் மனம் இறந்தால்-துன்ப(மய)மானமனமானது நாசமானால்—போகம் இல்லை-(சுழுத்தியிற்போலப்) பிராரத்த போகாநுபவமில்லை—தோன்றும் எனின்-(அஞ்ஞானிகட்குப்போல

அவதாரம்-பிரமாண்மவலிக்கியகுப்மானமிச்சயம். வினையபதப் பொருள்வெளி.

(கசுக) அபிப்பிராயம்.—திடஞானம், அதிடஞானமென ஞான மிருவகைத்தாம்; அவற்றுள் வைராக்கிய, நியாஜப்பியா சவலியாற் சுவாநினைசித்தமுடையோனுக்குத் தத்துவஞா னமுண்டாகில் அவன்புத்தி சோரநாயகனிடத்தன்புள்ள நாரியின்புத்தி தனதுவீட்டுக்காரியஞ்செய்யும்போதும அச்சோரநாயகனையேநியானியா நிற்பதுபோல நிரந்தரந்தத் துவத்தையேநியானித்துக்கொண்டிருக்கும்; அத்தன்மை யானஞானந்திடஞானமெனப்படும். வைராக்கியம, நி யாஜப்பியாசமின்மையோனுக்கு ஏதேனுமொருபுண்ணிய விசேஷத்தால் தத்துவஞானமுண்டாயினும் அவன் புத்தி சோரநாரியின் புத்தி வீட்டுக்காரியத்தை மறந்துவிடுவது போல உடனே தத்துவத்தைமறந்துவிடும்; அத்தன்மை யான ஞானம் அதிடஞானமெனப்படும்.

திடஞானமுடையோர் திடப்பிரஞ்ஞர்; இத்திடப்பிரஞ்ஞர் கா லபேதத்தால் சமாகிதர், உத்திதரென இருவகையராயிருப்பர்: அவ கனுடையலட்சணம கீதையில் பகவானாற்சொல்லப்பட்டிருக்கிறது. இங்கேதிடப்பிரஞ்ஞரைச் சொன்னதால் அவருக்கு வியவகாரம் வி ரோதமாகாதென்பது.

இதற்கு, உ-ம். வாசிட்டம். “காயத்தில் வேறாகத் தன்னைக்கண் டோன் காயமீ ரினுமறியான் கன்னற கட்டி, நீயிற்கா யினுமரிக்க போது மின்பங் கிராத வாறுபோற் றெளிக் தஞானி, மாயதனை மோகத்தாற் பேதமாகான் மணந்தபர புருடன்மேன் மனஞ்சே மங்கை, நேயத்தான் மனைத்தொழில்கள் செய்யுமாபோ னிகழ்தொ ழிற்செய் யினும்பரத்தி னிலைமை நீங்கான்.” எ-ம், “வெறிதி ருக்கி னுந் தொழிலினை மேவினும் விடாமல்,வதிந் தென்றுதான் சமாதிவீட் டகன்றவ னுகுஞ், செறியு ஞானஞ்சேர் மனத்தினர் சகத்தொழி ல் செயினும், பிறினி றத்தவ திட்டராய்ச் சமாதித்பெயரார்.” எ-ம் வரும். மற்றும் வருவனவற்றுங் காண்க. (உஉ)

[இனித்திடஞானத்தின்பலத்தை அறிவிக்கும் கருத் தினராய்ச் சீடன்வினவும்வினாவைத் தாமேயெடுத்துக்கா ட்டி அதற்கு விடைகூறத்தொடங்குகின்றார்.]

தேகத்த னலனாகி யகர்த்த னாகிச் சீவனின்றிப் பிரமமாய்த் தெளிந்த முத்தன், போகத்தை புசிப்பனென்றாற் கருத்தா வாமே பூரணமா மகர்த்தனுக்குப் போக முண்டோ, சோகத்தை யறுத்தருளுங் குருவே யிந்தத் துன்னறுக்க வேண்டுமென்று சொன்னா யாகில், மாகர்த்தன் மாபோகி மாத்தி யாகி வகைமூன்றா யவரிருக்கு மகிமை கேளாய். (௨௧)

(இ-ள்) தேகத்தன் அலன் ஆகி-ஸ்தூலசூட்சமசங்காதங்களி லிருக்கும் மநுஷ்யத்வ பிராமணத்வாதிகளிற் றதான்மியமற்றவனாய்—அகர்த்தன் ஆகி-அகர்த்தனாய்—சீவன் இன்றி- (அச்சங்காதங்களை விசேஷணமாகவுடைய) ஜீவத்வமிறந்து—பிரமம் ஆய்-பரிபூரணப்பிரமமாய்—தெளிந்த முத்தன்-தன்னையறிந்திருக்கும் சீவன்முத்தன—போகத்தை உண்பன் என்றால்-போகத்தைப்புசிப்பனென்றுசொலவில்—கருத்தா ஆமே-கரும கருத்தாவாகியஸ்தூலசூட்சமசங்காதங்களும், சங்காதவிசிஷ்டனும் தானாவனே—பூரணம் ஆம் அகர்த்தனுக்கு-பரிபூரணப்பிரமமேதானாயிருக்கும் அகர்த்தனாகிய சீவன்முத்தனுக்கு—போகம் உண்டோ-பிராரத்தபோகமேது—சோகத்தை அறுத்தருளும் குருவே- துன்பத்தையொழித்தருளாநிற்குமாசிரியரே—இந்தத் துன் அறுக்க வேண்டும் என்று சொன்னாய் ஆகில்-இச்சந்தேகம் நிவிர்த்திப்பித்தருளவேண்டுமென்று நீசொல்லில்—மாகர்த்தன மாபோகிமாத்தியாகி (என)—மூன்றுவகை ஆய்-மூவகையாய—அவர் இருக்கும்-அச்சீவன்முத்தரிருக்கும—மகிமை கேளாய்-பெருமையைக்கேட்பாய்.—எ-று.

நிரகத்தன் என்பதுபோலத் "தேகத்தன்." என்றார்.

தேகத்தனலனாகி,என்பதற்கியற்றிய வுரையின் கருத்தை,கக-ம பிரசங்கத்தில் தருமாத்தியாசத்திற்குதாரணங்கூறியிருப்புழிகாண்க.

வினாவின் கருத்து.— யாவனிடத்துத் துக்கமுண்டோ அவன் துக்கநிவிர்த்தி சுகப்பிராப்திகளினிமித்தங் கிரியைசெய்யாநிற்பன்; அவனே கர்த்தாவாம்; எவன்கர்த்தாவோ அவன்போகத்தையு ண்ணும்போக்தாவுமாம், புண்ணியபாவங்களின்றூபமானகர்மத்திற்குக்கர்த்தாவும், கர்மபலமான சுகதுக்கங்களைப்புசிக்கும்போக்தாவும் ஸ்தூலசூட்சமசங்காதங்களேயாம், அவற்றிற்குச்சாட்சியானபரிபூரணப்பிரமசொரூபர் தானான சீவன்முத்தனுக்கு எவ்வாறு கர்த்தத்துவ போக்தத்துவங்கூடுமென்பதாம், (௨௧)

(கக௪) [மஹாகர்த்தன் இலக்கணங்கூறுகின்றார்.]

செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்குங் காந்தச் சிலைமலை
முன் னிரும்புகள்சேட் டிக்கு மாபோல், செய்கையுஞ்செய
விக்கையுமற் றிருக்கு மென்முன் செடமான வுலகமெலாஞ்
சேட்டைசெய்யும், மெய்கலந்த விந்திரிய விகார ரூப விவகா
ர விருத்திக்கும் விருத்தி தானு, மெய்கலந்த சமாதிக்குஞ்
சாட்சி யேநான வெயிலைபோலென் றுணைத்தவனே விபுமா க
ர்த்தன். (உ௪)

(இ-ள்) செய்கையும்- (ஒன்றைச்) செய்யுந்தன்மையும்—செய
விக்கையும்-செயவிக்குந்தன்மையும—அற்று-(தான்) உடைத்தாகாய
ல—இருக்கும்-(ஏகமாய்ப்பெரிதாய் அசஞ்சலமா) யிருக்கின்ற—காந
தச சிலை மலைமுன-காந்தக்கல்லாகியமலையினமுன்னே—இரும்புகள-
(அநேகமாயப்பரிச சின்னங்களாயத் தமக்கெனச்சேட்டையற்றுள்
ள ஊசிமுதலிய) இருமபுகள்—சேட்டிக்குமாபோல்-சலியாநிற்குந் த
ன்மைபோல—செய்கையும்-(ஒன்றைச்) செய்யுந்தன்மையும்—செய்
விக்கையும-செய்விக்குந் தன்மையும — அற்று இருக்கும்-இன்றி(ஏ
கமாயப்பூரணமாய்ச்சித்தா)யிருக்கும—என் முன்-எனது சந்நிதியில்
—செடம ஆன உலகம் எலாம-(அநேகமாய்ப் பரிச்சின்னங்களாய்ச)
சடமாயுள்ள பிரபஞ்சங்களெலலாம்—சேட்டை செய்யும்- (தத்தம)
வியவகாரங்களைச்செயயாநிற்கும—வெயில் போல்- (உலக வியவகார
த்திற்கும, வியவகாரத்தின அபாவத்திறகும சாட்சிமாத்திரமாயிருக்
கும) சூரியன்போல—மெய்கலந்த-சரீரத்தினகட் பொருந்திய—இந்
திரிய விகாரரூப-(நேத்திராதி)இந்திரியங்களால் விகார*ரூபமான—
விவகார விருத்திக்கும்- (காண்டன்முதலிய) வியவகாரங்களையுடைய
(மனோ)விருத்திக்கும—விருத்தி-மனோவிருத்தி—தானு-தன்மயமாக
—மெய் கலந்த-பிரமத்தின்கட்பொருந்திய—சமாதிக்கும்— நான் சா
ட்சியே என்று-யான சாட்சிமாத்திரமாகவுளனென்று — உறைத்த
வனே-அழுந்திய அநுபவமுடையவனே—விபு மாகர்த்தன் வியாபக
மான மஹாகர்த்தனும்.—எ-று.

---

*விகாரம்=வேறுபாடு.

வெயில் என்றது இனையாகுபெயர்.

'கூட்டு பொறியின் ஜொழிலெல்லாங் கொண்டு மண்ணுசெய் கு வதன்றே." எ-ம், "தனையுணர்ந் தோர்கொள் ளுற்ற தொழிலெல் லா மனத்த தனறோ." எ-ம், வாசிட்டத்திற்கூறியபடியே இங்கும், "மெய்கலந்த விந்திரிய விகார ரூப விவகார விருத்திக்கும்." என் றார்.

"செய்கை" சயங்கருத்தருத்வம. "செய்விக்கை." அந்நியப் பிரேரணவேது கருத்தருத்வம. இவவிரண்டுமிலலையென்பது அ காததாதமநிட நிச்சயத்தாலெனக. (உ௪)

[மஹாபோகி மஹாத்தியாகிகளின இலக்கணங்கூறுகின்றார்.]

அறுசுவையின் குணங்குற்ற மசுதத்ஞ் சுத்த மபத்தியம்ப த் தியமெனவூ ளுய்ந்தி டாமல, பொறுமையுடன் இட்டின தைக் காட்டுத் தீப்போற் போகங்கள புசிப்பவன்மா போகி யாகும், சிறிதுபெரி துகடனதந் நியங்க ளன்மை தீமைகள சே ரினும்படிகச் செயல்போற சிததம, வெறிதிருக்கு மவனே மாத் தியாகி யாவன் விரதமிம்மூன் றுடையவரே வீடு ளோ ரே. (உ௫)

(இ-ள்) அறுசுவையின் வன-சுரேசஙகளையுடையஉணவுக்கு ள்—குணம் குற்றம்(என) - (இது)குணமென்றும் (இது)குற்றமென றும—அசுத்தம் சுத்தம்(என) - (இது) அசுததமென றும் (இது) சுதத மென்றும்—அபத்தியம் பத்தியம் என-(இது)அபததியமென்றும்(இ து)பத்தியமென்றும்—ஆய்ந்திடாமல்-பகுத்துப்பாராமல் — பொறு மைஉடன்-சகிப்போடுகூட—இட்டினதைக் காட்டுத தீப்போல-(த னக்கு)நெருங்கியசகலத்தையுங் காட்டக்கினி புசிப்பதுபோல—பே கங்கள் புசிப்பவன்-(உலகவாதி) போகங்களைப்புசியாநிற்பவன் — ம் ..கி ஆகும்-மஹாபோகியாம்—சிறிது பெரிதுகள்-சிறிதும் பெரிது மானபொருள்கள்—தன து அந்நியங்கள்-தன்னுடையதும் பிறருடை யதுமானபொருள்கள்—நன்மை தீமைகள் - புண்ணிய பாவஙகள்— சே.ரினும்-தன்னைவந்தடையினும்—படிகச் செயல்போல்-(அடுத்த வ ர்ணங்களைப்பற்றாத) படிகத்தின்றன்மைபோல—சித்தம் — வெறிது

இருக்கும் அவனே-(மனம்) பற்றற்றிருக்குமவனே—மாத்திரியாகிஆவன்-மஹாத்தியாகியெனப்படுவன்—இம்மூன்று விரதம் உடையவரே. (மஹாகர்த்தன் மஹாபோகி மஹாத்தியாகியென்னும்) இம்மூவகைவிரதமும்முடையோரே—வீடு உளோர்-மோட்சத்தையுடையராவர்.—எ-று.

குணம்" ரசமுண்டையஉக்கிருஷ்டாகாரிகள். "குற்றம்" ரசமில்லாத நிகிருஷ்டாகாரிகள், அல்லது, சாத்துவிகாகாரம், தாமதாகாரமெனினுமொக்கும். "அசுத்தம்" பழையபழஞ்சோறு, உச்சிஷ்டம், தேவாராதனத்துக்குஅருகமல்லாதது முதலியன. "சுத்தம்" சீராக அப்போதுசமைக்கப்பட்டுக்கண்ணுக்குரம்மியமாயும், நாவுக்கு ருசியாயுமுள்ள அன்னாதிகள். "அபத்தியம்" வைத்தியசாஸ்திரத்தில நிஷேதித்தவை. "பத்தியம்" அதில் விதித்தவையென்க. இங்கே "பொறுமை" என்றது விகாரம் அடையாமையை காட்டுகிறதியானது இது சந்தனமரம, இஃதெட்டிமரம், இது பச்சைமரம, இது பட்டமரம எனப்பகுக்காமலும, கிட்டினதைவிட்டு அப்புறந்தாவாமலும், தான் அவைகளினமயமாகாமலும் தன்மயமாக அவைகளைதகிப்பதுபோலத தத்துவஞானியும் உசிதமான உணவுகளை நிரதிசயாநந்த பூரணஅத்வைதாத்மபுத்தியால், அல்லது மித்தியாபுத்தியால பகுத்துப்பாராமலும், கிடைத்ததைவிட்டுக்கிடையாததை இச்சியாமலும், தானஅவைகளின்மயமாகாமலும் தன்மயமாகவே புசிப்பன்: இங்ஙனம் புசிப்பினும் நித்தியதிருப்தாத்மதரிசனத்தாற் புசித்திலன. "ஊணுய்ந்திடாமல்." என்றதால், நன்றெனப்புசியாநிற்பனெனபது கொள்ளக்கிடந்தது. இதற்கு மூன்னூலான வாசிட்டத்தில, "அகலரசமிடிகளுநன்றெனப்புசிப்போன்." என்றுகூறியிருப்பதால் "உணவாதி" எனறும். சுவர்ணத்தினாற்செய்யப்பட்டவியாக்கிரம இரம்மியமான சுவர்ணதிருஷ்டியால் இரம்மியமாவதுபோலப் பிரமதிருஷ்டியால் சகலபோகங்களும் சீவன்முத்தனுக்கு இரம்மியமாகத்தோற்றுவதால், "ஆய்ந்திடாமல்." என்றார். "வெறுதிருக்கும்." என்றது, மித்தியாபுத்தியாலென்க. "விரதம்மூன்றுடையவரே." என்னுந்தேற்றேகாரத்தால் தவம், மகம், தீர்த்தம், சேவை, அருச்சனை, தானமாதிய புறக்கருமங்களையுடைய மற்றையர் நிரதிசயாநந்த மோட்சம் அடையாரென்பது பெறப்படுகின்றது. இம்மூன்றையும விஸ்தாரமாக அறியவேண்டின் வாசிட்டத்தில் விரதத்ரயகதையில, பரமசிவனால் பிருங்கிசற்கருளிச்செய்யப்பட்டிருப்பதால் அதிற்கா

ண்க. இம்மூவகைவிரதங்கூறினவழியால், "போகத்தை யுண்பனெ னரூற்கருத்தா வாமெ பூரணமா மனத்தனுக்குப் போகம் உண்டோ." என்னும்சங்கைக்குப் பிராரத்தவசத்தால் போகத்தையுண்பவனும், உசிதமானகருமத்தைச்செய்பவனும் ஞானிதோற்றினும் அந்தரங்கமதிருஷ்டியால் அவை அவனுக்கு இன்றென் றுத்தரங்கூறினதாம்.

(௪௬௫) [ஞானபலமானநிருதகிருத்தியத்தன்மையைப்பற்றி யுளதாகும்பிரமேயசந்தேகத்தை நிவிர்த்திசெய்து கோடற் பொருட்டுச்சீடன்வினுதல்.]

[வேறு.]

மெய்யுங் கொண்டுபி ராரத் தநதரு விதிவழி நின்றிடவும்
உய்யுங் கர்மிக ளுக்கது குணமா வுறுதொழில் செய்திடவும்
செய்யுஞ் செய்கைமு டித்தவ னென்றுரை செப்புவ தெப்படி
யோ, வையுந் துன்பம கற்றிய குருவே நலமா வருள்வீரே.()

(இ-ள்) மெய்யும் கொண்டு-("சாலமிகு தொழிற்பறவைக் கிடமாங் கூடு" என்னும்) சரீரமுந்தரித்துக்கொண்டு—பிராரத்தந் தரு பிராரத்தத்தால்வரப்பட்ட—விதிவழி-நியதியின்நெறியில்—நின்றிடவும்-நிற்கவும்—உய்யும் கர்மிகளுக்கு-(உறுதியதிந்து தாம்) பிழைக்கவேணுமென்னும் கருமகாண்டிகட்கு—அது குணமா-அதுகடவமாக—உறுதொழில்-பொருந்துகின்றகருமோபாசனைகளை—செய்திடவுஞ்-செயயாநிற்கவும்—செய்யும் செய்கை முடித்தவன் என்று-(ஞானி) கிருதகிருத்தியனுமென்று—உரைசெப்புவதுகூறுகிறபது — எப்படியோ-எவ்வாறோ (யான் அறியேன்)—வையும் துன்பம்-(வெகுகாலமாக) வருத்துதற்குக்காரணமாயிருந்த துக்கங்களை —அகற்றிய குருவே-ஒழிவித்தருளிய குருவே—நலமா அருள்வீர்-(இச்சங்கைக்கு)நன்றாக உத்தரம்அருள்செய்வீராக.—என்.

ஞானத்தால் அஞ்ஞானநிவிர்த்திசெய்து துன்பம்ஒழிவித்தமையின், "வையுந்துன்பமகற்றிய குருவே," என்றான். (௨௧)

[மேல்வினாவிற்கு விடைகூறல்.]

ஆட்வர் செய்தொழில் மூவகை யாகும வித்தைவச மதுறு
நாள், இடணை மமதைய கந்தைய் ளார்க்கே யிகபர விவகார
ம், வீடனு குவமெனு மிச்சையு ளார்க்கே வித்தைப டிப்ப
தெலாம, பாடலாயி ருந்தொழி லாற்பல னுண்டோ பரிபூர
ணமானுல். (௨௭)

(இ-ள்) அவித்தை வசதது உறும் நாள்-(தத்துவஞானததிற்கு முன்னே) அவித்தியாவசத்திற்பொருந்தியிருக்குங்காலையில—ஆடவ செய்தொழில-(இஷ்டபபிராப்தி அநிஷ்டநிவிர்த்திக்காகப்) புருஷராயினோர்செய்யததக்கனவானகிருத்தியங்கள்—மூவகை ஆகும-(உழவாதி, எகஞாதி, சிரவணுதிஎன) மூவிதமாம்—(அவற்றுள்) இடணை-(போகத்தில்)இசசையும—மமதை-(குடுமபத்தில்எமதென்னும) அபிமானமும்—அகநதை-(தேகததிலஆதமத்துவ,பிராமணத்துவாதி)அபிமானமும—உளார்க்கே-உடையோாக்கே—இக பர விவகாரம் - (உழுவாதிகளான) இகலோக (வியவகாரஙகளும, எக்ஞாதிகளான) பரலோகவியவகாரஙகளும் (செயயததக்கனவாம்)—வீடு அனுகுவம எனும-(அநேகஜநநங்தொடுதது தாம அநுஷ்டித்துவந்தநிஷ்காமபுண்ணியபுஞ்சபரிபாகவசததால சித்தசுத்தியடைந்து சகத்துஅநித்தியமெனும் விவேகமுதயமாகலின, இடணை மமதை அகந்தைகள்குறைந்து) மோட்சமடையககடவேமென்னும — இச்சை உளார்க்கே-இச்சையுடையோர்க்கே — விததை படிப்பது எலாம் - ஞானசாஸ்திரசிரவண, மனன, நிதித்தியாசனங்களைததுமை (செய்யததக்கனவா)—பரிபூரணம் ஆனுல்-(தேசகாலவஸ்து பரிச்சேதசூனியமான) பிரமமேதாமானுல—பாடல்-சிரவண, மனனுதிகளான (மோட்சகிருத்தியஙகளாலும்)—பிறும் தொழிலால்-மிகுந்த (உழவாதிகளான) இகலோக (கிருத்தியஙகளாலும், எக்ஞாதிகளான) பரலோககிருத்தியஙகளாலும்—பலன உணடோ-(அவர் அடையத்தக்க)பயன்யாதேனுமுண்டோ? (இல்லை.)—எ-று.

"பாடல்." என்றது. உபலட்சணம்.

"யாதொன் றினேப்பெற் றவரிதனின் மிக்கதொப்ப துண்டென ரோ." என்று கீதையில் பகவானுலும், யாதொருலாபத்துக்கு மே

[மேலவினவிற்கு விடைகூறல்.]

இளமக னேகேள் தத்துவ மறியார் கேட்டல்செ யக்கடனே
அளவறு சிந்தித் தலின்முயல் வார்சிலர் சந்தே கங்களுளார்
தெளிதலி னிற்பார் விபரீ தப்பேய் தீரா வாதனையோர்
வெளியுரு வாயறி வாய்நிறை வாயினர் வேண்டுவ தொன்று
[ண்டோ.

(இ-ள்) இளம் மகனே கேள்-(ஞானமயமாய்) விளங்காநின்ற மைந்தா (உனது வினாவிற்கு யாங் கூறும் விடையினை) நீ கேட்பாய்—தத்துவம் அறியார்-(அத்துவிதமான) பிரமத்தை (ஆன்மாவாக) அறியாதவர்—கேட்டல் செயக்கடனே-சிரவணஞ்செய்யவேண்டுவதுமுறைமைதான்—அளவு அறு சிந்தித்தலின் முயல்வார்-(சகல) விடருமறுதற்குக்காரணமான மனனத்தினை முயற்சிப்பர்—சந்தேகங்கள் உளார் சிலர்-சந்தேகங்களையுடைய சிலபேர்—விபரீதப் பேய் தீரா வாதனையோர்-விபரீதப்பேயெனுமொழியாத(மலின)வாசனையுடையவர்—தெளிதலில் நிற்பார்-நிதித்தியாசனத்தின்கண்(முயற்சியுடையராய்) இருப்பர்—வெளி உருவு ஆய்-(அஞ்ஞானத்தின்) மறைப்பொழிந்த சொரூபமாய்—அறிவு ஆய்-(தேகேந்திரியாதிகளைக்காணும்) அறிவாய—நிறைவு ஆயினர்-(பனைமைப்பேய்களுக்கவகாசமில்லாத) பூரணரூபமாயினோர்—வேண்டுவது ஒன்று உண்டோ-வேண்டுமென்று (அநுஷ்டிக்கத்தக்கது சிரவண மனன நிதித்தியாசனங்களுள்ளே யாதாயினும்) ஒன்றுண்டோ! (இல்லை.)—எ-று.

திதி, வார, நட்சத்திர, யோக, கரணங்களை அறியாதோர் பஞ்சாங்கத்தைக்கேட்டாவது பார்த்தாவது அறியவேண்டுவதுபோலத் தத்துவம் அறியாதோர் சிரவணஞ்செய்யவேண்டுவது. பொன்னின் மாற்றுநிர்ணயத்திற் சந்தேகமுள்ளவர்கள், ஆணியைத் துடைத்துப்பார்த்துக்கொள்ளுவதுபோலச் சீவபிரமங்களின் அபேதஞ்சத்தியமா! அல்லது பேதஞ்சத்தியமா! என்பதுமுதலியசந்தேகமுடையவர்கள் மனனம்பண்ணவேண்டுவது. திக்குப்பிரமைகொண்டோர் அதற்குக்காரணமான சூரியாதிகளைக்கொண்டு தெளிவதுபோல விபரீதபாவனையுடையோர் நிதித்தியாசனஞ்செய்யவேண்டுவது.

"வெளியுருவாய்." என்றதால், சிரவணஞ்செய்தற்குக்காரண

மானஅஞ்ஞானமும், "அறிவாய்." என்றதால், மனனஞ்செய்தற்குக்காரணமாகியசந்தேகமும், "நிறைவாய்." என்றதால், நிதித்தியாசனஞ்செய்தற்குக்காரணமானவிபரீதபாவனையும் அருடற்கு இன்றென்பதைக்குறிப்பித்தனரென்க. (உக)

(கசுஎ) [வியவகாரமுடையஞானிகளிடத்து அஞ்ஞான, சந்தேக, விபரீதங்களுள் விபரீதபாவனையில்லையென்பது என்னவெனவினுதல்.]

ஐயா கேளீர் தத்துவ ஞானியு மஞ்ஞா னிகள்போலே
செய்யா நின்றேன் கண்டே னுண்டேன் சென்றே னெனலா
பொய்யாம் விபரீ தங்கள வற்குப் போயின வென்றீரே[மோ
மெய்யாம பிரமவி சாரமி தன்றே வெளியா வுரையீரே. (௩௦)

(இ-ள்) ஐயாகேளீர்-குருவேகேட்பீராக—தத்துவஞானியும்-பிரமஞானியும்—அஞ்ஞானிகள்போலே - அஞ்ஞானிகளைப்போலவே—செய்யா நின்றேன்- (ஸ்னானமுதலியவற்றைச்) செய்கின்றேன்—கண்டேன்-(இவனைக்)கண்டேன்—உண்டேன் -(இன்னவக்காரிகளை)யுண்டேன்—சென்றேன் - (இன்னகிராமத்திற்குச்) சென்றேன்—எனல் ஆமோ-என்றுசொல்லலாமா—பொய் ஆம் விபரீதங்கள் - மிதையாகியவிபரீதபாவனைகள்—அவற்குப் போயின என்றீரே-அப்பிரமஞானிக்கு நீங்கினவென்றருளிச்செய்தீரே —மெய்யாம் பிரமவிசாரம்இது அன்றே-(அவனுக்குரிய)சத்தியமாகிய பிரமவிசாரமஇஃதலவே—வெளியா உரையீர்-வெளியாகஇதனையருள்வீராக.—எ-று.

பிரமவிசாரமிதன்றே,என்றும்பாடமுளது.அதுபிறழ்ந்தபாடம்.

"பிரமவிசாரமாவது," "அணுவினுக் கணுவு மானே யப்பாடி மகத்து மானே, யணியிலெப் பொருளு மானே சோதியுட் சோதி மானே, பணிவுறத் தருவேனுனே பழையனும் புதிய னானே, யினை தனக் கில்லா வீச னாகிய வின்ப னானே." என்பதும், "ஒன்றிலனுகேனைசரைபற் றுள்ளமமைந்தயக்காரா, மென்றவொன்றுமிலன், றுன்றுருணமூன் றிலன் சரைசாவிலனுன்சத்தன் றுவறிலுன்,நின்றசாக்தன்சமரசனுன்;" "இரண டினிகள் விசும்பிரவி தேவ ருரகர் சுரரிடத்தில், விரியு மறிவே சான், குறக்கு மேல்கீ ழென்போ தப்பெருமை

யுலாவியது." என்பதுமாம். நான் சென்றேன், கண்டேன், உண்டேன என்பது, அதற்கு முரணாகலின், இங்ஙனம் வியவகரியாநின்ற ஞானிக்கு விபரீதப்பாவனை இன்றுவது எவ்வாறுமென்பது சீடன் கருத்து. (௯௦)

[அதற்குவிடைகூறல்.]

ஓய்ந்தக னுவிற் கண்டப ழங்கதை போது வன் வாதனையால
ஆய்ந்தறி வுற்றவ னப்படி செப்புவ னும் சனுமாகான
மாய்ந்தத னுடல்வே மளவும் விண்ணவன் மருடனெ னப்
படுவான், வியந்தசி தாபாச ன்போ மளவும் விவகா ரந்தொ
டரும். (௯௧)

(இ-ள்) ஓய்ந்த கனுவில்-சாக்கிரவியவகாரமொழிந்தசொப்பன ததில்—கண்ட பழங்கதை-(ஒருவன்நாகாவியவகாரங்களைக்கண்டு சாக கிரத்தில் விழித்துப்) பூர்வந்தான்கண்ட வியவகாரங்களை—வாதனையால-(பூர்வ)வாசனையால— ஓதுவன்-(எப்படிச்) சொல்லுவனோ— அப்படி—ஆய்ந்து அறிவுற்றவன்-(ஆன்மா அனான்மாக்களைத்) தோ ்ந்து (அநானமாவாகிய தேகாதிகளில் அத்தியாசமொழிந்து சந்தே கமில்லாமல் ஆன்மாவை) அறிந்தவன்—செப்புவன்-(பூர்வவாசனை யால் செய்யாநின்றேன், கண்டேன், உண்டேன், சென்றேனென் று) வியவகரியாநிற்பன— [இங்ஙனம் வியவகரிக்கினும்,] ஆபாசனு ம் ஆகான்-(வியவகாரகாததாவாகிய) அந்தக்கரணசகிதனும்,(வியவகா ரகரணமும்) அவனலனுவன்— [வியவகாரம் எதுகாறுந்தொடாந்து நிற்குமெனின்;—] மாய்ந்த தன உடல் வேம் அளவும்-(தேவத்துவ மடைவோமென்று அக்கினியிற் பிரவேசமாய்) மாய்ந்ததனதேகம வெந்து நீறுகுமளவும்—விண்ணவன்-தேவ(னுயிருப்பவ)ன—மருட ன் எனப்படுவான்-(அந்நியரால்) மருடனென்று (எங்ஙனம்) வியவ கரிக்கப்படுவனே (அங்ஙனம்)— வியந்த சிதாபாசன் போம் அளவு ம்-(தத்துவஞானத்தினுல் அகம்பாவ) மிறந்த சிதாபாசன் (அதநியந தம்) அபாவமாகும் (விதேககைவல்லிய) மளவும்—விவகாரம் தொ டரும்-வியவகாரந்தொடர்ந்து நிற்கும்—எ-று.

அரசனுமுன்னோன், சித்திரமோகத்தாற் சொப்பனத்தில் பிட சையேற்பவனுகத்தன்னைக்கண்டு விழித்தபின் அம்மோகம் நீங்கி அ

ரசனாயிருந்துகொண்டு முன்னேசொப்பனத்திற்கண்ட வாசனையால தன்னைப்பிட்சகனாகச்சொல்லினும் உண்மையாகத்தான் பிட்சனென்பது அவனுக்கு உள்ளே இல்லாமைபோல ஞானியும் பூர்வவாசனையால சிதாபாசனாகத்தன்னை வியவகாரத்திற்சொல்லினும் அவனுள்ளே அகங்காரக்கிரந்தியின்மையின் அவன்சிதாபாசனல்லன்.

தான்தேவனாகவேண்டுமென்று அக்கினியிற்புக்கிறந்தோன் உடனே தேவனானாலும் அவன் தேகம் நசிக்குமளவும் மநுடனாக அயலாரால எப்படி வியவகரிக்கப்படுவனோ அப்படித்தத்துவஞானத்தால ஞானியும் உடனே பிரமமானாலும் பிராரத்ததேக நசிக்குமளவும அந்நியருடைய திருஷ்டிக்குச் சிதாபாசனாக வியவகரிக்கப்படுவன், அவ்வியவகாரம் விதேககைவல்யமளவுந்தொடராநிற்குமென்பது கருத்து. (௩௧)

[திருசியம் மித்தையாயினும், ஞானியும்விஷடைகூடவேண்
டுவது ஆவசியகமாதலால், கர்த்தவ்வியமான அ
தனை அநுஷ்டிக்குமவன் கிருதகிருத்
தியனாவது எங்ஙனென
வினாதல்.]

ஆனா லையா குருவே காண்ப தசத்திய மென்றாலும
கானா வியவகா ரந்துய ரலவோ ஞானசு கந்தருமோ
போனா லன்றோ வன்றோ விட்டை பொருந்திடல் வேண்டாவோ
தானா மிட்டை புரிந்தாற் செய்கை தவிர்ந்தவ னெப்படியோ.

(இ-ள்) ஆனால் - ஞானிவியவகாரம் விதேககைவல்யமளவுந்தொடருமானால்—ஐயா குருவே—காண்பது அசத்தியம் என்றாலும்-திருசியம்பொய்யென்னினும்—கானாவியவகாரம் துயர் அலவோ-(திருசியத்தைப்பற்றிய)னானாவியவகாரங்கள் துன்பமல்லவா—ஞானசுகந்தருமோ-பரிபூர்ணபரமானந்தபரமசித்தமான பிரமானந்தத்தைத்தருமா—போனால் அன்றோ என்றும்-(அவ்வாறியவியவகாரம்)நீங்கினல்லவா அவ்வானந்தமுனதாம்—(ஆதலால்)இட்டை பொருந்திடல்வேண்டாவோ-நிருவிகற்பசமாதிகூடவேண்டுமே—தான் ஆம் இட்டை புரிந்தால-தன்மயமாகுஞ்சமாதிசெய்யின்—அவன் செய்கை தவிர்ந்தவன் எ

ப்படியோ - இருதஇருத்தியர் (ஆமாறு) எவ்வாறோயானறியேன.
எ-று. (௯௨)

[வினாவிற்கு விடைகூறல்.]

தெரிதரு மகனே யாரம் பத்தொடு இரும விவகாரம்
உரியதி யானதும் விவகா ரங்களு முள்ளத் தொழிலன்றோ
துரியப ரம்பொரு ளானவர் வேறொரு தொழில்செய் வதுமு
அரியச மாதிகள பழகுவ னேலவ னுரு டனுமன்றே.[ண்டோ

(இ-ள்) தெரிதரும மகனே-தன்னுண்மைதெரிந்திருக்குமைந்தா—ஆரமபத்தொடு விவகாரம இரும-பிராரத்தகர்மத்தோகூடவிய வகாரமழுழியாதிருக்கும—உரிய தியானமும் விவகாரங்களும்-ஆரூடர்கள செயயும்)பிரமாநந்தமடைதறகுரியசமாதியும் (வாதிய) வியவகாரஙகளும—உள்ளத தொழில் அனறோ-அந்தக்கரணமாத்திரத்தின்வியவகாரமல்லவாதுகலின,—துரியபரமபொருள் ஆனவர்-துரியமாகியபரம பொருளேதாமானவாரூடா—வேறு ஒரு தொழில் செய்வதும் உண்டோ -வேறேயாதானுமொருதொழிலைச்செய்வதும், உண்டா! (இலலை.)—அரிய சமாதிகள் பழகுவனேல்-அந்நியரால‌டைதற்கரியசமாதிகளைக் (காததவவியபுத்தியோகூடி) மூயலுவனுயின்— அவன் ஆரூடனும அனறு-அவன (இருதஇருத்தியதவமுடைய) ஆரூடனுமலனும்.—எ-று.

(௧௧அ) வியுத்தானசம்ஸ்காரதனொழிவும், நிரோதசம்ஸ்காரதின்பிரகடத்தன்மையுமாகிய அந்தக்கரணத்தின் ஏகாக்கிரத்தன்மைரூபமானபரிணமஞ்சமாதியெனப்படும்.

அச்சமாதியும, சவிகற்பசமாதி, நிருவிகற்பசமாதி என இருவகைத்தாம். ஞாதா, ஞான, ஞேயரூபத்திரிபுடித்தோற்றத்தோகூட அத்விதீயப்பிரமத்தின்கண் அந்தக்கரணவிருத்தியின் ஸ்திதிசவிகற்ப சமாதியெனப்படும். அதுவும் சத்தாநுவித்தம், சத்தாநுவித்தம் என இருவகைத்தாம். அவற்றுள், அகம்பிரமமென்னும்சத்தத்தோகூடியிருப்பதைச்சத்தாநுவித்தமெனவும், சத்தமிலதத்தைச் சத்தாநுவிதத மெனவுங் கூறுவர். திரிபுடித்தோற்றமின்றி அகண்டபிரமாகாரமான அந்தக்கரண விருத்தியின் ஸ்திதியை நிருவிகற்பசமாதியென்பர்.

இவ்வாறு சவிகற்பசமாதி, நிருவிகற்பசமாதிகட்குப் பேதமுண்டு. அவைகளில் சவிகற்பசமாதிசாதனம்; நிருவிகற்பசமாதிபலமாம்; நிருவிகற்பசமாதியும் அத்வைதபாவனாரூபமென்றும், அத்வைதாவஸ்தாரூபமென்றும் இருவகைத்தாம். அத்வைதப்பிரமாகாரமான அந்தக்கரணத்தின் அஞ்ஞாதவிருத்தியோடேகூடில் அது அத்வைதபாவனாரூபநிருவிகற்பசமாதியெனப்படும்; அச்சமாதியின் அப்பியாசமிகுதியால் பிரமாகாரவிருத்தியுஞ் சாந்தமாய்விடில் விருத்திரகிதமான வச்சமாதி அத்வைதாவஸ்தாரூப நிருவிகற்ப சமாதியெனப்படும். அத்வைதாவஸ்தாரூப நிருவிகற்ப சமாதியே முக்கியபலமாம். அத்வைதபாவனாரூப நிருவிகற்ப சமாதி அதற்குச் சாதனமாமென்ப. இவ்வபிப்பிராயத்தால் இவ்வாசிரியருஞ் சமாதிகளை இரண்டு பண்மைகூறினார்.

(கக௯) ஆரூடஞானிக்கு மனன, நிதித்தியாசனமும் கர்த்தவ்வியமன்று: ஏனென்றால் ஆனந்தநிமித்தம, மனன நிதித்தியாசனங்களிற் பிரவிர்த்தியாகிற்பன; அதுவும் தனநிச்சையாற் பிரவிர்த்திப்பன. நான வேதத்தின் ஆஞ்ஞையைச்செய்யாவிடில எனக்கு ஜநநமரணரூப சம்சாரமுண்டாமென்னும் புத்தியோடேகூடிக்கிரியை செய்யில் அதுகர்த்தவ்வியமெனப்படும். ஞானி ஆன்மாவை அசங்கனாக அறிந்தானேனும், தேகத்தின் போஜனாதி வியவகாரங்களை, அல்லது ஜநகன் முதலியோர்போல அதிகமான இராச்சியபாரபாலனாதிவியவகாரங்களைச் செய்வன்; அவ்வியவகாரத்திற்கு ஞானம் விரோதியன்று: வியவகாரமும ஞானத்திற்கு விரோதியன்று.*

என்னை? யாதொரு ஆன்மசொரூபத்தை அசங்கமாக அறிந்தானோ அவனான்மாவின்கண் வியவகாரந்தோன்றுமாயின் வியவகாரத்திற்கு விரோதி ஞானமாம். அப்படியே ஞானத்திற்கு விரோதி வியவகாரமாம்; அங்ஙனந்தோன்றுமற் சம்பூர்ணவியவகாரங்களும் தேகாதிகளின் ஆசிரிதமென்றும், ஆன்மாவின்கண் வியவகாரத்தோடேகூடியதேகாதிகளின் சம்பந்தமில்லையென்றுந்தோன்றுகின்றது. இக்காரணத்தால் ஞானிக்குப்பிரவிர்த்தியும் நிவிர்த்தியென்றே சொல்லப்படுகிறது. ஆதலான், "உசிதமதி யானமும் விவகாரங்களுமு

ள்ளத் தொழிலன்றோ, அரியபீ தம்பொரு ளானவர் வேறொரு தொ ழில்செய் வதுமுண்டோ," என்றதனொக்க. (௬௬)

[ஆனால் ஆரூடருக்கியானுதிகள் செய்யக்காணப்படுகி ன்றனர் அவையெற்றிற்கெனவினவி அதற்குவிடை கூ றல்.]

உத்தம குருவே யாரு டரும்பா பொருதொழி லற்றவருள
சித்தம டங்குதி யானு திகளசிலர் செய்குவ தென்னென்றால்
இத்தல மருவும் பிராரத் தப்பிறி வெப்படி யப்படியே [னே.
முத்தரும வெகுவித மாகுவ ரென்பது முன்னே சொன்னே

(இ-ள்) உத்தம குருவே-(போதககுருமுதலியோருள்ளே) உத் தமமான விதகுருவே—ஆரூடரும் ஆய்-சொரூபத்தில் நிற்பவரும் (நிருசியத்தில் வீழாதவரு) மாய-ஒருதொழில் அற்றவருள்-யாதொ ருதொழிலுந் தமக்குவேண்டுமென்றில்லாதொழிந்திருந்த இருதிய ருளளே—சிலர்-சிலபோ—சித்தம அடங்கு தியானுதிகள்-உளமொ டுங்குந் தியானமுதலியவுபாயங்களை—செய்குவது-பயிலாநிற்பது— என என்றால்-யாதுகாரணமென்று நீ சங்கிக்கில்—இத்தலம் மருவு ம-இவ்வுலகில் அவரவரைப்பொருந்தாநிற்கும்—பிராரத்தப் பிறிவு எப்படி அப்படியே-பிராரத்தபேதம் எவ்வாறோ அவ்வாறே—முத் தரும-ஜீவன்முத்தரும—வெகுவிதம் ஆகுவர் என்பது-அநேகப் பிர காரமான வியவகாரங்களையுடையராவரென்பது—முன்னே சொ ன்னேனே-பூருவபடலத்தில,௬௭-வதுசெ-யிற் கூறினேனே.—எ-று.

[ஆரூடர் வியவகாரம் லோகசங்கிரகநிமித்தமேயல்லாமல் வேறல்லவென மேலும்வற்புறுத்துகின்றார்.]

நல்லவ னேகே ளுலகுப காரம் ஞானிகள் வியகாரம்
அல்லது வேறொரு பெறுபே றும்மில் லையொரு பிணியுமில்லை
வல்லவி ருட்டிமு தற்பல தொழிலால் வருபுண் ணியபாவம்
எல்லவ ருக்கும தக்கிர கஞ்செயு மீசனு டைத்திலனே.(௬௫)

(இ-ள்) நல்லவனே கேள்-சாதுவேகேளாய்—ஞானிகள் விய காரம்-ஞானிகள் செய்யும்வியவகாரம்—உலகு உபகாரம்-உலகுக்கு

பகாரமாம்—அல்லது-இதுவேயன்றி-அதனுல்-அவ்வியவகாரத்தால்—வேறு ஒரு-வேறேபயாலும்—பெறுபேறும் இலை-அதனுலாகிற்கும இலாபமுமில்லை—பிணியும் இலை-துன்பமுமில்லை—[ஞானிகள்செய்யும வியவகாரங்களால் அவர்க்கின்பதுன்பங்களிலவாமெனப்பதெவவாறேமெனின்;—] வல்லை சிருட்டி முதல் பல —ருநீலால-வல்லமையுடைய சிருஷ்டிமுதலிய அநேகவிருத்தியங்களாலு—வரு புண்ணிய பாவம்-வாராநிற்கும் தர்மாதர்மங்களை—எல்லவருக்கும்-சர்வஜீவர்கட்கும்—அநுக்கிரகம் செயும்-(மக்களிடத்துத்தாய்போலக்) கிருபைசெய்யாநிற்கும்—ஈசன் அடைந்திலனே-ஈசுரன் அடைந்திலனே (அதுபோலும்.)—எ-று.

அமிதநிநி சம்மாரம், திரோபாவங்களால் வரும்பாவத்தையும், இதநிநி, சிருஷ்டி, அநுக்கிரகங்களால் வரும்புண்ணியத்தையும் ஈசுரன் அடையாததுபோல ஞானிலோகசங்கிரகார்த்தம் புறத்தேகிரியைகளைச செய்யினும், அகத்தேசெய்பவனாக இலன்; ஆகலினிலாபநஷ்டங்களை யடையானென்பது கருத்து. (௩௰)

(௨0௧) [முற்செய்யுளில் ஞானியை ஈசுரனுக்கு ஒப்பாகச்சொன்னதுபற்றி உலகத்திற்பெரும்பாலும் சாமானியமாய அறிந்தோர்களாலுமடைந்துள்ள விபரீதசங்கையைக் குருமுகத்தால் ஒழிவிக்குங்கருத்தினராய் ஞானியும் ஈசுரனும் எப்படி ஒப்பாவரெனச்சிடனை வினுதலும் அதற்குவிடைகூறலும்.]

ஈசனு மாயரு வாயுரு வாகி யெழுந்தரு ளுங்குருவே
ஈசனு ஞானியு மொப்பெனன் றீரே யெப்படி யொப்பென்றால்
ஈசனு ஞானியு மமைதய ககை ஈகநதி ஞலொப்பாம
ஈசனு மாம்பல வேறு மாமுல கெல்லா மிவனுமே. (௩௧)

(இ-ள்) அருவாய்-(பரமார்த்தமாக) அருவமான அறிவுருவாய (இருந்தபடியிருந்தே)—ஈசனும் ஆய்—(மாயையினுல் சகத்தின் படைப்பாதிக்குக்காரணமான) ஈசுரனுமாகி—உருவு ஆகி-(அதுபோலிகளை இரட்சிக்கும்பொருட்டுச் சரீரமெடுத்து) திருவுருவாகி—எழுந்து அருளும் குருவே-வந்தருளாநிற்குங்குருவே—ஈசனும் ஞானியும்--ஒப்பு என்றீரே-சமானமாவரென்று (மும்) கூறினீரே—எப்படி

ஒப்பு என்றால்-எப்படிச்சமானமாவரென்று (கே) சங்கிப்பாயாகில—ஈ சனும ஞானியும்—மமதை அகந்தை இவைகளிலொப்பு ஆம்-(மாயை அவித்தைகளிலும் அவைகளின் காரியங்களிலும்) மமத்துவாபிமானமும், அகந்தாபிமானமும் விட்டிருத்தலாற் சமானமாவர்—இவன்-இந்த ஞானியானவன்—(ஈசரனேடு முன்சொல்லியவாற்றால் சமானமாவதுந்தவிர, பிரமவித்துப் பிரமமேயென்னும் சுருதியால் பிரமத்தினைகன் னத்தியஸ்தமான) ஈசனும் ஆம்-ஈசரனுமாவன்—பல சீவரும் ஆம்-நாநாசீவருமாவன்—உலகு எலலாம் ஆம்-உலகனைத்துந தானவன்.—எ-று.

அத்தியஸ்தம் அதிஷ்டானத்தைத்தவிரவேறின்மையினெனக.

(உ0க) [ஒருவன்உணண மற்றோர்க்குப் பசிநீங்காதது போல ஞானிஅஞ்ஞானநீங்கிமுத்தியடைய ஏனையசீவர்அடையாமையின இவன் எல்லாச்சீவரும்ஆமெனல் எவவாறெமென ஊசிகடாகநியாயம்போல இடையேசங்கித்தல்.]

எல்லாச் சீவரு மிவனு மென்றீ ரிவன்றான் முத்தியடைந
தெல்லாச் சீவரு முத்திபெ றாமலி ருப்பா னேனையா
எல்லாச் சீவரும வெவ்வே றானு லிவனெல் லாமலனே
எலலாப் பொருளு முரைததருள குருவே யினிதீர் மொழி
[பிரே., (உஎ)

(இ-ள்) எல்லாச் சீவரும-சுரநரதிரியக்காதிரூபங்களாகியசா ம சீவரும்—இவன் ஆம் எனறீர்-இஞ்ஞானியாகுமென்றருளினீர்—இவன் தான் முத்தி அடைந்து-இஞ்ஞானி[அஞ்ஞானநீங்கி]திரதிசயாநந்தரூபமோட்சமடைந்தனனுக—எல்லாச் சீவரும்-சர்வசீவரும்—முத்தி பெறாமல் இருப்பான் ஏன்-மோட்சமடையாமலிருக்குநிமித்தமென்னை?—எல்லாச் சீவரும்-சர்வசீவரும்—வெவ்வேறு ஆனால்-பரஸ்பரபின்னமாயின்—இவன் எல்லாம் அலனே-இஞ்ஞானிமுழுதுமலலனே—எல்லாப் பொருளும் உரைத்தருள் குருவே-யான்வினவாநிற்குஞ்சர்வவினுக்களின்பயன்களையும் உபதேசித்தருளாநிற்கும் ஆசிரியரே—இனிது ஈர் மொழியீர்-இவ்வினுவின்பயனையும் தேவரீர் அருளவீராக.—எ-று. ஐயா என்பது விளி.

[விம்பப்பிரதிவிம்ப நியாயத்தாற் சங்கைக்கு
உத்தரங்கூறுகின்றார்.]

அகமெனு மான்மா பூரண மேகம மேகவி தஞ்சீவர்,
அகமெனு மந்தக் கரணு பாதிக ளளவிலே யாதலினால்
சகமுழு துங்குளிர் சந்திர னேகனு சலசந் திராபலராம்
சகமதி லேரி குளஞ்சிறு குழிசால் சட்டிகு டம்பலவால். ( )

(இ-ள்) அகம் எனும ஆன்மா-அகமகமென்றனைத்துயிரினிட
ததுமிருந்தவரத முளைப்பதாகிய ஆனமா—பூரணம் ஏகம-பரிபூர
ணமாயேகமாம்— சீவர்-சீவர்கள்—அநேகவிதம-பரிச்சின்னமாய் அ
நேகப்பிரகாரமாயிருப்பர்— (என்னை?), அகம எனும் அந்தக்கரண
உபாதிகள்-காணென்னும் அந்தக்கரணவுபாதிகள்—அளவு இலே ஆ
தலினால் — பரிச்சின்னங்களாய், அநேகங்களாயுள்ளனவாகலின்.—
[இனிஇவைக்குபமானம்.] சகம முழுதும் குளிர சந்திரன ஏகம்-உல
கமுழுவதுஞ் சீதளமாதற்குக்காரணமாகும விம்பசந்திரனொருவன்—
—சல சந்திரர் பலர் ஆம்-சலப்பிரதிவிமபசந்திராஅநேகராம்—(என
னை?) சகமதில்-உலகில்—ஏரி குளம சிறுகுழி சால் சட்டி குடம ப
லவால்-ஏரியும், குளமும், சிறுபள்ளமும், சாலும், சட்டியும், குட
மும் ஆகியவுபாதிகள் பலவாகலின்.—எ-று.

அகம்பதம் ஆன்மாவிற்கும், அந்தக்கரணத்திற்குங்கூறியிருப
பதுமுறையே லட்சியார்த்தம், வாசசியார்த்தமாகலான என்க.(கூ)

"அகம்." என்பது, அந்தக்கரணதிற்கு இயற்பெயர். ஆனமா
வுக்கு ஆகுபெயரெனினும் ஒக்கும்.

[இதுவுமது.]

சட்டிகு டங்களி லொன்றாக சித்திடி லதிலுட் சலசந்திரன்
ஒட்டுமு தற்சந் திரனொடு கூடுமொ ழிந்தவை கூடாவே
கட்டுமு பாதிக சித்தியி சீவன் கரண வரன்மாவில்
இட்டமெ யிக்கியமு பாதிகெ டாதவர் கேவல மாகாரே. (கக)

(இ-ள்) சட்டி குடங்களில்-சட்டிகுடமுதலியவுபாதிகளில—
ஒன்றாகசித்திடில்-ஒருபாதிகசிக்கில்—அதிலுள்சலசந்திரன-அதிற்பிர

திவிம்பித்திருக்கசக்திரன்—நட்டம் மூதல் சந்திரனெனுடம்-தான் கூடுதற்குரியகாரணசந்திரனுமெனும்—ஒழிந்தவை - உபாதிகெடாத வேலையபிரதிவிம்பங்கள்—கூடாவோ (எப்படிக்)கூடாவோ (அப்படி) —கடம்முடபரதி நசித்திடு சீவன்-பந்தியாகிறதும் அந்தக்கரணத்தின் கண்ணுள்ள அஞ்ஞானவுபாதி ஞானத்தால் நாசமாகாநிற்குஞ்சீவன —காரண ஆன்மாவின்-தனக்குக் காரணமாகும் ஆன்மாவின்றன்—அயிக்கியம்மிட்டும்-ஐக்கியத்தைப்பொருந்தும்—உபாதிகெடாதவர்-அஞ்ஞானவுபாதி ஞானத்தாற்கெடாதவேலையினர்—கேவலம் ஆகார்-அயிக்கியமாகாாகள்.—எ-று.

சீவத்துவததிறகு முக்கியவுபாதி சமூத்திரின்கண்ணுள்ளஅவித்தைக்கூறும்; அவவவித்தைக்கூறேசாக்கிரத்தில் அந்தக்கரணமாகப்பரிணமித்தலானும, அதுதோன்றினபின்னரே சீவன்தோன்றலானும அந்தக்கரணத்தைச் சீவவுபாதியென்றனர்; அவித்தையைச் சீவவுபாதியாகக்கொள்ளாக்கால்பிராஞ்ஞனைச்சொல்லுதலுக்கு விரோதமாம.

எவவந்தக்கரணத்தில்ஞானமுண்டாமோ அவ்வந்தக்கரணவவச்சின்ன சேதனத்தின்கண்ணுள்ள அஞ்ஞானக்கூறு ஞானத்தால்நிவிர்த்தியாம். அஞ்ஞானம நீங்கினேன் முத்தனுவன்; எவவந்தக்கரணத்தில்ஞானமுண்டாகவில்லையோ அவவந்தக்கரணத்தில் அஞ்ஞானக்கூறுமுண்டு, பந்தமுமுண்டு அஞ்ஞானநீங்கிமுத்தனானவன் பிரமதிருஷடியால்சகசீவபரஙகளாக விளங்குதலின், அவனெல்லாமாகுமெனபதிற்சந்தேகமின்றென்றறியென்பதாம். (ரு.சு)

(உ0உ) [கூசு-ம் செய்யுளில் எப்படி ஒப்பாரென்றவினவிய தன்கருத்தை இங்கேவெளிப்படுத்துகின்றான்.]

இவனயன் மால்சிவ னுகிய வீசரெ டெப்படி யொப்பாவன்
சிவன்முத்த் னுமவரு மகிலசி ருட்டி [illegible] சங்கள்செய்வார்
அவர்போல் மதிகளு முக்கா லங்களு [illegible] விபுவாவார
தவதிரு குருவே [illegible] சற்குரு நாதனேனே.

(இ-ள்) இவன் அயன் மால் சிவன் ஆகிய ஈசரொடு-இஞ்ஞானியெனப்படுவான், அயனரியுருத்திராாகியவீசரரோடு.—எப்படி ஒப்பு

ஆவன்-எங்ஙனம்இணையாவன்—சிவன் முதல் மூவரும்-உருத்திரன், நாராயணன், பிரமனென்னும்அம்மூவரும்—அகில சிருட்டி திதி நாசங்கள செய்வார் - எல்லாவுலகங்களையுஞ் சிருஷ்டி, திதி, சம்மாரங்கள் செயயாநிற்பர்—அவர் பிறர் மதிகளும் முக்காலங்களு ம அறிவார்-அவர்கள் அந்நியருடையபுத்திகளையும், பூத, பவிஷிய, வ ர்த்தமானமென்னுந்திரிகாலங்களையும் அறியாநிற்பர்—(இதனால்) வி பு ஆவார-சர்வத்திருஞ்சம்பந்திதவராவார், அல்லது பிரபுவாவார்—தவம் மிகு குருவே-தவமிகுந்துள்ளவாசிரியரே—இவனுக்கு-இஞ்ஞா னிககு—அவையில் ஓர சற்றும காணேனே-அம்மகிமைகளில் ஒரு சிறிதுங்கண்டிலேன்; (ஆகவின,)—எ-று.

கண்டிலேன் ஆகவின், "எப்படி யொப்பாவன்" எனக்கூட்டுக. இங்கே, "தவம." என்றது, மனமபொறிகளின்ஒருமையை: கிருச்சி ர, சாந்தராயணாதிகளையல்ல. (சo)

[அதற்கு விடைகூறல.]

[வேறு.]

தடத்து நீரிலாத் திரியொளி யுபயமுந தழுவுமூர தனை
ககாககும, குடத்து நீர்விளக் கினிலொளி யிரண்டுமோர குடமா
மபமாத திரங்காக்கும், அடுத்த மைநதனே ஞானியு மீசனு
மறிவினாற் பிறிவில்லை, கெடுத்த மாயையின் குணங்களான்
மேலென்றுங் கீழென்றும பிரிவாமே. (சக)

(இ-ள) தடத்து நீர்-ஊருணிச்சலமும்—நிலாததிரி ஒளி-பகல வத்திப்பிரெனியும—உபயமும்-(ஆகிய) இவவிரணடுமே—தழுவும ஊ ரதனைக் காக்கும-(தமமைத்) தழுவாநிறகும ஊரமுழுதினையும இரட சிககும—குடத்து நீர-குடத்துச்சலமும—விளக்கினில் ஒளி - தீபத தொளியும்—இரண்டும்—ஓர் குடும்பமாத்திரம் காக்கும்-ஓர்குடும்பமா த்திரததைஇரட்சிக்கும்—அடுத்த மைந்தனே-(சற்சங்கத்தைக்)கிட்டி யமைநதா—ஞானியும் ஈசனும்-(தத்துவ) ஞானியும் ஈசுரனும்—அறி வினால பிறிவு இல்லை-(நாம் பிரமமென்னும்) ஞானத்தால் பேதமில லை—கெடுதத-(சீவாகள் முத்தியடையாமற்போகும்படி அவர்களுண ரவை ஆவரணசத்தியான்மறைத்துக்) கெடுத்த—மாயையின் குணங்

களால்-மூலப்பிரகிருதியின் (சத்துவகுண ரசோ)குணங்களால்—மேல என்றும்-(ஈசுரன்) மேலாமென்றும்—கீழ் என்றும்-(ஞானி) கீழாமென்றும்—பிரிவு ஆம்-பேதமாம்.—எ-று.

தடத்தினீரும், நிலாத்திரியொளியும் குடத்தினீரும, விளக்கினொளியும் உபாதியாற்பேதமல்லாமற் காக்குந்தன்மையாற் பேதமில்லாமைபோல, மாயாகுணங்களாற்பேதமல்லாமல் ஞானத்தாற்பேதமிலரென்பதாம். (சுக)

[மேலும் அதனையே விளக்குகின்றார்]

**நரரின் மன்னனைச சித்தரைப் போலவே நாரணன் முதலான**
**சுராகண் மாயைவல லவரணி மாதிக டொககமா தவமிக்கோர**
**தரணி மாநுடாக கவைகளில் லாமையாற் றாழ்வுள ராகினும**
**பிரம பாவனை யாலிவ ரவரெனும் பேதமொன் றிலைபாராய.**

(இ-ள்) நரரில்-மநுடாகளுக்குள்ளே—மன்னனைச் சித்தரைப போலவே-(துஷ்டநிக்கிரகம சிஷ்டபரிபாலனமுடைய)அரசனையும, (சாபாநுக்கிரக சாமார்த்தியமுடைய) சித்தரையும்போல—நாரணன முதலான சுராகள்-விஷ்ணுமுதலான தேவர்கள்—மாயை வல்லவா-மாயைசெயவதில்சமாததா—அணிமா ஆதிகள் தொக்க-அணிமா,(மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம, ஈசத்துவம, வசித்துவமெனனும) அஷ்டசித்திகளுங்கைவந்த—மாதவம் மிக்கோா-மாதவமிருநதோா—தரணி மாநுடாக்கு-பூமியில் (மநுடதேகமுடைய) ஞானிகட்கு—அவைகள-அம்மாயாவல்லபமும், அணிமாதி அஷ்டசித்திகளும—இலலாமையால-இன்மையால்—தாழ்வு உளா ஆகினும-தாழ்ச்சியுடையராயினும—பிரமபாவனையால்- (நாம்) பிரமமெனனும சமஸ்காரத்தினால—இவா அவா எனும் பேதம்-ஞானிகள தாழ்வுடையவரெனறும,ஈசுரனுயர்ச்சியுடையவனெனறுங்கூறுகிறகுமபேதம—ஒன்று இலை-சிறிதுமிலலை—பாராய்-(இதனையூகித்துப)பாரப்பாயாக.—எ-று.

முன்னே "நாரணன்" எனக்காட்டினது மாயை பண்ணுமவாகளில், "அரிநான்" என்னும் ஈசுரகீதையின் கருத்து.

அணிமாதி அஷ்டசித்திகளினியல்பை, திருவிளையாடலில, ௩௩-வது அஷ்டமாசித்தியுரைத்த படலத்திலும, பாகவதத்தில, கக-ம-ஸ்கந்தத்தில் யோகசித்தியுரைத்தவத்தியாயத்திலுங காண்க.()

(௨0௬) ["அணிமாதிகடொக்கமாதவமிக்கோர்." என் முற்கூறிய தால அவை ஈசரவைசுவரியமெனப்பொருள்படுதலின் ஈ ணடுமுனிவரிடத்துங்காணப்படுவானேனென விறுத்து ட, அதற்குவிடையும்.]

முத்தி நல்கிய சற்குரு வேபல முனிகளுக் கணிமாதி
சித்தி பூமியிற் கண்டிருக் கவுமந்தச் செல்வமீ சனதெனநீர்
புத்தி யோதிட வுரைத்தரு ளென்றிடிற் புகழுமீ சனைநோக
பத்தி செயதிடுந் தவத்தினு லியோகத்தா றபலித்ததென் [றிப
[றறிவாயே. (௪௬)

(இ-ன்) முத்தி நல்கிய சற்குருவே-அகாதநிவிர்த்தி, ஆநந்தப் பிராபதிரூபமானமோட்சத்தைத் தநதருளியசற்குருவே—பல முனிகளுககு-வாதராயணர்முதலிய அநேகமுனிவாகளுக்கு—அணிமா ஆதி சித்தி-அணிமாமுதலிய அஷ்டசித்திகள்—பூமியில கணடிருககவும்-(உளளனவாகப்) பூமியிற்காணபபட்டிருககவும—அந்தச செல்வம-அவவணிமாதிச்செல்வம்—ஈசனது எனநீா-ஈசரனுடையசெல்வமெ னறருளினீர்—புத்தி ஓததிட-(அசசெலவம் முனிவர்கட்கு இனன காரணததாலுளவாயினவென்பதை என)புததி சமமதித்திட—உரை ததருள் என்றிடில்-உரைத்தருள்வீரொனறுகேவிறுவிடில்—புகழும் ஈச னைநோக்கி-(சர்வாபீஷ்டப்பிரதராகலின, சாவமதஸ்தாகளாலுக்)துதி யாகிறகும் ஈசரனை நாடி—செய்திடுமபத்தி (யால) -(உட்புறமொதது பனமொழிமெய்களாற்) செய்யாநிற்கும வழிபாட்டினாலும,—தவத் தினுல-கிருசசிரசாந்தராயணாதிதவஙகளாலும,—யோகததால-இயம நியமாதியஷ்டாங்கயோகத்தினாலும்—பலித்தது எனறு அறிவாய்-(அணிமாதிசசெலவம்முனிவாகட்குவாய்ததெனறறிவாயாக.—எ-று

இயம, நியமாதிஅஷ்டாங்கயோகத்தை, ஈசரகீதையின், கக-ம், அததியாயத்திற்காண்க. (௪௬)

(௨0௭) [தவமுதலியவற்றால், அணிமாதிச செல்வம்முனிவ ர்கட்குவாய்த்ததாலும் தவத்தால் பிரமத்தையறிக வென்னுஞ்சுருதியால் தவமில்லாதோர்க்குத் தத்துவ ஞானமுங்கூடாதேயென்னுங்கருத்தையுட்கொண்டு ஒருவாறு சீடன விறுதல ]

சிவசொ ரூபமாந் தேசிக மூர்த்தியே சித்திமுத் தியிரண்டு ம, தவமு ளோரடை குவரெனி லவாகள்போற சகலரு மடைவாரே,அவர்கள் பூருவஞ் சித்தியு ஞானமு மடைநததுங் கண்டோமே, இவாகண் ஞானிக ளென்றிடிற சிததிக ளிவாகிலா வகையேதோ. (சச)

(இ-ள்) சிவ சொரூபம் ஆம் தேசிக மூாததியே-ஆநநதவுருவமாகிய குருவே—சிதநி முத்தி இரண்டும்-அணிமாதிசிததியும, முததியுமாகிய இரண்டனையும—தவம உளோா அடைகுவா எனில-தவமுடையோா அடைவரென்று (சுருதி) சொல்லில்—அவர்கள்போல-வாதராயணா முதலிய பூாவாசாரியாபோல—சகலரும அடைவாரே-இக்காலததுளள ஞானிகளனைவருமடையாநிறபரே—அவாகள-அப்பூாவாசாரியா—பூருவம சிததியும ஞானமும் அடைநததும் கணடோமே—பூருவம் அணிமாதிசிததியும, தத்துவஞானமுமாகிய இரண்டனையும் அடைந்(திருந்)ததும் (புராணஙகளிற கண்டோம்—இவாகள் ஞானிகள் எனறிடில-இக்காலததுள்ள விவாஞானிகளெனறு சொல்லில்—சிததிகள் இவாக்கு இலாவகை ஏதோ-அணிமாதிசிததிகள் இவாக்கில்லாதிருககுஙகாரணம யாதோ! (யானறியேன் அதனையருள்வீராக.)—எ-று. (சச)

[அதறகுவிடைகூறல்.]

காமி யத்தவங் காமிய மொன்றையுங் கருதிடாத் தவமென்றும், பூமி யிறறவ மிருவகை சிததியும் போதமுந தருமைநதா, ஆமி வற்றிலொன றியற்றினு லொன்றையே யடைகுவ ரிதுநிலை, யாமு ரைததவவ் விரண்டையு மியற்றினு ரன்றுள பெரியோரே. (சரு)

(இ-ள்) காமியத்தவம்* (என்றும்)-சகாமதவமெனவும—காமியம் ஒன்றையும கருதிடாத தவம என்றும்-இச்சிக்கப்படுமபொருளொன்றனையும்(அடையக்)கருதாததவமெனவும்—(நிஷ்காமதவமெனறபடி)பூமியில் தவம் இருவகை-பூமியின்கண்ணே தவமானது இருவகைத்தாம்;—சித்தியும போதமும தரும்-(அவற்றுள்சகாமதவம) அணிமாதிசித்திகளையும், (நிஷ்காமதவம) தததுவஞானத்தையுஙகொடாநிற்கும்—மைந்தா—ஆம் இவற்றில் ஒன்று இயற்றினுல்-(சிதநி,

ஞானங்கடருச்சாதனங்க)ளாரும் இவ்விருவகைத்தவங்களுள், ஒருத வத்தைசசெய்யில்—ஒன்றையே அடைகுவர்-ஓர்பயனையே அடை யாநிற்பர்—இது நீர்மை-இது நியமம்—யாம் உரைத்த-நாங்கூறிய—அவவிரண்டையும் இயற்றினூர்-அவ்விரண்தெவங்களையுஞ்செய்தனா—அனறு உள பெரியோா-முறகாலததுள்ள வாதராயணா முதலிய பெரியோா.—எ-று. (௪௫)

(உ0௫) [மேறசொன்னதைததானே இன்னும் வற்புறுத்து கினறூா.]

அனக மைநதனே முத்திஞா னத்தையே யடைகதன ரல லாமல, ஜெனகன் மாபலி பகீரதன் முதலினோா சித்திகள் ப டித்தாரோ,இனிய சித்தியே விரும்பினூா சிலாசில ரிரண்டை யு முயனறூரம், முனிவா சிததிகள விஞேதமாத் திரத்தரு முததியைத் தாராவே. (௪௬)

(இ-ள்) அனக மைநதனே-பாவமறறமைந்தனே—முத்தி ஞா னததையே அடைந்தனா அலலாமல-(நேரே) மோட்ச(சாதனமா ன) தததுவஞானததைததானேயடைந்தனரனறி—ஜெனகன், மா பலி, பகிரதன்முதலினோா—சிததிகள படிததாரோ-சிததிகளைப்பழகி னரா? (இலலை.)—சிலர் இனிய சிததியே விருமபினூா-சிலமுனிகள (தமககு) இனிமையாகிய சிததியைத்தானே விருமபினா—சிலா இ ரண்டையும் முயன்றூா-சிலமுனிகள் சிததி, ஞானம் இரண்டனையு ம் பழகினா—அம்முனிவா சிததிகள்-அமமுனிவர்களடைந்துள்ள சி ததிகள—விஞேதம மாத்திரம தரும்-(மணியாழியுலகமெல்லாங் க ணநேரததில்விளையாடிவரும்) விளையாட்டைமாத்திரந்தரும்—முத்தி யைதத தாராவே-அநாத்தநிவிர்த்தி, ஆநந்தப்பிராப்தி ரூபமான மோட சத்தைக்கொடாவாம்.—எ-று. (௪௬)

(உ0௬)[ஆயின்,முத்தர்களுள்ளுஞ் சிலபேர்அச்சித்திகளின்பொ ருட்டுச் சரீரவருத்தமுற்றதென்கொலோவெனுஞ் சீடன் வினவைத் தானேவினவி அதற்குவிடைகூறல்.]

யோக ஞானமே முத்தியைத் தருமெனி லொழிந்தசித்தி
கள்வேண்டி, மோக மாயுடல் வருந்தினர் சிலசில முத்தாக
ளேனென்றால், போக மாய்வரும் பிராரத்த காமங்கள் புசித்
தன்றோ நசித்தேகும், ஆகை யாலந்தச் சித்திகள் பிராரத்த
மாகுமென் றறிவாயே. (சஎ)

(இ-ள்) யோக ஞானமே-ஜீவான்ம, பரமான்மாக்களினயிக்கியஞானமே—முத்தியைத் தரும் எனில்-மோட்சத்தைத்தருமென்று சொல்லில்—ஒழிந்த-முத்தியைத்தரவல்லாத—சித்திகள் வேண்டி-சித்திகளைவிரும்பி—மோகம் ஆய-அவை வாய்க்குநெறியிற்பரவசமாய—சில சில முத்தாகள்-(சூடாலைமுதலிய)சிறசிலஜீவன்முத்தாகள்—உடல் வருந்தினர் ஏன் என்றால்-(முன்னே) மெய்வருத்தமுற்றனர் அஃதெனகொலோவென்று நீ வினவிடில—போகம் ஆய் வரும் பிராரத்தகாமங்கள்-அநுபோகமாய்வாராநிற்கும் பிராரத்தகாமங்கள்—புசித்து அன்றோ நசித்து ஏகும்-புசித்தலல்லாநசித்துப்போம்—ஆகையால்-ஆகலின்,—அந்தச் சித்திகள்-பூருவஞ் சூடாலைமுதலியோரால டைந்தவசித்திகள்—பிராரத்தம் ஆகும் என்று அறிவாய்-அவைகளது பிராரத்தமாமென்று நீயறிவாயாக.—எ-று. (சஎ)

[குருவைவியந்துமேலும் உபதேசிக்கவேண்டுமென்
பதற்குக் காரணங் கூறுகின்றான்.]

இலக்க மாயிரஞ் சுருதியா லூகத்தா லென்மன மசையா
மல், பெலக்க வேண்டுமென் றருள்குரு வேயகப் பிராந்தி
போய்த் தெளிவானேன், துலக்க மானகண் ணடியை யடிக
கடி துலக்கினும் பழுதன்றே, அலக்கண் மாற்றிய தேவரீ
ரெனக்குரை யமிர்தங்க டெவிட்டாவே. (சஅ)

(இ-ள்) இலக்கம் ஆயிரஞ் சுருதியால்-அநேகஞ்சுருதிப்பிரமாணங்களாலும்—ஊகத்தால்-(அநேக)யுத்திகளாலும்—என் மனம் அசையாமல்-என்அந்தக்கரணம் (சொரூபத்தினின்றுஞ் சந்தேகத்தினால்) சலியாமல்—பெலக்கவேண்டும் என்று-திடமாயிலழுந்தவேண்டுமென்று—அருள் குருவே-(யான்சங்கிக்குஞ்சங்கைகளுக்கெலாம் உத்தரம்) அருளிவாராநின்றகுருவே—அகப் பிராந்தி போய-(எ

னது) அந்தக்கரணத்தில (முன்னிருந்தபஞ்சப்) பிராந்திகளுமொழிந்து—தெளிவு ஆனேன்-தெளிவுடையவனுயினேன்—துலக்கம ஆன கண்ணுடியை - பிரகாசமானகண்ணுடியை—அடிக்கடி துலக்கினல் -மேலுமேலுந் துலக்கிடில்—பழுது அன்றே-குற்றம் என்னே—அலக்கண மாற்றிய-(எனது) துன்பங்களை நீக்கிய—தேவரீர்-சுவாமிகள்—எனக்கு உரை அமிர்தங்கள்-அடியேற்குபதேசியாநிற்கும் (வாக்கியா) மிர்தங்களை—தெவிட்டா-தெவிட்டுகின்றில;(ஆதலால் இன்னுந் தேவரீருபதேசமொழிகளைக்கேட்க விரும்புகின்றேன அருள்செய்தல வேண்டும்.)—எ-று.

பிரகாசமான கண்ணுடியை மேன்மேலுந் துலக்குவது குறையின்றுதல்போல், பிராந்தி நீங்கித தெளிவெய்தியவென்னை மேன்மேலுந் தெளிவெய்தப்பண்ணல் குறையின்றுமாகவாலும், சுவாமிகளின வாக்கியாமிர்தத்தில எனக்கு அமைவுண்டாகாமையாலும் இன்னும உபதேசிக்கவேண்டுமெனபான், "துலக்க மானகண் ணுடியை யடிக்கடி துலக்கினுற் பழுதன்றே, அலக்கண மாற்றிய தேவரீரென கருரை யமிர்தங்க டெவிட்டாவே." என்று கூறினன்.

"அகப்பிராந்திபோய்"என்றதற்கு,உ-ம வள்ளலார். "சிந்தனை றுரைதத வாக்கியப் படியே சிகழ்ந்தவன பிராந்தியைந் தினையுஞ,சத்திய மிந்தச் சகமெனல் கருவி தனக்கிடா தடலைகா னென்னல்,கந்தபோத் தாவுந் தானெனல் தானுங் கடவுளும வேறெனக் கருதல,சிந்தரு வாகி யிருந்து நானுகேன சிவனெனல சிதடாபா லறியே." என வரும மற்றும்வருவனவற்றுங் காண்க. (௪௬)

(உ௭ன) [பரஸ்பரம் விரோதமான சுருதிவாக்கியங்களில் யாது வாஸ்தவமாகக் கொள்ளறபாலதெனவினுதல.]

கைதவங்களைச் சாத்திரஞ் சொல்லுமோ கருணையா லெனையாளும, ஐய னேகுரு வேயெவ ராகிலு மநுபவித் தால வனிச,செய்த காமங்கள் விடாவென்ற வசனமுஞ் சென்மசஞ்சிதமவேவத், துய்ய ஞானத்தீச் சுடுமென்ற வசனமுந் துணிவதெப படிகானே. (௪௭)

(இ-ள்) கைதவங்களை-அசத்தியமானவார்த்தைகளை — சாத்தி

ரம சொல்லுமோ-சாஸ்திரங்கள் போதியாநிற்குமோ (போதியாதே) —கருணையால் எனை ஆளும்-கிருபையினாலே அடியேனை ஆண்டருளும—ஐயனே குருவே-(எனது)பிதாவாகிய ஆசிரியரே—எவராகிலும-யாவராயிருந்தபோதிலும—செய்த கர்மங்கள்-(தாங்கள்)செய்த காமபலங்கள்—அநுபவித்தால் அன்றி-அநுபவித்தொழித்தாலல்லது —விடா என்ற வசனமும்-நாசமாகாவெனனும்வசனமும—சென்மசஞ்சிதம வேவ-(அநந்த)ஜநநங்கட்குக் (காரணமான) சஞ்சிதகாமங்களை வெந்து நீறாகும்படி—தூய்ய ஞானதீ-சுத்தமான ஞானாக்கினி—ஃமெ என்ற வசனமும-தக்கருமெனனும வசனமும (ஆகிய இவவிரணடில)—நான துணிவது எப்படி-(இதுதான வாஸ்தவம, இஃதலலவென்று ஒன்றை) எவவாறு யானநிச்சயிப்பது.—எ-று.

சுருதிசமமதமானசிவபிரமங்களினயிக்கியஞானமெனபார. "தூயயஞானம." எனறார.

"செயதகாமங்களவிடாவெனறவசனம," என்றது, நாஹு-க்தயக்ஷீயதேகாமாகலபகோடிசதைரபி, எனபது முதலியவசனங்களை, இதறகு, பலத்தைப புசியாமறசுபாசுபகாமஙகளூறுகோடி கறபஙகளாலும நாசமாகாதெனபதுபொருள

"சென்மசஞ்சிதமவேவததூயய ஞானத்தீக்கமெனறவசனம" என்றது, கீதையின நான்காம அததியாயததில், "எறியாவெரி வருகானிடை யெரியாதன வெவவைதா,னறியாவறி வுடையோர்களு மறிவாரது விதுபோற், குறியாலவரு குணஞானமெ யனலேகொள வீடுமேல, பொறியால்வரு வினையானவை பொடியாயிதொர் பொருளே." எனறு ஸ்ரீபகவானால அருளிச்செய்யப்பட்டிருப்பது முதலிய வசனஙகளை எனறறிக. (௨௯)

[அதற்கு விடைகூறல்.]

சீவ பேதங்க ளளவிலை மைந்தனே செய்கையு மளவில்லை
ஆவ வாமவ ரவரதி காரங்க ளறிந்துபக் குவநோக்கிப் [நந்தம
பூவ லர்ந்தபின் பலங்கள்காட் டிவைபோற் பூருவஞ் சிந்தா
காவல் வேதங்க ளிரண்டையும் வசனிக்குங் காண்டமூ வகை க
[யாலே. (௩௦)

(இ-ள) மைந்தனே-மைந்தா—சீவபேதங்கள் அளவு இலே-(சீவததுவவுபாதிகளான அவித்தை,அந்தக்கரணங்கள் அளவின்மையி ன)சீவபேதங்களும் அளவில்லை—செய்கையும் அளவு இல்லை-(பிரவி ருத்திக்குக்காரணஙகளான அவரவர் அந்தக்கரணங்களிலுள்ள சுபம்,அசுபம, சுபாசுபமென்னுமவாசனைகள் அளவின்மையின் அவரவாகள்) செய்கைகளும அளவில்லை(ஆகையால்)—ஆவஆம்-அவைகளால்ஆவனவாகும—அவர் அவர் அதிகாரங்கள்- அந்தந்தச்சீவர்களுடைய அதிகாரஙகளை—அறிந்து-நிச்சயிதது--பக்குவம்நோக்கி-பக்குவங்களைநாடி-காவலவேதஙகள்-(கருணையினல்யாவரையும்)இரட்சியாநிற்குமவேதஙகள்--காண்டம் மூவகையாலே-(காமம்,உபாசனை,ஞானம என)மூன றுகூறுடையகாண்டங்களாலே--பூருவமசிததாந்தம் இரணடையும வசனிக்கும-பூருவபட்சம் சிததாந்தமெனனும இரணடையுமபிரதிபாதியாநிற்கும்—(இனி இதற்குபமானங்கூறுகின்றூா )பூஅலாநது-(முனனே) புஷ்பஙகளைத்தோற்றுவிதது—பின-பின்னே—பலங்கள் காட்டுவனபோல்-பலங்களைக்காட்டாநிறகும் (வாழைமுதலிய) விருட்சங்களைப்போல.—எ-று.

இங்ஙனங்கூறியவாற்ருல், "அநுபவிததாலன்றிச செய்தகாமஙகளவிடா." என்றவசனம காமகாண்டததின பூருவபடசம். "சனமசஞ்சிதம் வேகுத்துய்யஞானத்தீச்சுடுமென்றவசனம்." ஞானகாண்டத்தின்சித்தாந்தமென்பதுகருத்து. (௯௦)

[இதுவுமது.]

ஆன பாவிக ளடைவன நரகஙக ளவசிய மானலும்
தான மந்திர விரதவோ மங்களாற் றவிருமென் பதுபொய்
ஈன மாம்பல சன்மசஞ் சிதவினை யெததனை யானலும் [யோ
ஞான மாங்கனல் சுடுமென்ற மறைமொழி நம்பினல் வீடென்
[டே. (௯௧)

(இ-ள்) ஆன பாவிகள்-(சுபாசுபகர்மங்களுள்ளே அசுபகாமங்களைச்செய்பவ)ரானபாவிகள்—அடைவன நரகங்கள் - அடைவனவான நரகங்களானவை—அவசியம்ஆனலும்-நிச்சயமாகவுளவேனும் —தான மந்திர விரத ஓமஙகளால்-தானம்,மந்திரம்,விரதம்,எக்ஙம எ

னும பிராயச்சித்தங்களால்— தவிரும் என்பது பொய்யோ-(பாவநீங்கிவிடுவதால்) அவைவாராதொழிந்துபோமெனறு(சாஸ்திரங்)கூறுவது அசத்தியமா(அலலவே)—(அதுபோல) ஈனம் ஆம்-இழிவான—பலசனம சஞ்சிதவினை-அநந்தஜன்ம(ங்கட்குக்காரணமாகிய) சஞ்சிதகாமங்கள்—எத்தனை ஆனுலும- அநேகங்களாயிருப்பினும்— ஞானமஆம் கனல-(சமுசயரகிதமானபிரமான்மவயிக்கிய)ஞானமாகிய அக்கினியானது—சுடுமெனறமறை மொழி-(அவற்றைத)தகித்துவிடுமென்றுகூறும் வேதசித்தாந்தவசனத்தை — நமபினல்—வீடு உணடே-அவைநீங்கி மோட்சமுண்டாதலதிணணம.—எ-று.

"மலமேவிய தீவினை யினவலியான் மகிழும்பாப தத்திலி ருந்தவன, குலமேவிய தெனபுல வாணாகளுங கொடிதாயநர கங்குடி யேறினரே." எனபது முதலிய சுருதிபபிரமாணத்தாற பாவிகள நரகமடைவது சித்தமாயிருத்தலின, "ஆன பாவிக ளடைவன நரகஙக ளவசியமானுலும." எனறும, தானமந்திரவிரதவோமஙகளாறபாவநதவிரகவென, காமகாணடத்தில ஈசுரன் விதித்தபடி அவைசெயதோர்க்குத்தவிரநதேயிருப்பதைச சாஸ்திரத்தும் உலகத்தும நீககணடேயிருக்கின்ருரெனபார, "தான மந்திர விரதவோ மஙகளாறறவிருமென பதுபொய்யோ" எனறும,தத்துவஞானத்தாற் சகலசஞ்சிதகாமங்களும நாசமாகுகவெனும ஈசுரசஙகற்பமான ஞானகாணடசித்தாந்தத்தைநமபினுல அவா சத்தியசஙகறபரென்று சாஸ்திரஙகளிறபிரசித்தமாகவிருத்தலின, அவாசங்கற்பப்படி ஞானத்தாலவைநீஙகி நீ அமிர்தமயமாவை, என்பார், "ஞான மாங்கனல் சுடுமெனற மறைமொழி நமபினுல வீடுண்டே." என்றுங கூறினர்.

கர்மகாணடத்தின்பூர்வபட்சம அதன்சித்தாந்தமாகிய பிராயசசித்தத்தாலேயே நீஙகாநிற்பதாற சகலசஞ்சிதகர்மேநதனஙகளையும ஞானக்கினிசுடுமெனனும, ஞானகாண்டசித்தாநதத்தை நமபியநுஷடிக்கில அவையெனநீஙகா, சித்தமாய்நீங்காநிற்குமெனத்துணிந்து சந்தேகம் ஒழிதியெனபதாம. (௯௧)

(உ0அ) [இஙஙனம் ஞானத்திற்கு அற்புதமான மஹாத்மியமிருக்கஅதனை அடைந்துய்யாமல் அறிவுடையோரும் கர்மப்படுகுழியில் ஆழ்தற்குக் காரணமெனனையோ வெனவினுதல்.]

என்ம னந்திருக் கோயிலாத் தினங்குடி யிருந்தருள் குரு
மூர்த்தி, சென்ம சஞ்சித வினைகள்வே ரறுத்திடுந் தேவரீர்
மெய்ஞ்ஞானம், தன்ம யந்தரு மகிமையை விபுதராஞ் சமர்
த்தரு மறியாமல், கன்ம மாங்குழி யினில்விழுந் தழிகின்ற
காரண முரையீரே. (௯௨)

(இ-ள்) என் மனம்-எனது இருதயத்தையே— திருக்கோயி
லா-சிறந்த ஆலயமாகக்கொண்டு—தினம குடி இருந்து அருள்-நாளு
நகுடியாயெழுந்தருளியிராநிற்கும—குருமூர்த்தி-குருவே— தேவரீர்
மெய்ஞ்ஞானம-தேவரீர் (அருளாநின்ற) தத்துவஞானமானது—செ
ன்ம சஞ்சிதவினைகள் - ஜநநத்திற்குக்காரணமான சஞ்சிதகர்மங்களி
ன்—வேர அறுத்திடும்-மூலமாகிய வலிதலைதயைஅரியாநிறகும—தன
மயம்தரும-(பரிபூர்ண பரமாநந்தபரமசிதளமான)பிரமத்தினகணை
பேதமாயிருக்கும் (மோட்ச) சாயுபிராசசியததைதயுக்தரும்—மகிமை
யை-மஹததுவத்ததை—விபுதா ஆம சமாததரும-மிகக்கற்றோராயக்கு
ணதோஷங்களைப்பகுத்தறியவலலோரும—அறியாமல்-அறிந்ததனை
யபெற்றுய்யாமல் (அலலது உணர்நது அதனையடைதற்குக்காரணமா
ணநிவிாததிமார்க்கத்தில்,புதியமலா மெலலணையிறபோலப்) பொருந
தாமல—கன்மம் ஆம் குழியினில-காமமாகியபடுகுழியில்—விழுநது
அழிகின்ற-விழுந்துவருந்துகின்ற--காரணம உரையீர-காரணத்தைய
ருளவீராக.—எ-று. (௯௨)

[அதற்கு விடைகூறல]

அழிவி லாததற் பதந்தனை மைந்தனே யகமுகத் தவர்சோ
வா, வழிந டப்பவர் பராமுக மாயினுன் மலர்ந்தகண் ணிருந்
தாலும, குழியில் வீழ்வர்கா ணபபடி வெளிமுகங் கொண்
டோ மிகளானோர், பழித ரும்பிற விக்கட லழுந்துவர் பரக
தி யடையாரே. (௯௩)

(இ-ள) அழிவிலாத தற்பதந்தனை-நித்திய நிரதிசயானந்தரூப
மான பிரமபதத்தை—மைந்தனே—அகமுகத்தவர் சேர்வர்-(உள்ளி
லும, புறனிலும்) அகமுகமுடையோர அடையாநிற்பர்—வழி நடப

பவா-மார்க்கத்திற்செல்பவா— பராமுகம் ஆயினல்-பராமுகமாயின —மலாந்த கண் இருந்தாலும்-விகசிதமான நேத்திரங்களிருப்பினும, —குழியில் வீழ்வாகாண் - எப்படிக்குழியின்கண் வீழாநிற்பரோ— அபபடி—வெளி முகங்கொண்டு-(உள்ளினும், புறனினும்) பகிர்முக முடையராய்—காமிகள ஆனோர்-சுவாக்ககாமிகளாயினோ—பழிதரு ம் பிறவிக் கடல அழுநதுவா-(கருவிநூறபயிறசிவலியால்விரிந்தவறி விருநதாலும)பழிக்கத்தக்கபிறவிக்கடலிலமிழ்ந்தாநிற்பர்—பரகதி அ டையாா-மோட்சமடையாா.—எ-று.

"மலர்நத்கணணிருநதாலும." எனறதற்கியையவிரிந்த அறிவிரு நதாலுமெனபது வருவிததாம

அபிப்பிராயம.

நாநாவானவை ஈண்டறபமுமிலலையெனனுஞ்சுருதியாலமிததை யெனறுவது, ஆனமாவே யீதனைததுமென்னுஞ்சுருதியால தானெ னறுவது வாங்காநதரபபிரபஞசததைப்பாாப்பதுஅகமுகம். அவிவே கததாலபிரபஞசததைசசததியமெனறும, அதில்தேகேந்திரியாதிகள தானெனறும, புததிரதாராதிகளதனதெனறும் இப்படிப்பேதமாகப பாாபபதுபகிர்முகம; இபபகிர்முகபபாாவையால் நசுவரமானசுவாக காதிகளில காமமுடையராயிருக்கையே காமப்படுகுழியில வீழவதற் குக்காரணம் எனபதாம.

"பரகதியடையாா"என்பதறகு, உ-ம வாசிட்டம்."வழிபடு... னைவிட்டு மறறுளநூல்களெனனுங, குழிகளிற்புரணடஞ்ஞானக கு ணததினுற்பிறப்போாகெலலா,மொழிவறவொருவாசெயதற குறித... னறுயததானேயுண்டாங, கழிதலிறபரமவினபங கறபங்களாலுங்கூ டா" எனவரும மற்றும வருவனவறறுற்காண்க. (௩௩)

(உ0௧) [ஈசுரனசுதநதரன், அந்தாயாமியெனறு சாஸதி ரங்களிற்கூறப்படுதலின அசுதநதரரான சீவாகண்மீது தவ றேதெனவினுதலும அதற்குவிடைகூறத்தொடங்கலும. ]

சிறந்த நன்மையுந் தீமையு மீசனுர் செய்விக்குஞ் செயல ன்றோ, பிறந்த சீவர்க ளென்செய்வா ரவாகண்மேற பிழை சொலும வழியேதோ, அறந்த தேசிக மூர்த்தியே யெனறி டிற் சுருதிநூற் பொருண் மார்க்கம, மறநத மூடாகள வச னிக்கும பிராந்திகாண் மைநதனே யதுகேளாய். (௩௪)

(இ-ள்) சிறந்த நன்மையும் தீமையும்-(யாவர்க்கும் துய்பச்)சிறந்தநல்வினையும், (இழிந்த) தீவினையும்—ஈசனுர் செய்விக்குஞ் செயல் அன்றோ-(சூத்திரதாரியைப்போலத் தந்தாரனுன) ஈசான் செய்விக்குஞ் செயலல்லவா—பிறந்த சீவர்கள்-(சூத்திரப்பாவைபோலும், சுதந்தரமிலராய் அவன் ஜூபித்தபடியே) ஜநித்தசீவர்கள்—என் செய்வார்-யாது செய்வர்—அவர்கள் மேல்-அச்சீவர்கண்மீது-பிழை சொலும வழி ஏதோ-குற்றங்கூறும் நெறி யாது காரணமோ—துறந்த தேசிக மூர்த்தியே என்றிடில்-(அனைத்தையும், நீத்த (அற்புதமகிமையுடைய) குருமூர்த்தியேயென்று வினவிடில்—சுருதி நூல் பொருள் மார்க்கம்-வேதசாஸ்திரார்த்தநெறியை—மறந்தமூடர்கள்-மறந்த அறிவிலிகள்—வசனிக்கும் பிராந்தி காண்-சொல்லும் பிராந்திகாண்—மைந்தனே அது தேரய்-மைந்தா அதை (நீ) கேட்பாய்.—எ-று.

நன்மை தீமை—சுபாசுபக்கிரியை.

"பிராந்தி"—அயதார்த்த ஞானம.

"அது." என்றது சுருதிநூற்பொருண் மார்க்கம். (ருச)

[ஆனல் வேதசாஸ்திரார்தவழி எதெனிற்கூறுகின்றூர்.]

இகழ்ந்த வீசனுர் சிருட்டியுஞ் சீவனா சிருட்டியும் வெவ்வேறே, சகந்த னிற்பொது வீசனா சிருட்டிகள சராசரப் பொருளெல்லாம், அகந்தை யாமபி மானங்கள் கோபங்க ளாசைக ளினைவெல்லாம், இகழுந்த சீவனுர் சிருட்டிக ளாகுங் கா ணீசனுர் செயலன்றே. (ருரு)

(இ-ள்) இகழ்ந்த ஈசனுர் சிருட்டியும் - சுத்தப்பிரமமாகவிளங்காநின்ற ஈசுரனது சிருஷ்டியும்—சீவனுர் சிருட்டியும்-சீவனுடையசிருஷ்டியும்—வெவ்வேறே-வேறுவேறும்— [அவையாவையெனின்;-] சகந்தனில் பொது-சகத்தில் (யாவர்க்கும்) பொதுவான—ஈசனுர் சிருட்டிகள்-ஈசுரனுடைய சிருஷ்டிகள்—சர அசரப் பொருள் எல்லாம்-நடப்பன, நிற்பனவாகிய பொருளனைத்தும்,—அகந்தை ஆம் அபிமானங்கள்-(தேகாதி[illegible]) [illegible]யுமகந்தையும், (இதனுல் புத்திரவித்தாதிகளில்) [illegible]மமதாபிமானங்களும்—கோபங்கள் ஆசைகள்-கோபங்களும், ஆசைகளும்—இவை எல்லாம்-ஆகிய அந்தக்கரணகற்பனைகளனைத்தும்—இகழ்ந்த சீவனுர் சிருட்டிகள் ஆகும்

காண்-உயர்க்கேதராகிய்த்து வெறுத்த சீவனுத சிருஷ்டியாம்—ஈச ஞா செயல் அன்றுசீவனுடையசிருஷ்டியல்ல—எ-று.

மாயாமயமானஈசரசங்கற்பரூபமுள்ளசிருஷ்டி அத்தக்கரணத் தினபரிணமமாகிய அகங்காரமுதலியவை சீவசிருஷ்டியென்பது வேத சாஸ்திரசித்தாந்தமாம் என்க. (௫௫)

[ஈசரசிருஷ்டி, சீவசிருஷ்டியாகவிரும் தன்கு நிர்குகளைக்கூறுகின்றார்.]

மூவ ராம்பரன் சிருட்டிக ளுயிர்க்கெலா முத்திசா தன மாகும், சீவ ரூர்செயுஞ் சிருட்டிக டங்களைச் செனிப்பிக்கும பிணி யாகும், தாவ ராதிக ணசித்திடி லொருவர்க்குஞ் சன னங்க ணசியா வாங், கோப மாதிக ணசித்திடிற் பந்தமாங் கொடும்பிற விகள் போமே. (௫௬)

(இ-ள்) மூவர் ஆம் பரன் சிருட்டிகள்-திரிமூர்த்திரூபமான ஈசரனுடையசிருஷ்டிகள் — உயிர்க்கு எலாம்-உயிர்களுக்கெல்லாம்— முத்தி சாதனம் ஆகும-மோட்சமடைதற்குச் சாதனங்களாம— சீவ ஞா செயும் சிருட்டிகள்-சீவகற்பிதமான சிருஷ்டிகள்—தங்களைச்செ னிப்பிக்கும் பிணி ஆகும்-(தேவ மநுட திரியக்காதியோனிகளிற்)தங் களைப் பிறப்பிக்கும்பந்தங்களாம்—[ஈசரசிருஷ்டிமோட்சசாதனம், சீ வசிருஷ்டிபந்தகாரணம் என்றதற்குயுக்திகூறுகின்றார்.] தாவர ஆதிக ள் நசித்திடில்-(ஈசரசிருஷ்டியான)தாவரமுதலியவை நாசமாயின்— ஒருவர்க்கும்-யாதொருவர்க்கும்—சனனங்கள் நசியா-ஜனனங்கள நாசமாகாவாம்—கோபம் ஆதிகள் நசித்திடில்-(சீவசிருஷ்டியான) கு ரோதமுதலியவைநாசமாயின்—பந்தம் ஆம் கொடும் பிறவிகள் போம- பந்தமாகிய கொடியஜநனங்களுநசமாம்,—எ-று.

"படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை." என்று தேவா ரத்திலும், "குலவு மூவ ருருவமுள் கொண்டவே." என்று பாகவத த்திலுங்கூறியிருப்பதுபோல இங்கும், "மூவராம்பரன்." என்றார். "முத்திசாதனம்." என்றது, குருசாஸ்திராதிரூபத்தையென்க. (௫௬)

[கூறிப்போர்ந்தற்கு முக்கியவுபாயம் இனிக்கூறுகின்றார்.]

அச்சுவத்தமென் றொருமர மதிலிரண் டரும்பறவை
களவாழும், நச்சு மங்கொரு பறவையம் மரக்கனி நன்றுநன்
றெனத்தின்னும், மெச்சு மங்கொரு பறவையின் றுதென வி
யங்கியப் பொருளாக, வைச்சு மாமறை சிவனை யீசனை வருத
தவா றறிவாயே. (௩அ)

(இ-ள்) அச்சுவத்தம் என்று ஒருமரம்-அரசென்றுசொல்லப்பட்டஓர்விருட்சமுண்டு—அதில்-அவ்விருட்சத்தின்கண்—இரண்டு அரும் பறவைகள் வாழும-இரண்டரியபட்சிகள் ஆசிரயித்திருக்கும்—அங்கு-அவ்விருட்சத்தினகண்ணுள்ள(இரண்டுபட்சிகளுள்,)—நச்சுய-(போகங்களை) விரும்புகின்ற—ஒருபறவை-ஓர்பட்சி—அம்மரக்கனி-அவ்விருட்சத்தினகனிகளை—நன்று நன்று எனத் தின்னும்-(இது) நல்லது(இது)நல்லது என்றுபுசியாநிற்கும்—மெச்சும் -(யாவராலும்) கொண்டாடப்பட்ட—அங்கு ஒரு பறவை-அவ்விருட்சத்தின்கணுள்ளமற்றோர்பட்சியானது—தின்னாது என-(அவ்விருட்சத்தின்கனிகளைப்)புசியாதிருக்குமென்று—வியங்கியப்பொருள் ஆக வைச்சு-வியங்கியார்த்தமாகவைதது—மாமறை-மகத்துவமுடைய முண்டகோபநிடதமானது—சிவனை ஈசனை-சிவனையும்ஈசுரனையும்—வருத்த ஆறு அறிவாய்-பகுத்துக்கூறியவழியை(நீவிசாரித்)தறிவாய்.—எ-று.

வியங்கியப்பொருளெனினும், குறிப்புப்பொருளெனினுமொக்கும்.

(உகo) மூலசுருதியின் பாஷியார்த்தம்.

ஸியம்ய, ஸியாமகபாவப்பிராப்திரூபமான கமனத்தால், அல்லது பட்சியைப்போலவிருட்சத்தை ஆசிரயித்திருப்பதாற் சிவேசுரரைப், "பறவை" என்றது. விருட்சம்போலச்சேதிக்கப்படுந்தருமமுடையதாயிருத்தலாற்சரீரத்தை, "விருட்சம்" என்றது. சரீரரூபவிருட்சமானது மேலானபிரமத்தைமூலமாகவுடையது: கீழானபிராணன்முதலியவற்றைச்சாகைகளாகவுடையது: தனதுநித்தியமயின்மையின், அச்சுவத்தமென்னும்நாமமுமுடையது: அஞ்ஞானபரியந்தம்இருப்புமுடையது: க்ஷேத்திரமென்னும்நாமமுமுடையது: சர்வப்பிராணிகளின்கர்மபலங்கட்கும்ஆசிரயமானது: பட்சிகள்போலஅவித்தைகாமகர்மங்களினுடையவாசனைக்கு ஆசிரயமாகிய லிங்கசரீரவுபாதியுடையசிவனும், ஈசுரனுமாகியஇருவருங்கூடியிருப்பது; கூடியிருக்கும்

அவ்விருவருள்ளும், லிங்கசரீரரூபவுபாதியுடையதைஜஸப்ராஜ்ஞனெ
ன்னுஞ்சீவனே அவ்விருட்சத்தின்கண் ஆசிரயித்திருக்குங்கர்மஜங்கிய
ங்களாகிய சுகதுக்கமயமான அநேகவிதவேதனைகளின் அநுபவரூபமெ
ன்னும்இஷ்டபலன்களை அவிவேகத்தாற்புசிக்கின்றனன். நித்தி
யசுத்த,நித்தியபுத்த,நித்தியமுத்த சுபாவமுடையசர்வஞ்ஞனாகிய சுத்த
சத்துவகுணப்பிரதானமான மாயாவுபாதியுடையவீசரன், புசிக்கின்றி
லன. ஏனெனின்? அவ்வீசரன் நித்தியமானசாட்சித்தன்மையின் சத்
தாமாத்திரத்தால் போக்கியம், போக்தாவென்னும் இவ்விரண்டின் பி
ரேரகனாயுள்ளான். ஆகலின், அவன்புசிக்கின்றிலன், விருட்சத்திற்கு அ
நியனாய்க்கேவலம்பார்ப்பவனாகவேயிருக்கின்றனன் அவனுடையத
ரிசனமாத்திரத்தாலேயே இராஜாவைப்போலப்பிரேரகத்தன்மைசித்
திக்கிறது, என்பதுமூலசுருதியின்பாஷியார்த்தம்.

(௨௧௧) வியஞ்சனவிருத்தியால் யாதொருபொருள் தோன்றுகிற
தோ அதுவியங்கியப்பொருளெனப்படும்.

வியஞ்சனவிருத்திக்கு உதாரணம். சத்துருவினகிரகத்திற்போ
ஜனஞ்செய்யத்தம் புக்க புருடனை, அவனிடத்து தனபுடைய மற்றொருபுரு
டன் பார்த்து விஷத்தைப்புசியென்புழி,விஷத்தைப்புசியென்பதற்கு
நஞ்சையுண்ணு என்பது சக்திவிருத்தியாற் போந்தபொருளாம.
வக்தாவினுடையதாற்பரியமோ,அதுவன்று: புசிக்கவேண்டாமென்ப
தாம். போஜனத்தில் சக்தியுடைய பதத்தின அபாவத்தில் சம்பந்தத்
தினபாவத்தால் லட்சணையென்னவுங்கூடாது. ஆதலால், சத்து
ருகிரகத்திற் போஜனநிவிர்த்தி வாக்கியத்தின் வியங்கியார்த்தமாம
அதுபோலப்பறவையென்னும் பதத்தின் சக்திவிருத்தியானும்,இலட்
சணவிருத்தியானும் சீவேசுரர்பெறப்படாமல் வியஞ்சனவிருத்தியி
னாற் பெறப்படுதலின், "வியங்கியப்பொருளாக." என்றார.

வியஞ்சனவிருத்தி—பிறிதுமொழிதல் என்னும் அலங்காரமாம்
ஒட்டு அணியெனினும் ஒக்கும். (௫௮)

(௨௧௨) [இவ்வாறு, சுருதி யுக்தி அநுபவங்களால் காமக்கு
ரோதாதிகள் சீவன்செயலேயன்றி சிவன்செயலன்
றெனக்கூறி, இவ்வண்ணம் அறியாதோர்க்குவரும் அன
ர்த்தத்தையும், அறிந்தோர்க்குவரும் க்ஷேமத்தையும்
இனிக்கூறுகின்றார்.]

இந்தச் சீவனுள் வருமறுபகையெலா மிவன்செய லென்னுமல், அந்தத் தேவனுள் வருமிவையென மூடர்க ளதோகெதி யடைவார்கள், இந்தச் சீவனுள் வருமறுபகையெலா மிவன் செயலல்லாமல், அந்தத் தேவனு ளன்றெனும் விவேகிக ளமலவீ டடைவாரே. (௯௧)

(இ-ள்) வெளி.

அறுபகையெனினும், அரிசட்வர்க்கமெனினும் ஒக்கும்.

தற்செயலான காமமுதலிய ஈனகுணங்களைச் சர்வஞ்ஞத்வமுதலியகல்யாணகுணங்களையுடைய சிவச்செயலாகச்சொல்புவர், பின்னராயினும் அப்படிச்சொல்வதுகுற்றமென்றுகருதி அவைநீங்கிக்ஷேமமடையச் சன்மார்க்கமுயற்சியடையாமையின், தனது உடற்கட்பொருந்திய நோய்க்குச் சிகிச்சைதேடாமல் அபத்தியஞ்செய்துவருபவன் அந்நோய் அதிகரிக்கப்பெற்றுப்பின்னும் நாநாவிததுன்பத்துளாழ்வதுபோலப் பாவம் அதிகரித்துப் பின்நரகமுதலிய நாநாவித துன்பங்களையடைதலால், "அதோகெதியடைவார்." என்றும், அவ்வீனகுணங்களைத் தற்செயலாகவேசொல்லும் விவேகிகள் அவைநீங்கிக்ஷேமமடையக்கருதிச் சன்மார்க்கத்திற் பிரவிர்த்தித்தலாற் புண்ணியமிகுந்து சித்தசுத்தியுடையராய் ஞானமடைந்து அஞ்ஞானத்தினும், அதன்காரியமான அனர்த்தத்தினும்நின்றுவிடுபடுவதால், "அமலவீடடைவார்." என்றுங்கூறினர்.

"மூடர்களதோகெதியடைவார், விவேகிகளமலவீடடைவார்." எனக்கூறினும், மூடர்கள் அதோகெதியை விரும்பாமையாலும், விவேகிகள் அமலவீடடையத்தாமேசுதந்தரமுடையராகாமையாலும், உலகில் அரசனானவன் தனது ஏவற்படி நடவாதோரைத்தண்டித்து நடப்போரைச் சுகத்தியமடைவிப்பதுபோல, ஈசனும், தமதருளாணையில விலக்கியவற்றைச்செய்து விதித்தவற்றைச் செய்யாதோரை நரகமுதலிய துன்பங்களையடையச்செய்து, விலக்கியவற்றைச்செய்யாதொழித்து விதித்தவற்றைவிருப்பமாகச்செய்பாரிற்பவரைப் பரமசுகத்தியமடையப்பண்ணுகிறனென்பது பெறப்படுகின்றது. (௯௧)

நும ஈசுரன்செய்யும் அருள் முனிவுகளிரண்டுங் கருணையேயல்லாம
ல்பாரபட்சமானவிஷமதிருஷ்டியன்றென்பதாம். (௬௦)

[ஈசுரன், விஷமதிருஷ்டியின்றி யாவரிடத்தும் சம
திருஷ்டியுடையனென்பதை இன்னும,
அநேகதிருஷ்டாந்தங்களால்
வற்புறுத்து
கின்றார்.]

மனைவிளங்கறு மைந்தனே கற்பக மரங்கனல் புனன்மூன
றும், தனையடைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர
த்தாளும, அனைய வீசனு மடைந்தவர்க் கருள்செய்வ னகன்ற
வர்க்கருளசெய்யான், இனைய குற்றங்க ளெவர்குற்ற மாகு
மென் றெண்ணிநீ யறிவாயே. (௬௧)

(இ-ள) மனை விலகுரு அறும் மைந்தனே-குடும்பமாகிய (ந
டை)விலங்கறப்பெற்றமைந்தா—கற்பகமரம் கனல் புனல் மூன்றும
(பாரபடசமில்லாமலிருந்து) தனை அடைந்தவர்வறுமையும்சீதமும்தாக
மும—தவிர்த்து ஆளும-(முறையே)தவிர்த்துஇரட்சிக்கும்—அனைய
ஈசனும-அவைபோலும (ஒருவரிடத்துவிருப்பும், ஒருவரிடத்துவெறு
ப்புமில்லாத) ஈசுரனும்—அடைந்தவர்க்கு - (பாரபட்சமில்லாதவனெ
ன்றறிந்துதன்னைவேதத்தின்காண்டத்திரயவழியால்) ஆராதிப்பவர்க்
கு—அருள் செய்வன-அநுக்கிரகம்பண்ணுவன்—அகன்றவர்க்கு அரு
ள்செய்யான்-(தன்னைஆராதனஞ்செய்யாது)நீங்கினோர்க்கு அநுக்கிர
கம்பண்ணான்—இனைய குற்றங்கள்-இத்தன்மையானதோஷங்கள்—
எவர் குற்றம் ஆகும் என்று-யாவருடைய குற்றங்களாகுமென்று—
எண்ணி நீ அறிவாய்-நீவிசாரித்தறியக்கடவாய்.—எ-று.

"அனைய வீசனு மடைந்தவர்க் கருள்செய்வ னகன்றவர்க் கரு
ள்செய் யான்", என்பதற்கு, உ-ம். பகவற்கீதை. "எப்பொரு ட
னக்கு மியானொத் திருத்தலா லெனக்கி யாரு, மொப்பர்க ளினிய ரி
ன்னா தாரெனவொருவ ரில்லை, யிப்படி யறிவு மன்பர் பக்கலே யா
னு நிற்பே, னப்படி யவரு மென்பா லன்பினை யமர்ந்து நிற்பார்." எ
னவரும். மற்றும்வருவனவற்றுற்காண்க.

"இனைய குற்றங்க ளெவர்க்குந்த மாகும்." என்பதற்குடம்பட்டி னத்துப்பிள்ளையார், திருவிடைமருதூர்மும்மணிக்கோவை. "பொரு ளிடங்கொண்ட பொன்னி புரக்கு,மருதிடங் கொண்ட மருதவாணை, நின்னது குற்ற முளதோ வின்னினைக், தென்னருங்கோடி யிடர்ப் பகை களைந்து, கன்றுறு செற்றக் காலனை வதையா, இறப்பை யும பிறப்பையு மிகழ்ந்து சிறப்பொடு, தேவராவின் கன்றெனத் திரி யாப், பாவிக டமதே பாவம் யாதெனின், முறியுற்பெறுக்கண் மு ப்பழங் கலந்த, வறுகவை யடிசி லட்டினி திருப்பப், புசியா தொ ருவன் பசியால் வருந்துத,வயினியின குற்ற மன்று வெயிலின்வை த,தாழ்ந்த தெண்ணீர் காற்றபிட் டிருப்ப,மடாஅ ஒருவன்விடாஅ வேட்கை,தெண்ணீர்க் குற்ற மன்றுகண் ணகன்று, தேன்றுளி சித றிப் பூத்துணர் துறுமி, வாதுகங் கிடத சோலை கிடப்ப, வெள்ளிடை வெயிலில் புள்ளிவெயர் பொடிப்ப வடிபெயர்த் திலோ னொருவ, னொடிது வருந்துத னிழற்றீங் கன்றே." என வரும். மற்றுமவருவ னவற்றுற்காண்க. (௩௧)

(௨௧௪) [ஆதலின், அக்குற்றம்நீங்கியுய்யச்செவர்களாற் செய்யற்பாலதென்னையோ வெனின்;—அதற்குக்கூறு கின்றார்.]

ஒன்று கேண்மக னேபுமான் முயற்சியா லுறைத்துமா நு டர்க்கீசன், நன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்துநல் லவர்பின்னே, சென்று துட்டவா தனைவிட்டு விவேகராய்ச் செனித்தமா வையைத்தள்ளி, நின்று ஞானத்தை யடைந்த வா பலங்கள்போ நிச்சய மிதுதானே. (௩௨)

(இ-ள்) மகனே—ஒன்றுகேள் - (சகலஞானசாஸ்திரங்களின் சாரபூதமான) ஒருபாயத்தைச்(சொல்லுகிறேன்)கேட்பாய்—புமான் முயற்சியால் உறைத்து-புருஷப்பிரயத்தனத்தாலமுக்கி— மாநுடாக் கு ஈசன் நன்று செய்யவே-மநுடர்களுக்கு ஈசுரன் பிரமாணத்தங்கொ டுத்தற்பொருட்டே—காட்டிய-அருளிச்செய்த—நூல் வழி நடந்து- வேதத்தின் (காண்டத்திரய) நெறியில் நடந்து—நல்லவர் பின்னே சென்று-(பின்பிரமநிஷ்டர்களான) பெரியோர்கள் பிறகே திரிந்து— துட்டவாதனை விட்டு-(அப்பெரியோர்கள் சகவாசத்தாற் சாந்தியாதி

னுபயோகம ஞானத்திலென்று. அப்படியே தற்பதார்த்தம், துவம்பதார்த்தங்களையறிந்தாலல்லாமல் அபேதஞானம் உண்டாகாது. இவ்வாற்றால், விவேகாதி நான்குசாதனங்களினுபயோகம் சிரவணத்திலும், சிரவணாதிகளான்குசாதனங்களினுபயோகம் ஞானத்திலுமிருப்பதால் எட்டும் அந்தரங்கசாதனங்கள்; யாது ஞானத்தில் அல்லது சிரவணத்தில் பிரத்தியட்சப்பயனையுடைத்தாகாமல் அந்தக்கரணசுத்தியாகிய பயனையுடைத்தாயிருக்குமோ அதுஞானத்திற்குப் பகிரங்கசாதனமெனப்படும். இப்படிப்பட்டவை எக்ஞாதிகர்மங்களாம்.

எப்படியும், எக்ஞாதிகர்மங்கள் சம்சாரத்திற்குச்சாதனங்களாகலின், அவைகளாலந்தக்கரணசுத்தியுளதாமெனலாகாது. அப்படியானாலும் சகாமபுருஷனுக்குச்சம்சாரத்திற்கேதுவாம்: நிஷ்காமனுக்கு அந்தக்கரணசுத்திக்கு ஏதுவாம். இவ்வாற்றால், நிஷ்காமபுருஷனுக்கு அந்தக்கரணசுத்திவாயிலாக ஞானத்திற்கேதுவாகலின்,பகிரங்கசாதனமென்றும், விவேகாதிகள் அந்தரங்கசாதனமென்றுஞ் சொல்லப்படும். தூரமாவுள்ளதற்குப்பகிரங்கமென்றும், சமீபமாவுள்ளதற்கு அந்தரங்கமென்றும்பெயர். எக்ஞாதிகர்மங்களையும் அவைகளின்சாதனங்களான ஸ்திரீ, தன, புத்திராதிகளையும்விடில் அவனஞானத்துக்கு அதிகாரியாவன். ஞானத்திற்கு அதிகாரியிடத்து எக்ஞாதிகள்பொருந்தாமையின், அவை தூரமாம்; விவேகாதிகள ஞானாதிகாரியிடத்துப்பொருந்தியிருத்தலின், சமீபமாம். இவற்றிலும் பேதமுள அவையாவையோவெனின்;—விவேகாதிகளினுபயோகம சிரவணத்திலும, சிரவணாதிகளினுபயோகம் ஞானத்திலுமிருப்பதால் விவேகாதிகளைநோக்கச்சிரவணாதிகள் அந்தரங்கமாம். சிரவணாதிகளைநோக்க விவேகாதிகள் பகிரங்கமாம். எப்படியும், விவேகாதிகளும் ஞானத்திற்கு அந்தரங்கசாதனங்களென்றே சர்வகிரந்தங்களிலுங்கூறப்பட்டுள்ளன: பகிரங்கமாகக்கூறப்படவில்லை; அப்படியானாலும்,விவேகாதிகட்குஞானத்தின்சாதனமானசிரவணத்தில பிரத்தியட்சப்பயனிருக்கின்றது. சிரவணாதிகளைப்போல விவேகாதிகளும் சிஞ்ஞாசவினுலடையற்பாலனவேயாம்: எக்ஞாதிகளைப்போலத்தன்னாற்பாலனவல்ல; ஆதலால், அந்தரங்கமென்றனர்; எக்ஞாதிகளைநோக்கவும்அந்தரங்கமாம்: ஆகலின், அந்தரங்கசாதனத்திற்சேர்த்துக்கூறினர்.

விசாரத்தினாற்பார்க்கில் ஞானத்திற்குமுக்கியவந்தரங்கசாதனம் தத்துவமசியாதிமகாவாக்கியங்களாம்: சிரவணாதிகளுமல்ல, என்னை? யுத்தியினால் வேதாந்தவாக்கியங்களின் தாற்பரியநிச்சயம் சிரவணமெனப்படும். ஜீவப்பிரமங்களின் அபேதத்தின்சாதகமும், பேதத்தின்பாதகமுமாகியயுத்திகளால் அத்துவிதப்பிரமத்தின்சிந்தனம் மனனமென்றுசொல்லப்படும். அநான்மாகாரவிருத்தியின் வியவதானரகிதமான பிரமாகாரவிருத்தியின்ஸ்திதி நிதித்தியாசனமென்றுசொல்லப்படும். நிதித்தியாசனத்தின் பரிபாகாவஸ்தையையே சமாதியென்பர்; இதனால் சமாதியும் நிதித்தியாசனத்தில் அந்தர்ப்பாவமாமவேறுசாதனமல்ல. இந்தச்சிரவண மனன நிதித்தியாசனங்கள் ஞானத்திற்குச்சாட்சாத்சாதனமல்ல;பின்னை எப்படிப்பட்டதெனின்;—புத்தியினதுதோஷமாகிய அசம்பாவனை, விபரீதபாவனைகளின் நாசகமாம். [சமுசயத்தை அசம்பாவனையென்பர்.] இப்படி விசாரசாகரத்திற்கூறப்பட்டிருக்கின்றது.

இவ்வபிப்பிராயத்தினாலேயே இவரும சிரவண, மனன, நிதித்தியாசனங்களால் ஞானம்வருமென்னாது, "இடைவிடா விசாரத்தால வந்தடைக்கிடும்." என்றார்.

"விசாரமதாம."என்றதற்கு,உ-ட. வாசிட்டம."கெடாத சிறகணை ஞானிதான் னினர்மே லவர்க ளுடனேதான,விடாதிவ் வுலகே தியாமாரன றுலைக்க மெல்ல விசாரிப்பாய், தடாதுட பொருடேர் விததைக்கு விசாரந் தானே தனிஞானங், கடாவி யறியத் தக்கதிற காணும பாவின் மதுரம்போல்." எ-ம், "முனிய கனறபின னெயினாகோன் றனியிட மூக்கிகன் மதியாலே, யனிச காலனென்ப தாரெனனாடின னிமுதன் முடியீறாந், தனியு டமைபகா னென்பது புதலையாஞ் சடவுடல் கான்கேனுன், றனிசெ யிவவுட லசேதனக் தலைசமுதற் றன்னுமா தலினன்றே." எ-ம், "கரண மீரைந்து மன்னியகுசடமெனுங் கணக்கிற ஞனைறித், திரனெனக்கில வுடன்முத ஞனலன சேடமே தெனநோக்கில், விரவு சிவனே சேடமா யின்னுமமவேறென்றுற் றெரிகின்ற, தாவி தானவே றன்றிறும் றெரியுயிதுயர்ந்தகத் துவமாகா." எ-ம், "தெரிவ தாகிய விதனையு மகற்றுவன் றெரிபொரு ளுளதோ, பெரிது சேடமாய் விகற்பமற் றமலமாம பேரறி வியாளுரு,மரிய யன்சிவ னிந்திர னந்தக ஞதியா மிடத்தோறு

ஞு, சரிகொண் முத்திநூ லுவெண விநூமாற் ஜேன்றுமிவ் வுயர்போ
தம்." ௭-ம், வரும். மற்றும் வருவனவற்றுக்காண்க. (௬௩)

(உ௬௪) [பிரமான்மவைக்கிய ஞானத்திற்குவிசாரமேமுக்
கியவந்தரங்கசாதனமாமென்று கூறிய
தைத்தானே இச்செய்யுளுணர்
த்தி, ௬௫-ம் செய்யுளவை
யில்விளுவிடைக
ளாற்சாதிக்
கின்றார்.]

போன சன்மங்க டமிலநுட் டித்தநற் புண்ணிய பரிபாக
ம, ஞான மாக்குமே விசாரமே யென்றிடி னுரைத் திடக்
கேளாய், ஆன புண்ணிய மீசரார்ப் பணஞ்செயி னசிபோ
ஞ் சுசியாகும், மான தம்பினை விசாரித்து ஞானத்தை மருவு
மென் றறிவாயே. (௬௪)

(இ-ள்) போன சன்மங்கள்தமில் அநுட்டித்த-இறந்துபோன (அ
நந்த) ஜநநங்களிலநுஷ்டித்துவந்த— நற்புண்ணிய பரிபாகம்-சற்கரு
மபரிபாகமானது—ஞானம் ஆக்குமே- ஞானோதயமாகும்படிசெய்யு
மே—விசாரம் ஏன் என்றிடில் - ஆன்மாநான்மவிசாரமெதற்கென
று நீவினுவிடில்—நாம் உரைத்திடக் கேளாய்-அதற்கு யாங்கூறும் உ
த்தரத்தைக்கேட்பாய்—ஆன புண்ணியம் ஈசரார்ப்பணம் செயின்-(த
த்தம வருணாச்சிரமங்களுக்) குசிதமானபுண்ணியங்களைப் (பலாபே
டசையின்றி) ஈசரார்ப்பணமாகச்செய்யில்—அசி போம் சுசி ஆகும
-(அந்தக்கரணத்தின்கண்ணுள்ள) பாவமாயைகைத்தும்நீங்கி (மலினநீ
ங்கியதர்ப்பணம்போல) சுத்தமாம்—மானதம் பினை விசாரித்து-
(சுத்தமான) அம்மனமானது பின்னர்(சிற்சடங்களை) விசாரித்து—ஞா
னத்தை மருவும் என்று அறிவாய்-ஞானத்தைப் பொருந்தாநிற்குமெ
ன்றறிவாயாக.—எ-று.

சற்கருமானுஷ்டானமான துசித்தசுத்திமாத்திரப்பயனைப்பயவா
நிற்குமல்லது விசாரம்போல நேரேஞானத்தைப் பயவாதென்பதாம.

[இவ்வண்ணம் விளுவிடை ஞானசாதனசமுசயம்.] (௬௪)

[சகலத்தையும் பயக்கவலைச்சருமமான அஞ்ஞான
த்தை நிவிர்த்தித்தல் இல்லாதவிடத்து, விசாரமில்லை
யீட்டும் விருதல்.

பத்தி யும்வயி ராக்கிய மும்பர லோகமு மணிமாதி
சித்தி யுந்தவ நிட்டையும் யோகமுந் தியானமுஞ் சாருப [ம
முத்தி யுந்தரும் விசித்திர கருமங்கள் மோகமாத் திரந்தன்னு
புத்தி தந்திட அருமையோ விசாரமேன் புண்ணிய குருமூ
[த்தி. (கஒ)

(இ-ள்) பத்தியும்-ஈசுரனிடத்தன்பும்,— வயிராக்கியமும்-(ச
கலத்தினும்) நிராசையும்,—பரலோகமும-சுவர்க்கலோகமும்,—அணி
மா ஆதி சித்தியும்-அணிமாமுதலியவஷ்டசித்தியும்,—தவ நிட்டை
யும்-தவத்திலுறுதியாக நிற்றலும்,— யோகமும்-இயமாதியஷ்டாங்க
யோகமும்,— தியானமும்-சகுண, நிர்க்குணத்தியானமும்,— சாருப
முத்தியும்-சாருபமோக்ஷமும்(ஆகியவிவற்றை)—தரும் விசித்திர கரு
மங்கள்-கொடுக்கும் ஆச்சரியமான சற்கருமங்கள்—மோகம் மாத்திரம்
தன்னும்-தன்னைப்பிரமமாக அறியாதவறியாமை மாத்திரத்தை நிவிர்
த்திப்பிக்கும்—புத்தி தந்திடல் அருமையோ - ஞானத்தைத்தருதல
அருமையா—விசாரம் என்-விசாரம் யாதுக்கு—புண்ணிய குருமூர்
த்தி-புண்ணியரூபமானகுருவே.—எ-று. (கஏ)

[விசாரத்தாலல்லது, ஞானம் உளதாகாதென்பதைத்
திருஷ்டாந்தமுகத்தாலுணர்த்துகின்றார்.]

வேட மாறிய பேர்களை யறியவே வேண்டினுன் மகனேகேள்
கூட மாமவர் சுபாவங்கள் சிலங்கள் குறிகளுமறிந் தறியாமல்
ஓடி யுங்குதித் தாதலும் இழிந்தலு முயர்ந்தகம் பத்தேறி
ஆடி யும்பல கருமங்கள் செய்யினு மவருண்மை தெரியாதே.

(இ-ள்) வேடம் மாறிய பேர்களை-தம்வேடத்தைவிட்டு மாறு
வேடங்கொண்டு மறைந்தோர்களை—அறியவே வேண்டினுல்-அறிய
வேண்டின்—மகனே கேள்-மைந்தாகேட்டி—கூடம் ஆம் அவர்-ம
றைந்திருப்பவைகளான அவரது— சுபாவங்கள்-குணங்களையும்,—சீ

லங்கள்-ஒழுக்கங்களையும்;— குறிகள்-சின்னங்களையும்— ஆய்ந்து அறியாமல்-ஆராய்ந்து(அவர் இன்னாரென்)றறியாமல்—ஓடியும்-வெகுதூரங்கால்சலிக்கவோடியும்,—குதித்தும்-வரையிலேறிப்பாய்ந்தும்,—தலைகீழ் நின்றும்-தலைகீழ்,(கால்மேலாக)நின்றும்,—உயர்ந்தகம்பத்து ஏறி ஆடியும்-உன்னதமான கம்பத்தின்மீதேறிக்கூத்தாடியும்—பலகருமங்கள் செய்யினும்-இன்னும், அநேககருமங்களைச் செய்யினும்—அவர் உண்மை தெரியாது-வேடமாறினோருண்மையறியவாராது — எ-று. (௬௬)

[முற்கூறியதிருஷ்டாந்தம்போலத் தார்ஷ்டாந்தகதும் ஆமெனல.]

இன்னவாறந்தப் பிரமத்தை யறிவிக்கு மிலக்கணத்தால் வேதம், சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றிச் சுருதிநூல் படித்தாலும், அன்னதானங்கடவங்கண்மந் திரங்களாசாரங்கள் யாகங்கள், என்ன செய்யினுந் தன்னைத்தானறிகின்ற நிலைகளால் வாராதே. (௬௭)

(இ-ள்) இன்ன ஆறு-இதிருஷ்டாந்தப்படி—அந்தப் பிரமத்தை-(நீலாதிவஸ்துக்களோடுகூடி அவ்வண்ணமாய்த்தோற்றும் ஸ்படிகம்போலப் பஞ்சகோசங்களோடுகூடி அவைகளேதானாய்த்தோற்றும்) அப்பிரமத்தை—இலக்கணத்தால்- (சொரூபம், தடஸ்தம், அதத்வியாவிருத்தி)எனனுமூவகைஇலக்கணங்களால்—அறிவிக்கும்-(அதிகாரிக்குத்தெரிவிக்கும்—வேதம் சொன்ன ஞானமும் - வேதங்களாற பிரதிபாதித்த (பிரமான்மவையிக்கிய) ஞானமும்—விசாரத்தால் வருமன்றி-௬௩-ம் செய்யுளிற்கூறிய விசாரத்தால்வருமேயல்லாமல்—சுருதி நூல் படித்தாலும்-வேதசாஸ்திரங்களைக்கற்றாலும்—அன்னதானங்கள்-அன்னதான(முதலியதான)ங்களும்—தவங்கள்-கிருச்சிரசாந்திராயணாதிதவங்களும்—மந்திரங்கள்-(பஞ்சாட்சர,அஷ்டாட்சராதி)மந்திர(செபங்)களும்—ஆசாரங்கள்- (வருணாச்சிரம)வாசாரங்களும்—யாகங்கள்-(சுத்தம்வருணத்திற்குரிய) யாகங்களும்—(ஆகியஇவைகளில)என்ன செய்யினும்-யாதுசெய்யினும்—தன்னைத் தான் அறிகின்றது -தன்னைத்தானறிவது—இவைகளால் வாராது-இவற்றாலுளதாகாது எ-று,

"தன்னைத்தா னறிகின்றது." என்று பின்னுங்கூறினது ஞானத்தின்சொரூபம் இனைத்தெனக்காட்டினது. இப்படியே திருமந்திரத்தில, "தன்னையறிதறிவாம•ஃதன்றிப், பின்னையறிவது பேயறிவாகுமே." என அருளிச்செய்திருப்பதுகாண்க.

சொரூபலட்சணமுதலியமூன்றனையும், "ஆக்கமுதலன" எனனுமவேதாந்தசூடாமணியின் செய்யுளாலறிக. (௧௭)

(௨௧௮. [கருமத்தாலன்றி, ஞானத்தால அஞ்ஞானம ஒழியுமாறு எவவாறெனத் திருஷ்டாந்த முகத்தாற் சீடன் வினாதல்.]

துளங்கு தர்ப்பண மழுக்கறக் கைக்கொண்டு துலக்கினாற
போமன்றி,விளங்கு புத்தியா லுலகிலார் துலக்கினர் விமலதே
சிகமூர்த்தி, களங்க மாகுமஞ் ஞானமு மப்படிக் கருமத்தாற்
கழுவாமல, உளங்குறித்தஞா னத்தினா லெப்படி யொழியு
மீ தருள்வீரே. (௧௮)

(இ-ள்) துளங்கு தர்ப்பணம் அழுக்கு அற-ஒளிகின்றகண்ணாடியி(லேறிய) அழுக்கறும்படி—கைக்கொண்டு துலக்கினால் போம அன்றி- (அந்தயகற்றவல்லசாதனங்களைக்) கையிற்கொண்டுவிளக்கினாற்போகுமல்லாமல்—விளங்கு புத்தியால்-விளங்குகின்றபுத்தியினாலே—உலகில் துலக்கினர் ஆர்-உலகின்கண் விளக்கினோர்யாவர்! (ஒருவருமிலர்.)—விமல தேசிக மூர்த்தி-அவித்தியாமலமிறந்தகுருவே—அப்படி-அத்திருஷ்டாந்தப்படி—களங்கம் ஆகும் அஞ்ஞானமும்-களங்கமாகியஅஞ்ஞானமும்,—கருமத்தால் கழுவாமல்-சற்கருமத்தால நீக்கப்படாமல்—உளம் குறித்த ஞானத்தினால்-அந்தக்கரணத்தால (மித்தையென) மதிக்குஞ்ஞானத்தால்—எப்படி ஒழியும்-எவ்வாறுநீங்கும்—ஈது அருள்வீர் இதனையுரைத்தருள்வீராக.—எ-று.

அஞ்ஞானத்தை, "களங்கம்." என்றது,ஆன்மாவை மறைத்தலி னென்க.

[மூற்செய்யுளிற்சிட்டன் உடம்பு இருஷ்டாந்தம் விஷம மெனக்கொண்பிந்து மதித்த [illegible] டாந்தத்திற்குச் சம மான திருஷ்டாந்தம் இதனைக்கொண்டுக்கின்றூர்.]

தர்ப்ப ணத்தினிற் களிம்புவாஸ் [illegible] சகசமா தலின்
மைந்தா, ஸ்ற்ப ளிங்கினிற் கருநிறஞ் சகசமாக் கறுத்ததன்
றூரோபம், தர்ப்ப ணத்தினி லழுக்கற வேண்டினுற் சாதனைத
தொழில்வேண்டும், ஸ்ற்ப ளிங்கிலா ரோபமே கறுப்பென்று
கண்டிட மனம்போதும், (௯௯)

(இ-ள்) தாப்பணத்தினில் களிம்பு-கண்ணுடியின்கண்ணுள்ள களிம்பானது— வாஸ்தவமலம சகஜம்-வாஸ்தவமலமும், சகஜமு மாம—மைந்தா-மகனே—ஸ்ற்பளிங்கினில்-ஸ்படிகக்கல்லில்— கருநி றம-பற்றியாய்க்துள்ள கறுப்புநிறம்—சகஜமாக் கறுத்தது அன்று-சக ஜமாகக்கறுத்திருப்பதல்ல—ஆரோபம்-பொய்யாகவுள்ளது—ஆதலின -ஆதலினுல்,—தர்ப்பணத்தினில் அழுக்கு அற வேண்டினுல்-கண்ணு டியின்கண்ணுள்ள அழுக்கையொழிக்கவேண்டினுல்—சாதனத் தொ ழில் வேண்டும்-அதனையொழிக்கவல்லசாதனமாகிய தொழில்வேண் டும—ஸ்ற்பளிங்கில்-ஸ்படிகக்கல்லில்—கறுப்பு ஆரோபமே என்று க ண்டிட-கருநிறம்பொய்யேயென்றுகண்டகற்ற— மனம் போதும்- ம னமேபோதும்.—எ-று.

[அறுக்கவென்னும்பிறவினையில், அறவென்னுந்தன்வினைவந்தது.]

ஏனைய கண்ணுடியினழுக்கைக் களிம்பென்றுவழங்காமையின இதின்முதற்பாதத்தில், "தர்ப்பணம்" என்றது செம்புக்கண்ணுடியை; இங்ஙனங்கூறியது கண்ணுடியின்மலத்திற்குச் சகஜதர்மங்கூறி மறு ததற்பொருட்டென்க.

[வாஸ்தவம்—சத்தியம். சகஜம்—கூடப்பிறந்தசுபாவதர்மம்.] (௬௧)

[ஸ்படிகம்போதும் அஸ்திபாதிப்பியருபமானதன்னி ல், நான் செத்துப்போகிறவன், சடன், துக்கி என்னும் விபரீதப்பிரதீதி [illegible] ஆரோபமாகத்தோற்றுகின் றதாகலின், [illegible] அதற்குச்சாதனம்வேண்டாது, பாதக மாகிய [illegible] ஞானமே பாதகமாமென்னுஞ் சித்தா ந்தத்தைக்கூறுகின்றூர்.]

இங்கு மப்படிச் சச்சிதா னந்தத்தி லிடர்சடம் பொய்மூன்
றும, தங்கு மாயையின் கற்பித மல்லவே சகசவாஸ் தவமன்
றே, பங்க மாகுமஞ் ஞானத்தைக் கருமங்கள் பகைசெயா து
றவாக்கும், தங்க ஞானமே கருமவஞ் ஞானத்தைச் சுடுகின்
ற நெருப்பாமே (௭௦)

(இ-ள்) இங்கும்-ஏவ்விடாந்தத்திலும்—அப்படி-அத்திருஷ்டா
ந்தப்படி—சத் சித் ஆநந்தத்தில்-அஸ்தி பாதிப் பிரியரூபமாகிய தன
னில்—பொய் சடம் இடர் மூன்றும்-அசத்துச் சட துக்கங்களென்மூன
றும—தங்கும் மாயையின் கற்பிதமே அன்றி-(சத்தியில்ரஜதம்போ
லஆரோபமா)யிருக்கும்(சரீரத்திரயரூபமான)அஞ்ஞானத்தினற் கற
பிதமேயல்லாமல்—சகசவாஸ்தவம் அன்று-சகஜமுமன்று, வாஸ்தவ
முமன்று—பங்கம் ஆகும் அஞ்ஞானத்தை-அசத்துச் சட துக்காத்மக
மான அஞ்ஞானத்தை—கருமங்கள்-(புண்ணிய) கருமங்கள்—பகைசெ
யாது-பகைத்துநாசஞ்செய்யாமல்—உறவு ஆக்கும்-(தனக்கு)உறவாக
ப்பண்ணும்—தங்கஞானமே-உயர்வான (பிரமான்மவயிக்கிய)ஞான
மே—கரும அஞ்ஞானத்தை-கருமத்தையும், அஞ்ஞானத்தையும—
சுடுகின்ற நெருப்பு ஆம்-தகிக்கவல்லதீயாம்.—எ-று.

"மாயையின்," என்னும் பதத்திற்கு, சரீரத்திரயரூபமானவஞ்
ஞானத்தினல், என்றுபொருளுரைத்தது, இனி (௭௧) வது செய்யு
ளில், "உலகமான வஞ்ஞானமும், பலவுமான வஞ்ஞானமும்" என
இவ்வாசிரியர் கூறியிருக்கும் அபிப்பிராயங் கொண்டென்க.

அந்தகாரத்தை மேகபடலம்போலச் சற்கருமங்கள், அகர்த்தா,
அபோக்தாவாகியதன்னைக் கர்த்தா போக்தாவாகச்செய்தலின், "அஞ்
ஞானத்தைக்கருமங்கள்பகைசெயாதுறவாக்கும்," என்றும், சூரியன
அந்தகாரத்தைக்கெடுப்பதுபோலச்சுயப்பிரகாசமாகிய பிரமான்ம
வயிக்கியஞானம் அஞ்ஞானகாரியங்களைநாசஞ்செய்தலால், "தங்க ஞா
னமே கருமவஞ் ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பாம்" என்றுங்கூ
றினர்.

(௭௦)

[கூறிப்போந்ததைப்பிரசித்தமான அநுபவத்தாற் சாதிக்கின்றார்.]

மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன் வருடநூ று
ழுதாலும், நினைந்து ணர்ந்தபின் கிட்டுமப் படியிந்த நின்ம
ல வான்மாவும், அனாத்த மானதன் மறதியைக் கெடுத்துத
தன தறிவினாற் காணாமல், கனத்த கர்மங்க ணூறுகளுஞ் செய
யினுங் காணுமோ காணாதே. (எக)

(இ-ள்) மனைக்குள் வைத்த பண்டங்களை-மனையினுள் வைத்த (அல்லது புதைத்துவைத்த) இரத்தினமுதலியபதார்த்தங்களை—மறந்தவன்-வைப்பிடந்தெரியாது மறந்தபுருஷன்—வருடம் நூறு அழுதாலும்-நூறுவருஷம் உரோதனஞ்செய்யினும்—நினைந்து உணர்ந்தபின கிட்டும்-(உரோதனஞ்செய்ததாற்கிடைக்காமல்) யோசித்தறிந்தபின (அப்பதார்த்தங்கள்) எப்படிக்கிடைக்குமோ— அப்படி-அந்தப்படி—இந்த நின்மல ஆன்மாவும்-யாவர்க்கும்அபரோட்சமான நிர்மலமாகியஆன்மாவும—அனாத்தம ஆன-துன்பத்திற்குக்காரணமான—தன் மறதியைக்கெடுத்து-தனதறியாமையை(விசாரத்தால்)நசிப்பித்து—தன் அறிவினால் காணாமல்-தனது ஞானத்தாற்காணப்படாமல—கனத்தகாமஙகள-பாரமாகியகாமங்கள்—நூறு உகஞ் செய்யினும்-அநேகயுகங்களில்யற்றினும்—காணுமோ காணாது-காணப்படுமோ? படாது.—எ-று.

“இந்த ஞானந்தான்.” என்னுஞ்செய்யுண்முதல், “மனைக்குள வைத்த.” என்னுஞ்செய்யுள்வரையும், ஞானசாதனங்கருமமா? அலலது விசாரமா? என்றெழுந்த சந்தேகந்தெளிவித்ததாம்,

[இவை பிரமேயசந்தேகங்களெனக்காண்க.] (௭க)

(உகக) [பிரமாணசந்தேகந்தெளிதற்பொருட்டுச் சீடன்வினாதல்.]

நன்மை யாங்குரு வேதந் தருவது ஞானமே யெனும்வே
தம், தன்ம பாவயிச் சிரங்களாற் றேவர்க டருவிலங் குகண்
மாநதர், செம்ம மார்க்கு சாதியா சாரமே செய்தலுஞ் சுகமெ
னறு, கன்ம காண்டத்தில் விதித்ததேன் விதித்துள காரண
முரையீரே. (எஉ)

(இ-ள்) குருவே—நன்மை ஆம் சுகம் தருவது-(சிரேஷ்ட)யானந்த மானசுகத்தைத்தரத்தக்கது—ஞானமே எனும் வேதம்-(பிரமாண்மவாக்கிய)ஞானமேயென்றுசொல்லும்வேதமானது—தன்ம பாவம் மிச்சிரங்களால்-புண்ணியகருமம், பாவகருமம், மிசிரகருமங்களால்—(முறையே)தேவர்கள்(சென்மம்)-தேவஜனமமும்,—விலங்குகள்தரு(செனமம்)-மிருகமுதல் ஸ்தாவரபரியந்தமான ஜன்மமும்,—மாந்தர்செனமம்-மநுடஜன்மமும்—ஆகுவ (என்று)-உண்டாவனவாமென்றும்,—சாதிஆசாரமேசெய்தவம் (என்று)-(அவனவன) சாதியொழுக்கமே (அவனவனுக்குச்)செய்யத்தக்கனவானதவமாமென்றும்,—சுகம என்று-இதனாலேசுகமுண்டாமென்றும்—கனமகாண்டத்தில விதித்தது என - கர்மகாண்டத்தில்விதித்திருப்பது யாதுகருதி—விதித்தது உள-(இப்படியாக)விதித்திருக்கின்ற—காரணம் உரையீர்-காரணத்தையருளிச்செய்வீராக.—எ-று.

புண்ணியம், பாவம், மிசிரம எனும மூவகைக்கருமங்களும் உத்கிருஷ்ட, மத்திம,சாமான்யபேதத்தால ஒவ்வொன்றுமமும்மூன்றுவிதமாயிருக்கும்.

புண்ணியஉத்கிருஷ்டத்தால் இரணயகாபபாதிசரீரப்பிராப்தியும்,புண்ணியமத்திமத்தால் தேவேந்திராதிசரீரப்பிராப்தியும்,புண்ணியசாமான்யத்தால் யட்ச, ராட்சச, கிந்நர, கிம்புருஷ, பைசாசாதிசரீரப்பிராப்தியும், பாவஉத்கிருஷ்டத்தால் பிராணிகளுக்குத்துக்கத்தைக்கொடாநிற்கும் தேள்,பாம்பு,கொசுகு,மூட்டை, புலி, கரடிமுதலியசரீரப்பிராப்தியும், பாவமத்திமத்தால் புளி, மா, பலா, தென்னை, எருமை, பருந்துமுதலியசரீரப்பிராப்தியும், பாபசாமானயத்தால் பசு, யானை, குதிரை, அரசு, துளசிமுதலியசரீரப்பிராப்தியும், மிசிரஉத்கிருஷ்டத்தால் நிஷ்காமபுண்ணியபலத்தாலுண்டாகுஞ்சித்தசுத்தியும், அதனால சாதனசதுஷ்டயமும், அவற்றால்சற்குருலாபமும், அதனால் சிரவணாதிகளும்,சிரவணாதிகளால் அபரோட்சஞானமும்பெற்று அவ்வபரோட்சஞானத்தால் சீவன்முத்திச்சுகத்தையடையத்தக்கசரீரப்பிராப்தியும், மிசிரமத்திமத்தால் ஆசிரமத்திற்குசிதமாகிய காமியகர்மயோக்கியமானசரீரப்பிராப்தியும், மிசிரசாமான்யத்தால் சண்டாள, பாண்டு, குஷ்ட, பெருவியாதிகளையுடையசரீரப்பிராப்தியும் உண்டாவதால், "தன்ம பாவமிச் சிரங்களாற் றேவர்க ளடுவிலங் குகண்மாந்தர், சென்ம மாகுவ." என்றது.

"சாதியர் சாதமே செய்தவம்." என்பதற்கு, உ-ம், பகவற்கீதை. "அறைசெய்யும் புலன்களை அடக்கல் ஞானமுடன், முறைதுறையுடன் பொறுத்தல் அருட்டினால் நேர்மையொடு கல்வியும் பொருந்துஞானமும், மறையவர் தொழிலென வகுக்கப் பட்டதே." எ-ம், "தலைமையுங் கொடையொடு தறுகணாண்மையும், நிலைமையும் நீங்கொடா நெஞ்சினீட்டமுங், கொலையயில் போர்களிற் புறங்கொடாமையும், நிலைமலி தோளினு யரசர் செய்கையே." எ-ம், "உழுதொழில் பசுக்களை யோம்பல் வாணிபம், வழுவறச் செய்தொழில் வணிகர் வாழ்க்கையாம், பழுதற விவர்களைப் பாது காத்தலே, விழுமிய தொழில்களை வேளாளர்க் கென்பவே." எ-ம், "நீரா வகைதன் செயலே செயலே, நாரா யணனு முதனு யகனுக், காரா தனையா மதனா லவனே, வாரா வழியாம் வரமே தருமால்." எ-ம், வரும். மற்றும் வருவனவுற்றுணர்ந்து காணக. (எஉ)

[மேலேவினாவிற்கு நான்கு செய்யுளால் உத்தரங்கூறல்.]

தினமுமன்னுநகா பிள்ளைநோய்க் கிரங்கியே திம்பண்ட மெதிர்காட்டிக், கனமருந்துக ளொளித்துவைத் தழைக்கின்ற கருணைநற் றாய்போலே, மனைய றங்கள்செய் மகங்கள்செய் நன்றென்று மலர்ந்தவா சகஞ்சொல்லும், வினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகளந்த வின்னையந் தெரியாரே. (எ௩)

(இ-ள்) தினமும்-நாள்தோறு—மன்னுநகர் பிள்ளை நோய்க்கு-(சாரமற்ற) மண்ணையுண்ணுந்தன்பிள்ளையின் வியாதிக்கு—இரங்கி-(மன) மிரங்கி—திம்பண்டம் எதிர் காட்டி-(அப்பிள்ளைக்கு) இனிப்பான பதார்த்தங்களை எதிரேகாட்டி—கனமருந்துகள் ஒளித்து வைத்து-கன்மானவவுஷதங்களை மறைத்துவைத்து—அழைக்கின்ற-(பலமுறை) அழையாநின்ற—கருணை நற்றாய் போலே-கருணையுடைய நல்லமாதாவைப்போலவே—மனை அறங்கள் செய்-இல்வாழ்க்கைக்குரிய அறங்களைச்செய்வாயாக,—மகங்கள் செய்-யாகங்களைச்செய்வாயாக,—நன்று என்று-(இவற்றால்) நன்றுண்டாகுமென்று—மலர்ந்த வாசகம் சொல்லும்-விரிந்த (சுருதி) வாக்கிய உருவிற்கும்—வினைவு வேறு காண்-(இவ்வாறு கூறுகின்ற சுருதியின்) கருத்தானது (இதுவல்ல) வேறாகும்—சுவர்க்க காமிகள்-சுவர்க்கபோகங்க

னில் இச்சையுடையோர்—அந்த விஷயம் தெரியார்-அந்நிச்சயத் தையறியார்.—எ-று.

"இனமு மன்னுயர் பிறவிநோய்க் கிரங்கியே நிம்பண்டமெ னிர்காட்டிக், கனம ருத்துக வொளித்துவைத் தனுபவென்ற கருணை நற் றாய்போலே." என்னும் பெரியதிருஷ்டாந்தத்தால் தாஷ்டாந்தத்தி னகன் ஜகத்தோறும் சாரமற்றவிஷயங்களையுண்வெருவதால் அஞ் ஞானியாகியபாலனையடுத்துள்ள ஜநநமரணரூபமான நோய்க்கு மன மிரங்கி அதனைத்தீர்க்கவல்லபரமாத்மைதஞானத்தையொளித்துவை த்து அவனுக்கெதமாகத்தோற்றுகின்ற சுவர்க்கவின்பங்களைக்காட்டி என்னும்பொருள்கொள்ளக்கிடந்தமைகாண்க.

"நிம்பண்ட மெனிர்காட்டிக், கனம ருத்துக வொளித்துவைத் து." என்றது, குடசிக்வாயையாயம்.

[அங்ஙனம் விதித்தகருதியின்கருத்து வேறென்பதற்கு உத்திகூறுகின்றார்.]

போக மாருயிர் கண்டதை யுண்பதும புணர்வது மியல்பே காண், ஆக மங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ வத்தனை தெ ரியாதோ, காக மேகறுத் திடுநெருப் பேசுடு சகந்திடு வேம்பே நீ, வேக வாயுவே யசையெனவொருவரும் விதித்திடல் வே ண்டாவே. (எ௪)

(இ-ள்) போகம் ஆர் உயிர்-(ஐம்புலனகளாலும்)போகங்களையு னுகின்றவுயிர்கள்—கண்டதை உண்பதும்-கோர்த்தபதார்த்தங்களை யுண்ணுகிறதும்,—புணர்வதும்- (கேரிட்டபெண்களைக்) கலவிசெய்வ தும்—இயல்பே காண்-சுபாவமே(யல்லாமல் வேறில்லை)—ஆகமங்க ளும்-சுருதிகளும்—சுபாவத்தை விதிக்குமோ-(உயிர்கட்கு)இயல்பாயு ள்ள அவ்வருத்தல்பொருந்தல்களை (விலக்குமேயல்லாமல்) விதிக்கு மோ—அத்தனை தெரியாதோ-(சர்வஞ்ஞமுடையசுருதிகட்கு) அவ் வளவுதெரியாதா—[சுபாவத்தை விதிக்கவேண்டாமென்பதற்குத்திரு ஷ்டாந்தங்கூறுகின்றார்.] காகமே கறுத்திடு-வாயசமே (நீ) கறுத்திடு —நெருப்பே சுடு-தீயே(நீ)சுடு—வேம்பே கசந்திடு-வேம்பே(நீ)கைத் திடு—வேக வாயுவே அசை-வேகமுடையவாயுவே(நீ)சலித்திடு—என

பா-ம்.] சகலபிரபஞ்சாகாரராகவும், இரண்யகர்ப்பாதிவிவிதேேவ ராகவும் நாநாவிதமாகவுண்டாகின்றதால விபு. அன்றியும், சர்வ தந்திரபரிபூரணராகவும், லோகநாயகராகவும் இருப்பதால் விபு. [வ-தி] அவித்தியாவிசிட்டனினவிபு லிங்கதேகம், இதனினவிபு தூலதேகம, இதனின் ஒன்றின்ஒன்று விபு பிருதிவியாதிபூதங்கள், இவற்றினொன்றினொன்றுவிபு இரண்யகர்ப்பாதி, இவைகளானமட்டிடக்கூடாதுவிரிந்த மாயாவிசிஷ்டனுமும மட்டிடக்கூடாதுவிரிந்த அஸ்திபாதிப்பிரியரூபமாகலின விபு.—சூக்குமம-[வி-ச-பா-ம்] "நுண்மை யாமதி னுணமை யாம." எனனுமசுருதியானும, "சாவகத மருட்சுமம." எனனுமசுருதியானும உத்தரோத்தரம ஸதூலகாரண மாயிருக்கினற பிருதிவியாதிபூதங்களும், கந்தாதிகுணங்களும பிரள யததிலேயிலலாமையினுற் சூக்குமம — வாசிட்டததில், "சூக்கமாயெட் டாமையினுற் சொன்னபரமே பரமாணு." என்றது. என்று இவவண்ணம விதிகுணஙகளை மொழியும வேதம்-என்றிவவாறு விதி குணங்களைப்பிரதிபாதியாநிற்கும வேதமானது.—எ-று. (௧௩௬)

(௨௪௦) [இனி சிேடதநாமஙகள கூறுகினறா.]

அசலநிரஞ் சனமமிர்த மப்பிரமே யமவிமலம வசனு திதம
அசடமநா மயமசங்க மதுலநிரந தரமகோ சரம கணடம
அசமசுத்த மவிநாசி நிர்க்குணநிட் களநிரவ யவம காதி, அசரீ
ர மவிகார மததுவித மௌவிலககா மநேக முண்டே. (௧௩௭)

(இ-ள்) அசலம்-[வ-தி.] வீடு, ஊர், தேசம இவைகளில ஒனறைவிட்டு மறறொன்றில அலைகினற ஸ்தூலதேகம, உலகஙகளில ஒன்றினினறொன்றில் அலைகின்ற லிங்கதேகம, காரணதேகஙகளோடு பிருதிவியையலையமாகச்சுற்றியலைக்கின்ற அப்பு,அக்கினி இவைகளை யலைக்கினறவாயு,இவைகட்கிடமாயுள்ள ஆகாசம இனனும பௌதிக சமஷ்டியோடுகூட இவையனைத்தையும உடலாககொண்டு அறிவினுள்ளே அலையாகினற சுகரனும, அதிவேகமாக ஆகாசததிறகருடன் ்ாலப் பததுததிக்கினும் நூறுகோடிகறபஙகளோடி அளவிட மேண்டுமென்றுபார்க்கினும, அளவுகாணக்கூடாததாய் அஙகஙகே சாட்சியாய் அசைவற்றிருக்கின்றதால் அசலம.—நிரஞ்சனம-(அஞ்சனம்=தமம; மலினசுபாவத்தால; அஃதில்லாமையால் நிரஞ்சனம்.

— அன்றியும், ஆத்மபோதடீகா அஞ்சனரஹிதன், நிரஞ்சனன அ
ஃதெங்ஙனம்? மனோவியாபாரமே அஞ்சனமாகலின், மனதேயில
லாமலிருத்தலால் நிரஞ்சனம்.* இனனும், லட்சணவிருததியி லுங
காணக. அமிர்தம்- [ல-ஹி.] மிர்தமற்றது அமிர்தம். யோகாமிர்தம,
தேவாமிர்தங்களைப்புசித்தது நமக்குமரணமில்லையென்றிருப்பவரும ஈ
சுரப்பிரளயத்தில் மரணமாவதுபோல அகக்தாகந்த சின்மாததிரமே
நாமெனறுமோட்சாமிர்தமான தன்னையடைந்தோர் மரணமாகாமை
யின் அமிர்தம. [வி-ச-பா-ம.] ஓர்காலத்தும் மரணமில்லாமல் நித்தி
யமாயும, சத்தியமாயும் இருத்தலின் அமிர்தம்.— அபபிரமேயம-
[வி-ச-பா-ம.] சர்வப்பிரமாணங்கட்கும் விடயமாகாமையின அபபி
ரமேயம. சத்தஸ்பரிசரூபகந்தாதிகளானகுணங்கள் இவரிடத்தில
லாமையினுன், கடபடாதிகள்போலப் பிரத்தியட்சவிஷயரல்ல. கா
ரியலிங்கமிலலாமையின, அநுமானவிஷயரல்ல. சாதிருசமிலலா
மையின; உபமானவேத்தியரலல. ஜாதிகுணக்கிரியைகளில்லாமை
யின, சத்தப்பிரமாணவிஷயருமல்ல. உபாதானதர்மமில்லாமையி
ன, அர்த்தாபத்திவிஷயருமல்ல. பாவ (ஸாவ) ரூபமானசிற்சொரூ
பராகலின், அபாவகோசரருமல்ல. அபாவத்திற்குச சாட்சியாயிரு
த்தலானும் அபாவவிஷயரலல; இப்படிச்சகலபிரமாணங்கட்கும வி
ஷயராகாவிடில் வேதாந்தசாஸ்திரங்களாலே எப்படியறியப்படுவரெ
னின்;—சகலமானபிரத்தியட்ச அநுமான உபமான சத்த அர்த்தாப
த்தி அபாவசாஸ்திராதிகட்கும சாட்சியாக அறிகிறவராகவும, சுவ
யம பிரகாசராகவும் இருத்தலின பிரமாணங்கட்கு விஷயராகாவிடி
னும தம்மிடத்திற்கற்பிக்கப்பட்ட சகல பிரபஞ்சபிரமாணங்களையும
சொப்பிரகாசத்தினுலேமித்தையென்று நிச்சயித்து ஆநந்தசின்மாத
திரமாயிருத்தலால், சாஸ்திரயோனியென்றுசொல்லப்படுகிருர்; ஆக
லின அபபிரமேயம். — விமலம - [ல-ஹி.] மலமற்றது. மலமுதி
ராதிமலமபொருந்திய பிருதுவி, கலங்கல், புகை, புழுதிமுதலானமல
மபொருநதிய மற்றநான்கு பூதங்கள், கோழை, சளி, பித்தம, மலம்,
மூத்திரமுதலான மலமுடையதூலதேகம், காசபடலங் காமக்கு
ரோதமுதலான மலமுடையலிங்கதேகம், அஞ்ஞானமலமுடை
யசீவன, பஞ்சகிருத்தியாதி மலமுடைய ஈசுரன் இவைக்குவேருயா
தொருமலமுமற்று பிரகாசஞானாநந்தவடிவாகலின் விமலம்.—வச
னுதீதம-வாக்கின் சக்திவிருத்திக்குக்கோசரமாகாமையின் வசனாத

திற்கெட்டாதது.—அசடம்-தேகமுதலியவைபோலச் சடமாகாமையின் அசடம்.—அநாமயம்- ஆமயம்= நோய்: அஃதற்றதால் அநாமயம். [வ-தி.] ஆதிவியாதிவாசனையென்னும் மூன்று சரீரத்துச்சுரங்களுந் தனக்கு இல்லாமையின் அநாமயன்.—“சுழலும்வினை, கலனுமன் றியலுநரை மரணமும பசியைமுத, லுலகுறுந் துயரமுமுது முடையனன் றெருபொழுதும்.” என்னும் பிரமகீதையினுலுங்காண்க. அசங்கம்-[விசாரசந்திரோதயம்.] சங்கமென்பது, சம்பந்தம்; அது சஜாதியவிஜாதியசுவகதபேதத்தால் மூவகையாம்: பிராமணனுக்கு அந்நியபிராமணனோடாகுஞ்சம்பந்தம, சஜாதியசம்பந்தம. சூத்திராதியரோடனோடாகுஞ்சம்பந்தம, விஜாதியசம்பந்தம. அஸ்தபாதாதிகளோடுள்ளசம்பந்தம சுவகதசம்பந்தம். தான் ஏகமாகலின், சாதியில்லை. சீவன், ஈசுரன, பிரமா, விஷ்ணு, சிவன, நான, நீமுதலியபேதமோ உபாதியாற்பண்ணப்பட்டது; ஆகலின, தனக்குயாதொன்றேனுஞ் சஜாதியசம்பந்தமில்லை. அப்படியே தான அத்வைதமாயும, சத்தாயுமிருத்தலின, தனக்குப்பின்னமாக மாயை மாயாகாரியமானதூலசூட்சும பிரபஞ்சங்கள அசத்தாம அசத்து அற்பமும்வஸ்துவன்று; ஆகலின, தனக்கு யாதொன்றேனும விஜாதியசம்பந்தமில்லை. அப்படியே தான நிரவயவமாகலின், சச்சிதாநந்தாதிகளோ தனதவயவமல்ல பின்னையோ ஏகரூபமாகலின, தனதுசொரூபமாம். இதனால தனக்கு யாதொன்றேனும சுவகதசம்பந்தமில்லை; இவ்வாறு சர்வசம்பந்தமுமில்லாமையின அசங்கம்.—அதுலம்-[வி-ச-பா-ம.] உபமானமற்றது இதற்குச்சமானவஸ்து ஒருகாலத்தும் ஓரிடத்தும இல்லாமையின அதுலம்.—நிரந்தரம் - அந்தரம்=அவகாசம்; அஃதில்லாதது நிரந்தரம்.—[நிச்சித்திரமென்று பொருள்.] இதனை, “நிலனவினை காலமிர் திசையெலா மேவிபு செறெருசிலை புரையாகா.” எனனும வாசிட்டத்தாலறிக. அகோசரம் -கோசரம = விடயம்; தானொன்றறியும விடயமாகாமையின அகோசரம்.— அகண்டம்-காலதேசவஸ்துக்களால கண்டிதமாகாமையின அகண்டம்.—அசம்-ஜநநமில்லாதது. [வி-ச-பா-ம.] நித்தியசித்தமாக இருப்பதுகொண்டு ஜநநத்தையடையாமையின அசம்.—“வேறுபட வொன்றிலே பிறத்தல்பிறந் துளவாதல், வேறுபட வளர்தல்வளர்ந் தயலொன்றாய் விளைத்தமைதல், மாறுபடத் தேய்தலற மாய்தலென வருகின்ற, வாறியல்பு முடம்பனறி யறிவடையாது.”

என்னும், இதையிஞலறிக. அநந்தம்-[வி-ச-பா-ம்.] நித்தியமாகவும்,
சர்வகதமாகவும் இருத்தலின், தேசகாலவஸ்துக்களால் பரிச்சேதமி
ல்லாமையான் அநந்தம். — அவிநாசி-நாசரகிதமாகலின் அவிநாசி.
—நிர்க்குணம் [வி-ச-பா-ம்.] பரமாத்மதத்துவத்தைக்கண் குணத்திரயங்க
ளில்லாமையான் நிர்க்குணம். அல்லது, சத்த, ஸ்பரிசாதிகுணரகி
தமாயும், நித்தியசுத்தஞானரூபமாயும் இருத்தலின் நிர்க்குணம்.
[ல-தி.] சத்துவகுணத்தால் ஈசுரனையும், இரஜோகுணத்தால் சீவரை
யும், தமோகுணத்தால் சகத்தையுமுண்டாக்கி அவைகளையுகந்தோறு
ம் விரிந்தடங்கி விஞ்ஞியாநிற்கும் பிரகிருதிக்கு அதீதமாய்ச் சுத்த
அதிஷ்டானசுகஸ்வரூபமாகத் தானிருத்தலின் நிர்க்குணம்.—நிட்க
ளம்-கலை = அவயவம். அஃதின்மையின் நிட்களம்.— [ல-தி.] பிர
மம் ஆகாசவுருவாயிருக்குமென்றது ஒருவேதம். அதற்கு நாமரூபமி
ல்லை அமூர்த்தமாயிருக்குமென்றது ஒருவேதம். பிரமத்திற்கு முன்
பின் உட்புறமில்லை அதுசாட்சியாயிருக்குமென்றது ஒருவேதம். அறி
யப்பட்டதுமறியப்படாததும் பிரமமல்ல; அவைகட்கந்நியமாய் அவை
களைப்பிரகாசிப்பிக்கும் அறிவு நிராகாரமென்றது ஒருவேதம். இவ்
வாறுகூறுகின்ற சுருதியானும், சூரியனைநாடாநிற்கும் மனதோடுகூட
நின்ற சிதாபாசனைக் கற்பிதசேதனமென்றதுகொண்டு வாளால்வெட்
டுதலும், அக்கினியாற்சுடுவதும், நீடினகரத்திறுக்குவதுபோற் ரூ
க்காமற்போமாயின், சுபாவசித்து ரூபரகிதமெனனல்வேண்டுமோவெ
ன்னும் உத்தியானும், தான் உள்ளிந்திரியம், வெளியிந்திரியங்களுக்
கு விஷயமாகாமல் அவைகளைப் பிரகாசிப்பிக்கும் அநுபவத்தானும்
நிஷ்களம்.—நிரவயவம்-[ல-தி.] அஸ்தபாதாதி அவயவங்களையுடை
ய மூவகைச்சரீரங்கட்கும் அந்நியமாய ஆகாயம்போலும் உருவமாய்
மூவகையவஸ்தைகட்குஞ்சாட்சியாய நித்தியமாகியுள்ளதனக்குத் த
னக்கென ஓரவயவமின்மையானும், தன்போல உண்மையாயில்லா
மல் தனதவயவமென்றுசொல்லத்தக்கதானபொருளும் அல்லாமல்
தன்னிற் கற்பிதமாயத்தோன்றுகின்ற பிரபஞ்சத்தைக்குறித்தும் ஓர
வயவமின்மையானும் தான் நிரவயவம். — அநாதி-ஆதி = உற்பத்தி,
அஃதில்லாதது அநாதி. [வி-ச-பா-ம்.] இதற்குக்காரணமில்லை;
இதுதானே சகத்பிராந்திக்கு ஆதிகாரணமாயும், அதிஷ்டானமாயுமி
ருத்தலால் அநாதி. [ல-தி.] யாவைக்குங்காரணமானதனக்குக் கார
ணம் இன்மையானும், அநாதியென்றுகூறும் காயம், அஞ்ஞானம்,

வேதம், ஈசன், சிவன் என்னும் சோபாதிகசகத்தும், நிருபாதிகசைதந்நியமான பிரமமும் ஆகியஇவ்வாறினுள்ளே கற்பித அநாதியானஐந்திற்கும் மூலமானசித்திற்கு ஆதியின்மையின் அநாதி.—அசரீரம்-தேகமின்மையது. [வ-தி.] சரீரங்களையுடையகர்மி, யோகி, உலகபாலர், வைசுவாநரன்முதலிய சீவர்க்கும், சகசரீரமுடைய ஈசுரனுக்கும் அந்நியமாய்விளங்காநிற்குந் தான் சிற்சதாநந்தரூபமாவதாலும், தனக்கொருசரீரமின்மையாலும், சரீரம் என்னதென்னும் அநுபவத்தாற் றனக்குச்சரீரம் அந்நியம், அநித்தியமென்னும்யுத்தி சர்வலோகசம்மதமாவதாலும் தான் அசரீரன்.—அவிகாரம்-விகாரமின்மையது. [வ-தி.] பஞ்சகோசங்களையும், அவைகளின் விகாரங்களையும் அறியும் அறிவேவடிவாதலால் அவிகாரம்.—அத்துவிதம்- [வ-தி ] துவிதமெனபது=இரண்டு; அஃதின்மையது அத்துவிதம்.—துவிதசகத்தோன்றுவதனாற் றான் அத்துவிதமென்பது எவ்வாறெனின்;—மரஞ்செடிகொடிமுதலியவை மண்ணிலேயுண்டாய் மண்ணிலேயிருந்து மண்ணாகவே அழிதல்போலச் சாக்கிராதிய அவஸ்தைகளிற் றோன்றுகின்றசகம் சாட்சியாகியதன்னிலேயுண்டாய்த் தன்னிலேயிருந்து தானாகவே அழிதலாலும், தன்னைப்போல மற்றோர்வஸ்து இன்மையாலும் தான் அத்துவிதம்.—என விலக்கு ஆம் அநேகம் உண்டு-என்று நிஷேதங்களான நாமங்கள் அநந்தமுள.—எ-று.

அநந்தமென்றமையால், இன்னும் அஸ்தூலம், அநணு, அகிருஸ்வம, அதிர்சயம், அக்கிராகியம், அசப்தம், அஸ்பாசம், அரூபம், அவ்வியயம என்பனமுதலியவுங்கொள்க. (௧௰௭)

[இப்படிவிதிமுகத்தாலும், எதிர்மறைமுகத்தாலும் பிரமத்தைச் சுருதிகள்கூறும் சத்தங்கள் அநேகமாயினும் பொருளொன்றேயாவதுபோலச் சச்சிதாநந்தசத்தங்கட்கும பொருளொன்றேயெனச் சுருதியாற்சந்தேகநிவிர்த்திசெய்கின்றார்.]

இன்னவகை விதிவிலக்குக் குணங்களொன்றாய்ச் சேர்ந்தொருமித் தெல்லாங் கூடிச், சொன்னபொரு ளொன்றன்றிப் பிரண்டில்லை யொருபொருளைச் சொல்லுஞ் சொற்கள், பின்னபத மாமதனாற் சதாதி குணப்பொருளாம் பிரம மேகம அன்னபொரு ளொருமையறிந் தகண்டபரி பூரணமா யாவாய் நீயே. (௧௰௮)

(இ-ள்) இன்னவகை-இப்படி(அநேகமாகச்சுருதிகள்கூறுகிற்கும்)—விதி விலக்குக் குணங்கள் விதிநிஷேதங்களாகியகுணங்கள் — கணைறு ஆய்ச்சேர்ந்து ஒருமித்து எல்லாம் கூடிச் சொன்னபொருள்-கனுாகச்சார்க்தொன்றுபட்டு முழுவதுமிரண்டுசொல்லியவஸ்துவானது —ஒன்று அன்றி இரண்டு இல்லை-ஒன்றேயல்லாமல் உபயமில்லை.—ஒருபொருளை-அகண்டைகரசமானபிரமத்தை—சொல்லும் சொற்கள்-பிரதிபாதியாகின்றசத்தங்கள்—பின்னபதம் ஆம்-(பரஸ்பரம்) பின்னமானசத்தங்களாம்.—அதனால்-அக்காரணத்தால்—சத்தாதிகுணப்பொருள ஆம் பிரமம்-சத்து,சித்து,ஆநந்தமென்னும்விசேடணத்தையுடையவஸ்துவாகியபிரமம்—ஏகம-ஏகரூபமாம்.—அன்ன பொருள் ஒருமை அறிந்து-அததன்மையானபிரமத்தின் ஏகரசத்தன்மையை (ச்சுருதிப்பிரமாணத்தால)உணர்ந்து—அகண்ட பரிபூரணம் ஆய் ஆவாய் நீயே-(சஜாதியாதி)பேதரகிதமான பரிபூரணமாயிருப்பாய்நீ.—எ-று.

கைமலை, கறையடி, புழைக்கை என்னுமசொற்கள் பின்னபதமாயினும, அவைகளினபொருளான யானை பின்னமாகாமலொன்றேயாவதுபோலும, ஓர்புருடனை பிதா, மகன, தம்பி என்னும அநேகசொறகளாறசொலலினும அவன அநேகனுகாமல் ஒருவனேயாவதுபோலும்,சச்சிதாநந்தாதிபதங்களாற் சுருதிகூறியபிரமமும அகண்டைகரசமாக இருததலாற் சந்தேகமொழிநது அதுவாயிருத்தியெனபதாம. (௧௧௰)

(உஅ௧) [பிரமம் நிர்க்குணமென்றதால் அதற்குக் குணங்கூறுதல் எனதாய் மலடியெனல்போல அசங்கதமாமென்று சங்கித்துக் குணமாயின, அங்கமாம சொரூபமாகலின், அங்கனமாகாதென்று பரிகரிக்கின்றார்.]

நிற்குணவத் துவின்குணங்க ளுரைப்பதுதாய் மலடியென நிகரென் றுதே, சற்குணமே வத்துவிலை யுரையாம லறியவல்லை சதுரருண்டோ, நற்குணவே தங்களிக்கச் சீடனுமுத் தி பெறப்பிரம ஞானந் தோன்றச், சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களன்று பிரமமாஞ் சொரூபந் தானே. (௧௧௧)

(இ-ள்) நிற்குண வத்துவின் குணங்கள் உரைப்பது-நிர்க்குண

வஸ்துவிற்கு (ஆநந்தாதி அஸ்தூலாதிகளான அநேக) குணங்களை(ச்சுருதி)கூறுவது—தாய்மலடி எனல் நிகர் என்றதே-(என்)றாய்மலடியென்னுங்கூற்றிற்கிணையாய்வியாகாத*மாமென்று சங்கியாதே.—சற்குணனே-(சமாதி) சற்குணங்களையுடையமைந்தா—வத்து நிலை உரையாமல்-வஸ்துவினுடைய(ஆநந்தாதி அஸ்தூலாதி) குணங்களை(ச்சுருதியானும், பெரியோர்களானுங்)கற்பியாமல்—அறிய வல்ல சதுரர் உண்டோ-அறியச்சமர்த்தமுடைய அறிஞருளரா(இவர்.)—நற்குணவேதங்கள்-(ஆகலின், யாவரிடத்துங்)கருணையுடையசுருதிகள—இந்தச சீவன்முத்தி பெற-(௧௩0-வதுசெய்யுளிற்கூறிய) லட்சணமுடைய சீவன்முத்திச்சுகமடையவும்,—பிரம ஞானம் தோன்ற-'முதற்படலத்தில் ௩௬,௩0-வதுசெய்யுளிற்கூறிய' பிரமத்தினபரோட்ச அபரோட்சவிஞ்ஞான(அதிகாரிக்)குண்டாதற்பொருட்டும்—சொல் குணங்கள்-கற்பியாநின்றகுணங்கள்--பிரமத்தின் குணங்கள் அன்று-பிரமத்தினுடையகுணங்களல்ல.—[மற்றென்னையெனின்,—] பிரம்ம ஆம சொரூபந்தானே-பிரமத்தினசொரூபமே.—எ-று.

"வத்துநிலை யுரையாம லறியவல்ல சதுரருண்டோ," என்றதற்கு, உ-ம். வாசிட்டம். "சத்தியம் பிரம மானமா பரமுதற் சாற்றவேண்டி, யித்திறப் பெயர்மே லோரா லிடப்பெற்ற விகத வான்மா." எனவரும். மற்றுமவருவனவற்றுற்காண்க

"பிரமமாஞ் சொரூபந் தானே." என்றதற்கு, உ-ம். வாசிட்டம். "எல்லாமென் றுரைத்ததெலா மறிவித்தற் பொருட்டேயா மிசையச் சொன்ன, சொல்லாலென் வினையறே யாதலினு லோயென்று துணிக விதனை." எனவரும். மற்றும வருவனவற்றுறகாண்க. (௧௬௯)

[சச்சிதாநந்தம் ஏகரசமெனபதிற் சுருதிப்பிரமாணத்தால் சந்தேகந்தெளிந்த சீடன் யுத்தியினானும் சந்தேகநிவிர்த்தியடைதறபொருட்டு வினுதல.]

மோகவிருளா கெடக்கோடி யருணனென வருகுருவே யொழியக் கேளீர், ஏகபரி பூரணமா மென்சொருப மென்னுளதி விறுகும வனைனம், ஆகமங்கள் சொன்னபடி யென்னையகண் டார்த்தமா வறிந்தேனையா,வேகமுமொத் திடவுரைத்தாற் பகமாதநி லாணிபோ லுறைக்கு நெஞ்சே. (௧௭0)

---

*வியாகாதம=முன்னுக்குப்பின விரோதமானவார்த்தை.

(இ-ள்) மோக இருள் கெட-(தனது காரியவர்க்கங்களோடு) அஞ்ஞானவிருள்நாசமாக—கோடி அருணன் என வரு குருவே-கோடிஆதித்தியர்போன்றெழுந்தருளியகுருவே — ஐயா-ஐயனே —மொழியக் கேளீர்-(அடியேன் ஓர்)விண்ணப்பஞ்செய்யக் கேட்டருள்வீராக.—ஏக பரிபூரணம் ஆம் என் சொருபம்-ஏக(ரசசச்சிதாநந்த)பரிபூரணமாகிய எனது சொருப(வநுபூதி)—என் உளத்தில் இறுகும வண்ணம் - எனது அந்தக்கரணத்தின்கண்ணழுந்தும்படியாக — ஆகமங்கள் சொன்னபடி-சுருதிகள்கூறியவாறு—என்னை அகண்டார்த்தமா அறிந்தேன் - (சச்சிதாநந்தமாகிய) வென்னை அகண்டாகாரசப்பொருளாக(நிச்சந்தேகமா)யறிந்துகொண்டேன்.—ஊகமும் ஒத்திட உரைத்தால்-(சச்சிதாநந்தம் ஏகமென்பதில்)உத்தியும்(எனக்குச்)சம்மதமாக வருளிச்செய்தால்—பசு மரத்தில் ஆணி போல்-பச்சைமரத்தில் (அறைந்த)ஆணிபோல—நெஞ்சு உறைக்கும்-(அநுபூதியின்கண் என்)மனமழுந்தும.—எ-று

"மோகவிருள் கெடக்கோடி யருணனென வருகுருவே," என்றது, சமுசயத்திற்குக்காரணமான அஞ்ஞானவிருளை அற்பமுஞ்சேடியாமல் சுலபமாகப்போக்குவிக்கும் சுருதி யுத்தி அநுபூதிவலியைப் பூரணமாயுடையராயிருத்தலினென்க. (௧௪0)

(௨௪௨) [ உத்தியினால் சச்சிதாநந்தங்களினொருமையைத தெரித்துணர்த்துகின்றார்.]

சத்தேசித் தாகுமய லெனிலசத்தா மசத்தானாற் சாட்சி யெங்கே, சித்தேசத் தாகுமய லெனிற்சடமாஞ் சடங்களுக்குத றிவு மில்லை, ஒத்தேதோன் றியசத்துஞ் சித்துநல்ல சுகமாகு மாகத் துக்கோர், வித்தேயன் னியமாகிற் சடமசத்தாஞ் சுகாநுபவம் விளைந்தி டாதே. (௧௪௧)

(இ-ள்) சத்தே சித்து ஆகும்-இருக்கின்றதே விளங்குகின்றதாம்;—அயல் எனில்-(இருக்கின்றதற்கு விளங்குகின்றது) அந்நியமெனில்,—அசத்து ஆம்-(இருக்கின்றதற்கு அந்நியமானசித்து இருப்பில்லாமையின், சசவிஷாணம்போல) அசத்தாம்;— அசத்து ஆனால் -(அச்சித்துஇருப்பில்லாமற் சசவிஷாணம்போல்)அசத்தாயின்,—சாட்சி எங்கே-அதுசாட்சியாதல் எவ்விடத்திற்காணப்படும்: (ஓரிடத்து

யகாணப்படாது.)—(ஆகலின், சத்தேசித்தெனக்கொள்ளல்வேண்டு ம்.) சித்தே சத்து ஆகும்-விளங்குகின்றதேயிருக்கின்றதாம்;—அயல் எனில்- (விளங்குகின்றதற்கு இருக்கின்றது) அந்நியமெனில்,—சடம் ஆம்-(அச்சத்திற்கு விளங்குந்தன்மையில்லாமையின், கடபடாதிகள் போல அச்சத்து)சடமாகும்.—சடங்களுக்குத் திதியும் இல்லை-சடபதார்த்தங்கட்கு (இரச்சுசர்ப்பம்போல) இருப்புமில்லை.—(ஆகலின், சித்தே சத்தாகுமெனக்கொள்ளல்வேண்டும்.) ஒத்தே தோன்றிய-(இவ்வாறனயுத்திக்குப் பின்னமாகாமல்) ஏகமாகவேதோன்றிய—சத்தும் சித்தும்-சத்துஞ்சித்துமே—நல்ல சுகம் ஆகும்-பரமப்பிரேமாஸ்பதமான ஆநந்தமாம்;—அன்னியம் ஆகில்-சத்தாகியசித்துக்கு ஆநந்தமந்நியமாயின்,—சடம் அசத்து ஆம்-சடமும், அசத்துமாம்;— (ஆகவே,) சுகாநுபவம் விளைந்திடாதே- ஆநந்தாநுபவமுண்டாகாதே!—(ஆகலின், சத்தும் சித்துமே ஆநந்தமெனக்கொள்ளல்வேண்டும்;கொள்ளவே, பிரமம் அகண்டைகரசமெனபது யுத்தியாற்பெறப்படுகின்றது.) ஊகத்துக்கு ஓர் விதது-(சச்சிதாநந்தங்களை அகண்டார்த்தமாக) யூகித்தற்கு இவ்வுத்தியே தலைமையானயுத்தியாம்.—எ-று.

"ஊகத்துக்கு." என்றதற்கு, ஏனையகாமங்களையும் ஊகித்தற்கெனினுமாம். (௧௪௧)

[இன்னும் சச்சிதாநந்தங்கள் அகண்டார்த்தமென்பதை யுத்தியால்வற்புறுத்திக்கூறி முடிக்கின்றார்.]

வியாத சத்துமுன்னம் விளங்குவது தன்னாலோ வேறொன்
றாலோ, வாயால்வே றெனிலதுவு மசத்தோசத் தோவசத்தே
ன் மலடி மைந்தன், பேயாகா ரியஞ்செயுமோ சத்தெனவிப் ப
டியனைத்தயும் பிரித்துச்சொன்னால், ஓயாத வவத்தையாங் குதர்
க்கவிகற் பங்களைவிட் டொழிந்தி டாயே. (௧௪௨)

(இ-ள்) வியாத சத்து-காலத்திரயாபாத்தியமானசத்து—முன்னம் விளங்குவது-ஏற்கெனவேவிளங்காநிற்பது—தன்னாலோ வேறு ஒன்றாலோ - (தீபம்போலத்)தன்னாலேயேவிளங்குகின்றதா? (அல்லது,தீபத்தினாலேகடம்போலத்)தனக்குஅந்நியமான வேறொருபதார்த்தத்தினாலேவிளங்குகின்றதா ?—வாயால் வேறெனில்-வாக்கால் தன

க்கநியமானவோபதார்த்தத்தால் விளங்காநின்றதென்னின்;—அதுவும்-(ஆன்மசத்திற்கன்னியமான) அப்பதார்த்தமும்,— அசத்தோ சத்தோ-சத்துவிலட்சணமா? அல்லது, சதந்தர*மா? — அசத்தேல-சத்துவிலட்சணமென்றுசொல்லுவாயாகின்,— பேயா-மதிகேடனே—மலடி மைந்தன் காரியஞ்செய்யுமோ-வந்தியாசுதன் ஓர்காரியஞ்செய்வதுமுண்டோ?—(சத்துவிலட்சணம் வந்தியாசுதன்போல அசத்தாகலின், அதற்குச் சத்தைப்பிரகாசிப்பிக்கிறரூபமான காரியங்கூடாதென்பதுகருத்து.) சத்து என-சதந்தரமென்று— இப்படி-இவ்விதம்— அதையும்- அவ்வன்னியத்தையும்,— பிரித்துச் சொன்னால்-பகுத்துக்கூறிடில்,— ஓயாத அவத்தை ஆம் - (அச்சதந்தரம் நிக்கிருஷ்டமாயிருந்துகொண்டு அசத்தைத்தோற்றுவிக்கிறதா? அல்லது, சமானமாயிருந்துகொண்டுதோற்றுவிக்கிறதா? அல்லது ஒன்றினால் தான்பிரகாசவதிசயம்பெற்றுத்தோற்றுவிக்கிறதா? அல்லது, தானே தோன்றிக்கொண்டு அசத்தைத்தோற்றுவிக்கிறதாவென்று இப்படி நானாவிதமானவிகற்பம்வரும்; வரவே, அச்சதந்தரம் நிக்கிருஷ்டமாயிருந்துகொண்டு அசத்தைத்தோற்றுவிக்கிறதென்னும் முதல்விகற்பங்கூடாது. என்னை? சூரியபிரகாசத்திற்கு நிக்கிருஷ்டமாகிய தீபமும் சூரியனைத்தோற்றுவித்தல்வேண்டுமே, அங்ஙனங்காணப்படாமையினென்க. அச்சதந்தரம் சத்துக்குச் சமானமாயிருந்துகொண்டு அசத்தைத்தோற்றுவிக்கிறதென்னும் இரண்டாம்விகற்பமுங்கூடாது. என்னை? தீபத்திற்குச் சமானமானமற்றொருதீபம் அத்தீபத்தைத்தோற்றுவித்தல்வேண்டுமே, அங்ஙனங்காணப்படாமையினென்க. அச்சதந்தரம் ஒன்றினால் தான் பிரகாசவதிசயம்பெற்று அசத்தைத்தோற்றுவிக்கிறதென்னும் மூன்றாம்விகற்பமுங்கூடாது. என்னை? அச்சதந்தரத்திற்கும் பிரகாசவதிசயந் தருகிறவஸ்து சத்தா? அல்லது, அசத்தாவென்றுவிகற்பிக்கவரும். சத்தென்னின்;—அதுசொப்பிரகாசமா? அல்லது, அப்பிரகாசமாவென்றுவிகற்பிக்கவரும், அதுசொப்பிரகாசமென்னின்;—அப்பொழுது சொப்பிரகாசமாகியசத்தே சித்தாகலின், சத்துக்குச் சொப்பிரகாசத்துவமும், அத்துவிதீயத்துவமும் வேதாந்திகட்கன்னியரால் அங்கீகரிக்கப்படவில்லை. ஆதலால், ஆன்மசொரூபமாகியசத்தைத் தோற்றுவிக்கிறசதந்தரத்திற்

* சதந்தரம்-வேறுசத்து.

குப் பிரகாசவதிசயந்தருகிறசத்து சொப்பிரகாசமென்னல்கூடாது. அப்பிரகாசமெனனின;—அதுவுங்கூடாது. என்னை? அப்பிரகாச மாகியவஸது பிரகாசமாகியவஸ்துவுக்குப பிரகாசவதிசயத்தைததரு வதுகணடிலேம; ஆகலின், அப்பிரகாசமெனலுங்கூடாது; ஆனால, அநநியவஸதுவினறபிரகாசவதிசயததைப்பெற்றுச் சதந்தரம் ஆனமா வைவநதோறறுவிக்கிறதென்னின்;—அநநியவஸ்து அசத்தாகலின, அ ஙஙனஞ்சொல்லுதலுங்கூடாது; அஙஙனமாயின், ஆன்மசொரூபமான சததிறகுப்பிரகாசவதிசயந்தருஞசதநதாரததிறகுப் பிரகாசாதிசயநதரு ஞசதது அந்நியமொனறுண்டெனலவேணடும; அஙஙனஞசொலலி ன,—அச்சததுக்குப்பிரகாசவதிசயந்தருஞ்சதது அநநியமொனறுண டென்றும, அசசததிற்குப்பிரகாசவதிசயநதருகிறசத்து அநநியமொன றுண்டெனறுமஇப்படி) அநவஸ்தாதோஷமும, சததிறகுஅப்பிரகாச ததுவமும,தோயததுவமுமுணடெனறு) வரும.—(உலகினகணணே ஒனறிறகுப் பிரகாசவதிசயநதருமஅககினியாதிகள தாமபிரகாசமாயி ருந்துகொண்டே அந்நியஙகளைப்பிரகாசிபபிக்ககணடோம தாம அப் பிரகாசமாயிருநதுகொணடுஅநநியஙகளைபபிரகாசிபபிக்கக கண்டிலே ம;ஆதலால,முனசொனனபட்சததிரயஙகளுஙகூடாமையின,சததை ததோறறுவிககிறசதந்தரமதானேசொப்பிரகாசமாயிருநதுகொணடுஅ சசததாகியவஸதுவைததோற்றுவிககிறதெனறேசொலலலவேணடும, இஙஙனஞ்சொலவில, சொபபிரகாசமானசதநதரமே சிததெனறுசித திததது; இஙஙனமாமேல, உலகினகண ஆகாசததிற்போல உபாதிய னறிச சததுத்துவயம்நிரூபிததலகூடாது ஏனெனின;—நிருபாதிக மாகியசத்து அததுவிதீயமெனறு சருதியாதிகளாறசொலலபபடுவதா ல, ஆகலின, பிரகாசமாகியசதநதரததால அவவானமசததுத தோ னறுகிற்கின்றதெனனலகூடாது. மறறெஙஙனெனின, — ஆனம சொரூபமாகியசத்துச் சொப்பிரகாசமாயிருததலின, அதுவே சிததெ னறுசிததிததது; அசசிததானசததிற்கு விலட்சணமானவஸ்து அச ததாகலின், அதறகு இரண்டாமவஸ்து இலலை; ஆகையால, அசசித தானசததே ஆநந்தரூபமாயிற்றெனறு இப்படியூகிதது ) குதாக்க வி கறபஙகளை விட்டு ஒழிக்கிடாய்-(முனனே நீ ஆட்சேபிதத) குதாக்க மாகியவிகற்பங்களை விட்டொழியக்கடவாய்.—எ-று.

"பேயா." என்றது, சீடன் குதர்க்கங்களைவிட்டு நம்புதற்பொரு ட்டுத் திருவுள்ளத்தினகண் சற்றே முனிவுற்றதுபோற்காட்டிக் கூ றினது. (௧௪௨)

(௨௮௩) [சச்சிதாநந்தங்கள் அகண்டார்த்தமாகவுள்ளதன்மையை, ௧௩௯-வது செய்யுடொடங்கி, ௧௪௨-வது செய்யுள்வரையும், சுருதியுத்திகளானுணர்த்துவித்து இனியநுபூதியானுந் தெரித்துணர்த்துகின்றார்.].

சுருதியுத்தி யொத்ததுபோ லநுபவமுங் கேள்சுழுத்திச்
சுகவா நந்தம், மிருதிவடி வாதலிலவ் வாநந்த மேயறிவாம
வேறங் கில்லை, கருதுபிர ளயஞ்சுழுத்தி யிரண்டிலுநீ யிருக
திருளைக காண்கின் றாயே, இருதயத்திற் படிநோக்கி யேகப
ரிபூரணமா யிருக்கி டாயே. (௧௪௩)

(இ-ள்) சுருதி யுதகி ஒத்தது போல்-(சச்சிதாநந்தங்கள் தம்மில்வேறுபடாமல அகண்டார்த்தமாயிருப்பதில்) சுருதியுத்திகள் விரோதியாமல ஒத்ததுபோல—அநுபவமும் கேள்-அநுபவமொப்பதையுங் கூறக்கேட்பாய்.—சுழுத்திச சுக ஆநந்தம்-உனதுசுழுத்தியின்கண் (நித்திய நிருபாதிக நிரதிசய) சுகசொரூபமாகிய ஆநந்தமானது—மிருதி வடிவு ஆதலில்-(அங்கே அஞ்ஞானத்தைப்பிரகாசிப்பித்துக்கொண்டிருந்து விழித்தபொழுது ஒன்றுமறியாமற்சுகமாயிருந்தேனென்னும) ஸ்மிருதிரூபமாக உதித்தலால்,—அவ்வாநந்தமே அறிவு ஆம்-அவ்வாநந்தமே சித்தாகும.—[ஆண்டஞ்ஞானம் வேறொன்றுல்விளங்கிற்றெனப்பாயேல்,] அங்கு வேறு இல்லை - அச்சுழுத்தியின்கண் ஆநந்தத்தைத்தவிரப்பிரகாசாந்தரமில்லை — கருது பிரளயம் சுழுத்தி இரண்டிலும்-கருதுகின்றபிரளயமும், சுழுத்தியுமாகியஇரண்டவஸ்தைகளிலும—நீஇருந்து-(சிதாநந்தரூபனாய்) நீ இருந்தே—இருளைக் காண்கின்றாய-(அஞ்ஞானமாகிய) இருளைக்காண்கின்றாய்;—(ஆகலின், நீ சச்சிதாநந்தசொரூபனும்: சச்சிதாநந்தசொரூபமே சாஸ்திரங்களிற் பிரமமென்றுகூறியிருப்பதால் பிரமசொரூபமே ஆன்மா. [வியாபகமாயிருப்பதற்குப் பிரமமென்று பெயராம்.] தேசத்தாலெதற்கந்தமில்லையோ அது வியாபகமென்றுசொல்லப்படும்; அதற்கு ஆன்மாபின்னமாமேல், தேசத்தாலந்தமுடையதாம்: எதற்குத்தேசத்தாலந்தமுண்டோ அதற்குக்காலத்தானும் அந்தமுண்டாம்; இதுநியமமாகலின், ஆன்மா அநித்தியமாம்: எதற்குக்காலத்தாலந்தமுண்டோ அஃதநித்தியமெனப்படும்; இதனால், பிரமத்திற்குப்பின்னமாக ஆன்மாஇல்லை; ஆன்

மாவிற்குப்பின்னமாகப் பிரமமில்லை; பின்னமாயின், அநான்மாவா ம்: அநான்மாவாகியகடாதிகள் சடமாகலின், ஆன்மாவிற்குப்பின்ன மானபிரமமும சடமேயாம்; ஆதலால், ஆன்மாவுக்குப்பின்னமாகப் பிரமமுமிலலை, பின்னையோ பிரமசொரூபமே ஆன்மாவாம்: சேதன மொன்றே சர்வப்பிரபஞ்சத்திற்கும், மாயைக்கும அதிஷ்டானமாவ தால பிரமமென்றுசொல்லப்படுகிறது. அவித்தைக்கும், வியஷ்டி தேகாதிகட்கும் அதிஷ்டானமாவதால் ஆனமாவென்றுசொலலபப டுகிறது. தற்பதலட்சியம் பிரமமெனறும, துவம்பதலட்சியமஆன மாவென்றுஞ்சொல்லப்படும். ஈசுரசாட்சி தறபதததிற்குலட்சியம. சீவசாட்சி துவம்பதத்திற்குலட்சியம். வியஷ்டிசங்காதவுபகிதசே தனம சீவசாட்சி. சமஷ்டிசங்காதவுபகிதசேதனம ஈசுரசாட்சி. சீவ னுககும, ஈசுரனுக்கும் ஏகத்தன்மைகூடாதாயினும சீவசாட்சிககும, ஈசுரசாட்சிக்கும் உபாதியின்னென்றிப்பேதமினமையாற் சொரூபததா லவவிரண்டுமொன்றே; மடத்தின்கண்ணுள்ளகடாகாச மடாகாசஙக ட்கு உபாதியினாற்பேதமேயன்றிச்சொரூபத்தாற்பேதமின்மைபோல ஆனமாவுக்கும, பிரமத்திற்கும் உபாதிபேதமேயன்றி வேறுபேதமில லை, இரணடுமொன்றே.) இத்துணையுங்கூறியது, "கருதுபிர ளயஞ்சு ழுத்தி யிரண்டினுமி யிருந்திருனைக் காண்கின் ருயே." எனபதனகரு த்துரை. இருதயத்து இப்படி நோக்கி-உனதிருதயததினகண இவ வாறுநாடி—ஏக பரிபூரணம் ஆய இருந்திடாய்-(சஜாதிய, விஜாதிய, சுவகத) பேதரகிதமாளபரிபூரணப்பிரமமாயிருப்பாய்.—எ-று.

"சுழுத்திச் சுகவா நந்தம் மிருதிவடி வாதலின்." எனபதை, "ப ரமமா யுண்டெனல் வடிவாய், மினனிய சமமா மறிவுகாண் பவறறி ன் மேவுற வெழுதல் சங கற்பம." எ-ம், " அறிவெனும விதைசங க றபமா முளையாம." எ-ம வரும வாசிட்டச்செயயுடகளானுயததுணரக

கக௨-வது செய்யுளில், "சச்சிதா நந்தா னென்னவிவன ம னனும து பவமெனஙனே." என்று சீடன்சஙகையினமேலவைதது உபக்கிரமித்ததை இங்கே உபசமமாராஞ்செய்தனரென்றறிக. (கசக.)

(உ௮௫) [சீடன் குருவருளால் சமாதிரூபமான அநுபூதிவா யிலாகச் சந்தேகந்தெளிந்து ஆரூடமடைந்ததைக் கூறு கின்றார்.]

பலகலையு முணர்ந்தகுரு மொழிந்தபடி யிவனுமநு பவமவி டாமல், பலமலரின் மதுப்போலே சச்சிதா நந்தமொன்றாம பரமார்த் தத்தைப், பலபொழுதுங் கண்மூடிச் சமாதியிருந் தான்விழித்துப் பார்த்த போது, பலவடிவாஞ் சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு படமா னானே. (௪௮௪)

(இ-ள்) பல கலையும் உணர்ந்த-பலஞானநூல்களையும் உள்ள படியறிந்து நிஷ்டையிலேயுமுடைய— குரு-குருவானவர்—பல மலரின் மதுப்போலே-பலபுஷ்பங்களினின்றும் (தேனீக்களாலெடுத்து சேர்த்த)தேனைப்போல—சத் சித் ஆநந்தம் ஒன்று ஆம்-சச்சிதாநந்தங்கள் அகண்டைகரசமான— பரமார்த்தத்தை-உண்மைநிலையை—மொழிந்தபடி-சுருதி யுத்தி அநுபவத்தோடும் உபதேசித்தபடி—இவனும்-இச்சீடனும்,—அநுபவம் விடாமல்-(சுருதி யுத்திகளுக்கொத்த தான) தன்னநுபவத்தைவிடாமற்கொண்டு— பலபொழுதும்-பலகாலும்—கண்மூடி- (திசைகளைப்பாராதிருக்கும்படி) கண்களைத் தன்னு மூக்கினுநிமேலேமிறுத்தி— சமாதி இருந்தான்-சமாதியிலிருந்தனன் —விழித்துப் பார்த்த போது-(பின்னே சமாதியினின்றும்) உதித்தெழுந்துபார்த்தபோது—பல வடிவு ஆம்-அநேகவிதரூபங்களான— சர அசர சித்திரங்கள் எலாம்-சராசரங்களாகிய சித்திரங்களனைத்தும்—தோன்றும்- (கிச்சிதரமானகண்ணாடியிற்புரம்போலத்) தோன்றுகிறதும்—ஒருபடம் ஆனான்-அகண்டசச்சிதாநந்தபரப்பிரமமே தானா னான்.—எ-று.

சராசரவுருவங்களைச் சித்திரமென்றமையின், அவற்றிற்காதாரமாகிய அகண்டைகரசனானதன்னை, "படம்." என்றார்.

தியானிக்கிறவனையும், தியானத்தையும் கிரமமாகப்பரித்தியாகஞ்செய்து தியானிக்கப்படுமென்ற ஒருபிரமமாத்திரம் கோசரமுடையதாய் நிவாதஸ்தலதீபம்போலிருக்குஞ்சித்தஞ் சமாதியெனப்படும். "விழித்துப் பார்த்த போது,பலவடிவாஞ் சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு படமானானே." என்றதற்கு, உ-ம். வாசிட்டம். "சுசனுயர் சமாதி நீங்கி யொருபகற் கழிக்கு நெஞ்சன், வசமறத் தமூத மூழ்த்த வசனத்தன் யாது செய்கேன், திசையுற வெங்கு செல்கேன் நீபமெதனை கொள்வ தென்று, மிசையுயர் கற்ப கீர்போல் மேதினி

யெங்கு நானே." எ-ம், "மேனியிற் புறத்தினுள்ளின் மேலொடு கீழி ற் றிகில, வானிலவை யகத்திலெங்கும் யானன்றி மற்றொன் றில லே, யானிலா விடமு மில்லேயென விடத் திலாது மில்லே, தானிகழ் பொருளவே றிலலே சச்சிதா நந்த மென்றான்." எ-ம், பாடுதுறை. "த னிலே யெல்லாமி ருக்குமாகிற றனெல்லாத துள்ளுமி ருப்பனுமி ல்,பினனிலன்முன்னில னவனுமிற பெரிதுமு டிநதீதன் வாழ்க்கை ப் பாடே." எ-ம் வரும். மற்றுமவருவன வறறுற்காண்க. (௧௪௪)

[குருவையும், அவரருளாலே வேதாநதவிசாரததினபயனு ன கர்ததவவியபுத்திகிவிரததி தனக்குண்டானதையும வி யநது முன்னே ௧௩௨-வதுசெயயுளில உபோதகாத*மாக க்குருவருளியதைப்பற்றி விநோதமாகச் சிடனசங்கிக்கி ன்றான்.]

இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே விஞ்ஞயனறி யி னி வேறுண்டோ, அதையுரைதது மதைகினைதது மிருப்பத னறோ ஞானிகளுக் கான நீதி, முதலுரைதத துரியாதி தமு மேழாம பூமியுமுக் கியமா மென்ற, பதமுமதின வகையுமெ னக் கௌிதாகத தௌியுமவணணம பணித்தி டீரே. (௧௪௫)

(இ-ள்) இதயம் ஒதத சற்குருவே-எனதுமனதுக்கொதத சத துபதேசமபணணுகினறகுருவே—நமககு-(கிருதகிருதத்யரான) நமக் கு —இதுவே-(பிரமாகாரவிருததியுண்டாறதறகுககாரணமான வேதாந் தவாக்கியங்களால் நமதானமசொரூபமானபிரமததைச் சிநதிததுடகி ழாநிறகும்) இததொழிலதானே—விஞ்ஞய அனறி-விநோதமாகவுரி

*உபோத்காதம எனறது, பிரகிருதததைச்சொலலாகிறகும உ தாரணம பிரகிருதாாததததைவாணிததறகு அநகியாாததததைவா ணிததல. திருஷடாநதம. அநகியனுடையகிரகததிறகுப்போய மோ ரவாஙக ஒருவனுக்கு இச்சைவநதபோது அவன அநகியனுடையகிரக ததிற்குப்போய முனனே மோாகொடுவெனறுசொலலில,உலோபியா கியமது—னல மோாகிடைக்கமாட்டாதாகலின, அநதப்பிரயோஜன ததை மனதிலவைததுககொணடு அதனாிய்ததம உன்னுடையபசு க றவலவுண்டா?இலலையா?எனபதுமுதலியவாாததையுரைததல உபோ ததாதம.

யதல்லாமல்—இனி வேறுண்டோ-இனிமேல் இதற்கதிகமான ஒரு கிரியைசெய்யத்தக்கதாகவுண்டோ (இல்லை.)—அதை உரைத்தும்-(சிஞ்ஞாசுகளையுடையோர்வசில்)அப்பிரமத்தைத்தானே அவர்கட்குபதேசித்தும்,—அதை நினைத்தும்-(தனித்திருக்கில்)அதைத்தானேசிந்தித்தும்—இருப்பது அன்றோ-இருப்பதல்லவா!—ஞானிகளுக்கு ஆன நீதி-அறிஞர்கட்குரியதர்மநியாயம்.— (ஆகவின்,) முதல் உரைத்த-முன்னே (கஙஉ-வதுசெய்யுளிற்)கூறிய—துரியாதீதமும்,—ஏழாம்பூமியும்,—முக்கியம் ஆம் என்ற பதமும்-முக்கியமாகுமென்றுசொல்லியபதமும்,—அதின வகையும்-அதன்கூறுபாடும்—எனக்கு—எளிதாகத் தெளியும் வண்ணம-இலேசாகப் போதமாகும்படி—பணித்திமர்-அருள்வீராக.—எ-று.

அநேகபிரகாரமாகத் தானுடசேபித்த ஆட்சேபங்களுக்கெல்லாஞ்சமாதானம தன்மனத்துக்குச்சம்மதமாகும்படி அருளிச்செய்து சந்தேகங்களனைத்தையுந் தெளிவித்தலால், "இதயமொத்த சற்குருவே." என்றான். (கசஙு)

(உஅரு) [வேதாந்தசாஸ்திரங்களின் சாரபூதமான ஞானசத்தபூமிகளை விஸ்தாரமாகவறியவேண்டிச் சிடன்கடாவினதற்கு விடையாகக்கீர்த்திக்கததொடங்கி அவைகளைவிரோதியாகவுடைய அஞ்ஞானசப்தபூமிகளின் நாமங்களை முன்னர்க் கூறுகின்றார்.]

வினவுமிடத் தஞ்ஞான பூமிகளேழ ஞானபூ மிகளே ழெனபரா, இனியவற்று ளஞ்ஞான பூமிகளே ழையுமுக்கி யமபக கேளாய், தனிவிதைச் சாகிரஞ்சாக் கிரமகா சாகிரஞ்சாக கிரத்தைச் சார்ந்த, கனவுகனுக் கனவுசாக் கிரஞ்சுழுத்தி யென்றெழுபே கணித்தாரமேலோர். (கசகசு)

(இ-ள) வினவும் இடத்து-(பூமிகளைத்தனையென்) றுசாவிதத்தாராயுமிடத்து—அஞ்ஞானபூமிகள் ஏழ் ஞானபூமிகள் ஏழ் என்பார்-அஞ்ஞானபூமிகளேழென்றும், ஞானபூமிகளேழென்றும்(வாசிட்டமுதலியகிரந்தங்களிற்)பெரியோர் கூறுவர்;—இனி அவற்றுள்—இனி அப்பூமிகளுள்,—அஞ்ஞானபூமிகள் ஏழையும் - அஞ்ஞானசத்தபூமி

கனையும்—மூர்த்தி இயமபக் கேளாய்-முன்னே சொல்லுகிறோம் கேட்பாய்.—தனிவித்துச் சாக்கிரம்- (க-வது) கலப்பில்லாத பீஜசாக்கிரம்,— (உ-வது) சாக்கிரம்,— (ந-வது) மகாசாக்கிரம்,— சாக்கிரத்தைச்சார்ந்த கனவு -(ச-வது) சாக்கிரசொப்பனம்,— கனு - (ரு-வது) சொப்பனம்,— கனவு சாக்கிரம் - (சு-வது) சொப்பனசாக்கிரம்,— (எ-வது) சுழுத்தி — என்று—எழுபோ-எழு நாமங்கள்— கணித்தாரமேலோர்-மதித்தனர் பெரியோர்.—எ-று.

கணித்தார்—எண்ணினரெனினும ஆம. (கசசு)

(உஅக) [பீஜசாக்கிரம, சாக்கிரம, மஹாசாக்கிரம், சாககிரசொப்பனம என்னும் இந்நான்கு பூமிகளின் இலக்கணங கூறுகின்றார்.]

மூந்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத திரமதுதான் முதல்வித் தாகும், இநதவறி விறபண்டில லாவகநதை முனேபோலா மிதுந னுவாம, வந்துவநது பிறவிதொறு மகமமதை வளருமது மகாந னுவாம், நநதுமகங் கொடுநனவின் மனோராசசியஞ்செயலே நனுக்க னுவே. (கசஎ)

(இ-ள) மூநத-சர்க்காதியில அல்லது, சாக்கிரத்தினுதியில,—அகண்டதது - மாயாசபள* சைதந்நியததினினறும— எழும ஓர அறிவு மாததிரம அது தான்-எழுகினற சிதாபாசததோடகூடின ஒரு அறிவுமாததிரமான அதுவே—முதல விதது ஆகும-பிரதமாவஸ்தையான பீஜசாககிரமாம.—(பினனே) இநத அறிவில- (பீஜசாககிரமெனறு) பிவவறிவினகண்ணே—பணடு இலலா அகந்தை-முனனிலலாதவையான அகந்தை(மமதைகள)—முனேபோல் ஆம-அஙகுரமபோலச சூட்சமமாகவுழாகிற்கும்—இது-இவவவத்தை—நனு ஆம-சாககிரமாம.—வநது வந்து-உண்டாகி உணடாகி—பிறவி தொறும்-சநநதகடோறும—அகம மமதை வளரும அது-அகந்தைமமதைகள இடதரமாயுதியாகிற்குமதுவே—மகா நனு ஆம-மஹாசாக்கிரமாம.—நந்தும் அகங்கொடு-ஆக்கமுடைய அந்தககரணததைக்கொண்டு— நனவின்

* சபளம்—கூடியது.

-சாக்கிரத்தின்கண்—மனோராச்சியம் செயலே-(முன் தான் அறிந்த தேனும், அறியாததேனும் அதன்மயமாய லவணன்¶போல) மனோ ராசசியஞ்செயலே—கனுக் கனு-சாக்கிரசொப்பனமாம.—எ-று.

அகந்தை என ஒன்றைக்கூறினும், இனமபறறி மமதையுங் கொ ளளப்பட்டது.

இங்கே, "அகண்டம்." எனபதற்கு, மாயாசபளசைதந்யமென று பொருளவிரிததது மாயாரகிததிற் சிருஷ்டிகூடாதாகலினெனக; இது பெரியவாசிட்ட வியாக்கியானததின கருத்து; அதுசம்பூர்ணமா கலின, "அகண்டம்." என்றார்.

சிதாபாசசம்வலிதஜீமானசேதனம் நாமமின்றி மலமினறியென பா,"அறிவுமாத்திரம." எனறும்,தேகோற்பததி அநந்தரமுண்டாய வளராநிறகும சித்தம், சீவனமுதலியநாமசததங்கட்கும், அவைகளின அர்த்தங்கட்கும் பீஜபூதமாய் நிறறலாற பீஜசாக்கிரமாமென்பார், "வி த்தாகும." எனறுங்கூறினர்.

"அகந்தை." எனறது, தேகம் நானெனனுமநிச்சயம். "மம தை." எனறது, போக்கியசமூகமஎனதெனனுமநிச்சயம். "பண டிலவா." எனறது, "முன்போலாம." எனபதறகேதுகூறினது. சஜா ...யமான பூர்வபூர்வசம்ஸ்காரஉறபோதததால விசேஷஅறிவு திட ...மாயுதியாநிறகும சாக்கிரததினிச்சயம, "மஹாசாக்கிரம." எனபா ... "வந்துவந்து பிறவிதொறு மகமமதை வளருமது மகாசு ஞவாம" எனறா... (கசஎ)

[ஏனைமூனறுபூமிகளின இலக்கணங்கூறுகின்றார்.]

உண்டுறங்கி மனோராசசி யஞ்செய்சொப் பனமெனுமபே ருண்டாய தாகும, பனமேகனுக் கணமேமறக் தனைமீண்டு நினை பபதுசொப பனக ஞவாம, மண்டுமிருண மூடுலது சுழுததி யா மனுஞான வகைகள சொன்னேம, மீண்டுநிறை முத்தித ரு ஞானபூ மிகளேழும விளமபக் கேளாய். (கசஅ)

(இ-ள்) உண்டு உறங்கி-போஜனஞ்செய்து (பாயலிற்படுத்து) நி

லவணன்—வாசிட்டத்திற்கூறியுள்ள ஓரரசன்.

சமவலிதம—கூடியது.

தநிரைசெய்து—மனோராச்சியம் செயல்-(அற்பகாலத்தில் அநேககாலவியாபாரரூபமான) மனோராச்சியஞ்செய்து (நித்திரையினந்தத்தில நித்திராகாலத்தில அநுபவித்ததை) நினைப்பதே—சொப்பனம் எனும் பேருடையது ஆகும்-சொப்பனமாம்.— பண்டு கனுக்கண்டு மறந்ததை-பூர்வஞ்சொப்பனங்கண்டுமறந்ததை—மீண்டுமினைப்பது-திரும்பவும் (திடமான அபினிவேசத்தால வெகுகாலஸ்தாயியாகப்) பாரப்பது—சொப்பன சுஞ ஆம்-சொப்பனசாக்கிரமாம்.—(சொப்பனம சாக்கிரமபோலச் சாசகிரத்தினகணணேதோனறுதலின்,) சொப்பன சாக்கிரமாம். (அரிச்சந்திரனுக்குத் துவாதசாதமகவருடமபோல, இது பெரியவாசிட்டவியாக்கியானககருததது.) மணமெ இருள மூடிவது-(மேலநுபவிக்கததக்கவாசனை கருமங்க) ளொருங்கியிருக்கும் அஞ்ஞானவிருண்மூடிச் சடமாயிருப்பது—சுழுத்தி ஆம்-சுழுத்தியெனனும் ஏழாமபூமியாம்.—முந்தின ஆறவஸ்தைகளும் காமபலபோகபூமியாகலின, காமஜநியங்கள சுழுத்தியோ பூர்வகாமங்கள போகததிலைடேசமாகி மேலகாமங்களுண்டாகாமலிருக்கும்போது மததியில சத்திர* நாசத்திற்போலச் சாவருடசும ஸதூலப பிரபஞ்சவிலயததில அவைகளினபீஜமான அஞ்ஞானமாததிரஞ் சேடிததிருப்பதால் அதனஉபகிதமான ஆன்மாமாததிரஞ்சேடிததிருபபதான உருவமுடையது சுழுத்தியெனறபிப்பிராயம். [அஞ்ஞானபூமிகளைமுடிதது ஞானபூமிகளைக் கூறத்தொடங்கல்.] அஞ்ஞான வகைகள சொனனேம்-அஞ்ஞானசததபூமிகளினகூறுபாடுகளைககூறினேம்.—(இனி) விணடு நிறை முத்தி தரும்-வியாபகமாகநிறைநதுள்ள மோட்சததைக் கொடுக்கும்—ஞானபூமிகள ஏழும் விளமபக் கேளாய்-ஞானபூமிகளேழையுங்கூறக் கேட்பாயாக.—எ-று.

"விணடு" எனபதறகு, அஞ்ஞானததையொழிதது எனப்பொருள்கூறினும அமையும்; அங்கே விணடு எனனுந்தனவினை "குடிபொனறிக குற்றமு மாங்கேதரும." என்றாறபோலப் பிறவினைப பொருட்டது நினறதெனககொளக. (௧௪௮)

(உ.அஎ) [ஞானபூமிகளின நாமங்களை மாததிரங் கூறுகின்றார்.]

புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சை விசா ரணையிரண்டாம
பூமி யாகும், நலதநுமா னசிமூன்றும பூமிசதது வாபததி
நாலாம பூமி, சொலுமசமசத் திபபேரும பதார்த்தாபா வனை
ப்பேருந் துரியப் பேரும், மலினமறு மகனேயைந் தாறேழு
பூமிகளா வகுத்தார் மேலோர். (௧௪௯)

---

* சத்திரம—கொடை.

(இ-ள்) புலவர் புகழ் - (சகலசகத்துக்குச்சமென்றவற்றின்கண்ணே அவாவொழிந்து அறியத்தக்கனவான அனைத்தினையும் அறிந்த) பெரியோர் கீர்த்தியாகிற்கும் (ஞானசத்தபூமிகளுள்,)—சுபேச்சை முதல் பூமி-சுபேச்சையென்பது முதற்பூமியாம்.—விசாரணை இரண்டாம பூமி ஆகும்-விசாரணையென்பது இரண்டாமபூமியாம்.—கல தநுமானசி மூன்றும் பூமி-கல்லதநுமானசியென்பது மூன்றும்பூமியாகும்.—சத்துவாபத்தி நாலாம பூம்-சத்துவாபத்தியென்பது நாலாம பூமியாகும்.—சொலும அசம்சத்திப பேரும்-சொல்லுகின்ற அசம்சத்தியெனனுநாமமுடையதையும்,— பதார்த்தாபாவனைப் பேரும்-பதார்த்தாபாவனையெனனுநாமமுடையதையும்,—துரியப் பேரும-துரியமெனனுநாமமுடையதையும—(முறையே) ஐந்து ஆறு ஏழு பூமிகளா - ஐந்தாமபூமி, ஆறும்பூமி, ஏழாமபூமிகளாக — வருத்தார மேலோர-வருத்தனாரபெரியோர.— மவினம்அறுமகனேயெனறது, வினி.—எ-று. (சசக)

(உஅஅ) [அவற்றுள், முத்தினானகுபூமிகளின் இலக்கணங்கூறல்.]

துறசங்க கிவிர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சை யாகும், நறசங்க மொழிவினவி ஞானநூல் பழகல்விசாரணையா நம்பி, முற்சங்க வேடனைகள விடறநுமா னசியெந்த மூன்றினுலும், சறசங்க மனதிலுண்மை யறிவுதித்தல் சத்துவா பத்திதானே. (சுசO)

(இ-ள்) துறசங்க கிவிர்த்தி வந்து சிவஞானம் விரும்புவது-மனைவிபுத்திராதிய (குசங்கங்களோடுகூடி இத்தனைநாளும் மூடமாயிருந்தகாரணமெனனே? இனி அங்ஙனம்மோசமபோகாமல்) இக்குசங்கங்களை வயிராக்கியத்தாறறுறந்து (அக்கிராசையிலுல பிரமநிஷ்டானபெரியோர்களாலும, ஞானசாஸ்திரங்களாலும அடையவேண்டிய) பிரமஞானத்தை (அடையக்கடவேமென்று அதனை) இச்சிப்பது—சுபேசசை ஆகும-சுபேச்சையென்னும் முதற்பூமியாம்.— நற்சங்க மொழி-(சுபேச்சைமுதிர்ந்து) சற்சங்கமானபெரியோரையடைந்து அவர்கள்வாக்கால்—ஞான.நூல் வினவி-வேதாந்தசாஸ்திரங்களைக் கேட்டு—பழகல்-அதை மனனம்பண்ணுவது—விசாரணை ஆம்-விசாரணையெனனு மிரண்டாம்பூமியாம்.—நம்பி-(முன்சொன்ன இரண்டு

பூமிகளின் அப்பியாசவலியால்) குருசாஸ்திரவாக்கியார்த்தங்களை விசலித்து—முற்சங்க ஏடணைகள் விடல-(நிதித்தியாசனஞ்செய்து அந்நிதித்தியாசனவப்பியாசவலியால் சவிகற்பசமாதிபரியந்தஞ்சித்தித்து)முன்னுள்ள மலினவாசனைகளான இச்சைகளைவிடுதலே—தநுமானசி-தநுமானசியென்னுமூன்றாம்பூமியாம்;—இந்த மூன்றினாலும-இம்மூன்றுபூமியப்பியாசவலியினாலும—சற்சங்க முனதில்-(வாகியார்த்தவிடயங்களில சமஸ்காரநாசத்தால ஆத்தியந்திக திடவைராக்கியரூப) சத்துவாசனையோடுகூடியமனதினகண — உண்மை அறிவும் நித்தல-ஆன்மசாட்சாத்காரமுண்டாதல—சத்துவாபத்தி-சத்துவாபத்தியென்னு நான்காம்பூமியாம—எ-று.

"துறசங்கநிவிர்த்தி." என்றது, சாதனசதுஷ்டயவுபலட்சணம; இப்படிக்கூறினதனால நிஷித்தவாசிதமாயும், நிஷ்காமமாயுமிருக்கின்ற யகஞம, தானமுதலிய அநுஷ்டானத்தாலுண்டானதாயும், சந்நியாசம் சாதனசதுஷ்டயமிவைகளோடுகூடினதாயும, முத்தியை முடிவாகவுடையதாயும், சிரவணாதிபிரவிர்த்தி பலத்தோடுகூடினதாயுமுள்ள ஆன்மசாட்சாத்காரத்தின தீவிரவிச்சையேமுதற்பூமி. அங்கியம சித்தசுத்திஎதுவாகலால் முன்னமேசித்தித்திருத்தலின, குருசுசுரூஷை, பிட்சாடனம,சௌசமுதலிய யதிதாமபாலனத்தோடுகூடின சிரவணமனனங்களான சதாசாரமே எனபார, "நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல்விசாரணையாம." என்றார.

சாதனசதுஷ்டயசமபத்தியாதிபூர்வகமான சிரவண மனனங்களோடுகூடின நிதித்தியாசனத்தினுல மனதுக்குச் சத்தாதிவிஷயங்களில இச்சையொழிந்து சவிகற்பசமாதியான யாதொருசூட்சமதத்தன்மையுண்டோ அது, "தநுமானசி." [தநு=சூக்குமதமம.] மனது சூக்குமதமமானதன்மையையடைதலின, "தநுமானசி." எனப்பெயராயிற்று.

இவவாறு சுரோத்திரமுதலானகரணங்களால் சத்தாதிவிஷயங்களைக்கவாவது எதுவரையிலுண்டோ அதுவரையில தியானம்; அதற்குமேல் சமாதியென்று யோகசாஸ்திரத்திற் சொல்லியிருக்கின்றது.

வாகியார்த்தவிஷயங்களில் சம்ஸ்காரநாசத்தால் ஆத்தியந்திகமான சித்தத்தின்கண்ணுள்ள திடவைராக்கியத்தால் மாயை, அதன்

காரியம், அவஸ்தாத்திரயம் இவைகளினின்றுஞ்சோதிக்கப்பட்ட சாக்ஷியதிஷ்டானசைதன்யமாத்திரரூபமான ஆன்மாவினகண் கண்டிரோதகம்போலுந்திரிபுடிவிலயமாய்ச்சாட்சாத்காரபரியந்தமாகவுள்ளதான நிருவிகற்பசமாதிரூபஸ்திதியே சத்துவாபத்தி. மனது பரமார்த்தசத்துவரூபமாக ஆன்மையின், சத்துவாபத்தியென்றறிக. (கஅ0)

[பின்னையமூன்று பூமிகளினிலக்கணங்கூறல்.]

தத்துவத்தின் மனமுறைந்து மிதனையெலா மறந்தலசம்ச
த்தியாகும், அத்துவிதா னந்தமவருந் திரிபுடிபோம் பதார்த்தா
பாவனைய தாகும், வத்துநிலை யிருந்தபடி யிருந்திடமவு னக
பாவந் துரியமாகும், இத்துரிய பூமியைமுன் றுரியாதீ தப்ப
தமென் றதுவுங் கேளாய். (கஅக)

(இ-ள்) தத்துவத்தின் மனம் உறைந்து-(முன்சொன்ன நான்கு பூமியின் அப்பியாசவலியால் நிர்விசயாகாரத்தோடியாபரோட்ச) பிரமானுபவத்தில் மனந்தங்கி — இதனை எலாம் மறந்தல் - இத்தேயகாரியருவருபம அதன்காரியங்களினைத்தையு நினையாதிருத்தல்—அசம்சத்தி ஆகும்-அசம்சத்தியென்னும் ஐந்தாம்பூமியாம்.—அத்துவித ஆனந்தம் வரும்-(ஐந்துபூமிகளின் அப்பியாசவலியால்) அத்துவிதமான ஆனந்தம் மேவிமே; (மேவிடவே,)—திரிபுடி போம்-(மாகியாதாரங்களாயுள்ள) திரிபுடிரூபமான பதார்த்தங்கள் அபாவமாம்,—அது பதார்த்த அபாவனை ஆகும்-அதுவே பதார்த்தாபாவனையென்னும் ஆறாம்பூமியாம்.—வத்துநிலை - (ஆறுபூமிகளின் அப்பியாசத்தால்) ஆன்மசொரூபத்தில்—இருந்தபடி இருக்க-இருக்கபடியேயிருக்கும்—மவுன பாவம்-மோனநிஷ்டையே—துரியம் ஆகும்-துரியமென்னும் ஏழாம்பூமியாம்;—இத்துரியபூமியை - இந்தத்துரியமென்னும் ஏழாம்பூமியையே—முன் துரியாதீதப்பதம் என்றதுவும் - முன்னே (கஉஉ-வது செய்யுளில்) துரியாதீதப்பதமென்றுகூறினவகையையும்—கேளாய்-இப்போதுகூறுதல்கேட்பாய்.—எ-று.

உத்தமாதிகாரிகட்கு இரண்டாம்பூமியிலுஞ்சாட்சாத்காரம் சாப்தாபரோட்சத்தாற் பிரசித்தமாயினும் ஐந்தாம் பூமியில் மந்தமத்திமாதிகாரிகட்கும் ஆத்தியந்திகமான துவிதசம்ஸ்காரநாசத்தாலுண்டான உத்கர்ஷமான அதிசயமுடைய நான்காம்பூமியின் முடிவிலுண்

டான சாட்சாதகாரம ஐநதாமபூமியில் திருடதரமாக உண்டாகுமென பதைக குறிப்பிததற்பொருட்டு, "மனமுறைத்து." என்றார்.

வாக்யாநதரங்களான ஆகாரங்களோடும்,அவைகளின சமஸ்கா ரங்களோடும சம்பநதமிலலாமை, "அசம்சததி." [சமசத்தி=சமபந்தம, அஃதிலலாமை அசமசததி ]

வாக்யாநதரபதாரததங்களினுடைய அநுசந்தானமில்லாமை, "பதாரததாபாவனை." ஆயின,தேகயாததிரை எங்ஙனகூடுமெனின,பிரகாலபபரயபிரயத்தனததாற கூடுமெனக.

சுபாவீகநிஷடததுவமெனபார, "வததுநிலை யிருநதபடி யிருநத" என்றார [சுபாவீகநிஷடததுவம=சொருபமாயிருததல ]

பரப்பிரயததனததாலும பேதத்தையறியாமலெனபார, "மவுன சுபாவ" என்றார. சாகக்ராதி மூவவதைகளினும விடுபட்டதால, "துரியம"

பிரமவிததுமுதலியோருள, நானகாமவனையடைதலின, ஏழாம புமியைத் துரியகாவெனறுங கூறுவர.

அஞ்ஞானசததபூமி,ஞானசததபூமி இவைகடகு, உ-ம வாசிட்டததில உறபததிபபிரகரணததிறகாணக (கருக)

(௨-௩)[முனனே கக௨-வது செயயுளில துரியபூமியைத துரியாதிதமெனறு கூறினதறகுக காரணங்கூறுகினறார.]

முறபுவிமூன் றினுமுலகந் தோனறுதலாற சாகக்ரமா மூன றறகப்பால, சொறபனமா மதுவுமெள்ள நழுவுமைநதாம பூமியே சுழுததி யாகும, அற்புதமாஞ் சுகாநுபவ மிகுமாறும புவிதுரிய மதறகப் பாலோர, கறபனையி லாதவிட மதீதமெ னறு மௌனமாக் காட்டும் வேதம. (கருஉ)

(இ-ள) முற்புவி மூனறினும உலகம தோனறுதலால-சுபேச சையாதி மூனறுபூமிகளிலும (பூரணஞானமினமையின)சகததுசசததியமாயததோற்றுதலின்,—சாகக்ரம ஆம-அமமூனறும சாக்கிரமாம;—மூனறறகு அப்பால்-அம்மூனறிறகுமேல — (நானகாம்பூமியிற சகததுச சொப்பனமபோல மிதததையாகப்பிரதீதியாவதால்) சொறபனம் ஆம-அதுசொப்பனமாகும்;—அதுவும் மெள்ள நழுவும்-அமமி

தசையாயபிரதிதியுங் கிரமமாக நீங்காநிற்கும்—ஐந்தாம்பூமியே—சுழு த்தி ஆகும்-(சுழுத்திக்குச்சமானமாயிருப்பதால்) சுழுத்தியாம்.—அற்புதம் ஆம் சுகாநுபவம் மிகும்-ஆச்சரியமான ஆநந்தாநுபவமிகுந்துண்டாகாநிற்கும்—ஆறும்புவி-ஆறும்பூமி—துரியம்-(நான்காமவத்தையாவதாற) றுரியமாம்;—அதற்கு அப்பால்-அதற்குமேல்—ஓர் கற்பனை இலாத இடம்-(சத்து அசத்துமுதலிய) யாதொருகற்பனைகளுமில்லாத ஏழாம்பூமியை—அதீதம் என்று-(சகலவிஷயசம்பந்தங்களுமற்றிருத்தலால்) றுரியாதீதமென்று—மௌனமாக் காட்டும் வேதம் -சுருதி மௌனமாகத்தரிசிப்பிக்கும்.—எ-று.

சுருதி மௌனமாககாட்டுவது அத்துவிதாவிருத்திலட்சணம், அல்லது, சத்திவிருத்தியாநகாட்டாமல லட்சணாவிருத்தியாற்காட்டு மென்க, அதனை இப்படலத்தில, அ, ௯-வது செய்யுளாலறிக.

ஏழாம்பூமிக்குமேல பிராரத்தக்ஷயத்திலுண்டாவதான விதேககைவல்யமேயல்லாமல சமாதிபூமியேழென்றனமையின, இதுவேமுக்கியமானபதமென்பதுதோன்ற, "வெறும்விதேகத துரியாத்தத்தி லெழாம பூமியில் ருந்தானேல." என்றும, துரியமென்னும்பெயரையுடைய ஏழாம்பூமியையே அவஸ்தாவிபாகத்தால துரியாதீதமாமென்று முன்னேநமமாலக்ஷிக்கப்பட்டதென்பது கருத்து. (௧௫௨)

(௨௰) [ஆனால்,வாசிட்டத்தில உற்பத்திப்பிரகரணத்தில் இங்ஙனங்கூறாது விதேககைவல்யத்தைத் துரியாதீதப்பதமென்றுகூறினது என்னை? என்றுசங்கித்துச்சமாதானங்கூறுகின்றார்.]

**துரியநிலைத் தனைத்துரியா தீதமெனின் மயக்கமென்று கருதி மேலோர், அரியதொரு விதேகமுத்தி யதீதமெனபார் நூ ற்கணக்கி லாறும பூமி, மருவுசுழுத் திபிற்காட்சி சுழுத்தியெ ன்பா ரெனபதுநீ மனத்திற் கொள்வாய், பெருமைதரு ஞான பூ மியின்விகற்ப மின்னமுண்டு பேசக் கேளாய். (௧௫௩)**

(இ-ள்) துரியநிலைத் தனைத் துரியாதீதம் எனின்-(தேகத்தோடு கூடிச் சீவித்திருப்பவர்களால் அடைந்திருக்கும்) துரியமென்னும்பெயரையுடைய ஏழாம்பூமியைத் துரியாதீத பதமென்றுகூறிடில்,—மய

க்கம் என்று கருதி-(ஞானதிருஷ்டியுடையோர்க்கு) மயக்கமுண்டாகு மெனறெண்ணி—மேலோர்-பெரியோர்—அரியது ஒரு விதேகமுத்தி -அரிதானவொப்பற்ற விதேககைவல்யத்தை — அதீதம் எனபார்-துரியாதீதபதமாமென்றுகூறுவார்;—அது-அங்ஙனங்கூறுகிறபது— க ணக்கில-பூமியின்கணக்கில— (முதலமூன்றனையுஞ் சாக்கிரமென்று ம, நானகாவதனைச் சொப்பனமெனறும் முறகூறியமுறைப்படியே கொண்டு) சுழுத்தியில- (ஐந்தாவதான) சுழுத்தியில்—மருவு-கிட்டி னதான—ஆறுமபூமி - ஆறுமபூமியானபதார்த்தாபாவனையைச்(சேர ந்து)—காட்சி சுழுத்தி என்பார்-அறபுதமான(காட)சுழுத்தியெனறு கூறுவார்—எனபதும நீ மனததில கொளவாய-என்று இஙஙனஙகூறு கிறபதனையும நீமனததினகண தரிப்பாய --பெருமை தரும-(சிறுமை யைபபோக்கிப்) பெருமையைததாராகிறகும— ஞானபூமியின விகற பம-ஞானபூமிகளினவேறுபாடானவிசேடணம் — இன்னம் உணடு. -மேலுமுள—பேசக் கேளாய்-அவறறையுஙகூறககேட்பாய.—எ-று.

சுருதிமேலோர என்றுமபாடமுளது. [இஙகே மயக்கம் எனற கி, ஐயுறவை.]

காடசுழுத்தி=கனசுழுத்தி பரப்பிரயத்தனததால வெளிபபடு தலிலலனக.

"பெருமைதரும." எனறதால, சிறுமைபோககி எனபது, வ ருவிததாம்.

" சிறுமைபெருமை " எனறதறகு, உ-ம. பிரமகீதை. "யா வனொருவன் றனையிழுகதே யளவிலவேறு படககண்டுமே, யாவ னொருசொல் வேறுபடக கேடடுமதிர்தும வருகினறான, யாவனொ ருவன றனக்கென்றுஞ் சிறுமையதுவே பிறபபிறப்பு போவதிலலா க காரணமு மதுவேயெனறு புகனறனனால" எ-ம, அருளினு லி யாவன றனக ணிலையிலவே றொனறு காணு, தருளினால வேறு கேளா தறிந்திடா திருக்கி லஃதே, யருளதாம பெருமை தானு மழி ந்திடாச சுகமுமெல்லா, விருளிலா வீடு தானு மெனறன னிமையோ ர்க் கெல்லாம." எ-ம் வரும். மற்றும்வருவனவற்றுற்காணக.(௪௫௩)

(௪௯௪) [சிடன்வினவிற்கு விடைகூறிமுடித்து ஞானபூமிகளி ன் விசேஷணங்களைக்கூறுகின்றார்.]

முன்னிலங்க ளேறியமூ வருமப்பி யாசிகளா முத்த ரல்லர்
பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ் சீவன்முத்தர்
பேத மாகும், சொன்னகப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்
தாந் தூய முத்தர், இன்னமும்அப் பூமிகளின் பெருமைதனை நீ
யறிய யானசொல வேனே. (கஙச)

(இ-ள்) முன் நிலங்கள் ஏறிய மூவரும்-சுபேச்சை, விசாரணை தனுமானசியெனனும் முன்மூன்று பூமிகளில் ஏறியிருக்கும் மூவரும்—அப்பியாசிகள் ஆம்-அப்பியாசிகளாகும்—முத்தர் அல்லர்-ஜீவன் முத்தரல்லராம்.—பின் நிலங்கள்-அசம்சத்தி, பதார்த்தாபாவனை, துரியமெனனும் பின்மூன்று பூமிகளில்,—(ஏறியிருப்பவா) வரன் வரியான் வரிட்டன் எனும் சீவன்முத்தர் பேதம் ஆகும்-வரன், வரியான், வரிட்டனென்கின்ற ஜீவன்முத்தரின் வேறுபாடாம்.—சொன்ன கப் பூமி வந்த ஞானிகளே-சொல்லிய (சத்துவாபத்தியெனனும்) மத்தியப் பூமியிலவந்த அறிஞரே—பிரம வித்து ஆம் தூய முத்தர்-பிரமவித்தாம் பரிசுத்தமுத்தராம்.—இன்னமும்-மேலும்— அப்பூமிகளின் பெருமைதனை-அந்தஞானபூமிகளின் மகிமையை—நீ அறிய யான் சொல வேன்-நீயறியும்படி யானகூறுவேன்.—எ-று,

பிரபஞ்சமென்னும்புத்தியும், தேகந்தானெனனும்புத்தியும் மறந்துவாராமையின், "தூயமுத்தர்" என்றார் (கஙரு)

(உகஉ) [ஜன்மந்துக்கமென்றுகண்டு அதனிவர்த்திதற்பொருட்டுச்செய்கின்ற இச்சையினால் யோகபூமியப்பியாசத்திற்கு நேரே விக்கினங்களாதலாற் பரலோகசாதனங்களானகர்மாதிகளையெல்லாம் விட்டு முதற்பூமி, உ-ம்பூமி, ௩-ம்பூமி அப்பியாசத்தோடுகூடிநின்று பிரதிபந்தத்தால் மோட்சசாதனமான யோகசித்தியடையாமல் மரணமானவன் மேகமண்டலத்தினின்றும்பிரிந்தமேகம் மற்றோர்மேகங்களோடுகூடாமல் மத்தியினின்றுவியர்த்தமாவதுபோல வியர்த்தமாவனோ? அல்லனோ? என்றுவருமாசங்கையைப்பற்றிக்கூறுகின்றார்.]

காலாம்பூ மியில்வருமுன் மூன்றுபூ மியுமடைந்து கடந்து
மாண்டோர், மேலான பதமடைந்து பிறந்துமெள்ள மெள்ள
வந்து வீடு சேர்வார், மாலான பவத்திலவிழார் முதற்பூமி யி
டைப்பருவே வருக்த மைந்தா, காலான முதற்பூமி கைவந்
தான் முத்தியுங்கை வந்த தாமே. (கஙசு)

(இ-ள்) நாலாம் பூமியில் வரும் முன- (சத்துவாபத்தியென்னு ம் ஆரூடபூமியாகிய) நான்காம்பூமியில்வருதற்குமுன்னே—மூன்று பூமியும் அடைந்து நடந்து மாணடோா-சுபேச்சை, விசாரணை, தனுமானசியென்னும் அப்பியாசபூமிகணமூன்றனையும் அடைந்து நடந்து மரணமாயினோா,—மேல ஆன பதம அடைந்து - (தேவவிமானத்தினமீது ஆரூடராயச்சென்று) உயாவானசுவாக்கமுதலியபதங்களை யடைந்து—(அங்குள்ள திவ்வியபோகங்களைப்புஜித்து)பிறந்து-(பூமியில சுத்தராயும்,ஸ்ரீமானகளாயும் உளளோா மனையினகணணே அல்லது, யோகிகளவமசத்தில) ஜநித்து—மெளள மெள்ள வந்து-கிரமமாக ஆரூடதசையாகிய நானகாமபூமியிலவந்து — வீடு சோவாா-மோட்சமடைவாா —மால ஆன பவத்தில விழாா-மயக்கத்திற்குக் காரணமான ஜநநங்களிலவீழாாகள.—[பூாவகதியினும் நிககிருஷ்டகதியையடையாமொனறபடி ] முதல பூமி கிடைப்பதுவே வருத்தம-சுபேச்சையெனனும் முதறபூமிகிடைப்பதே பிரயாசம —மைநதா-மைந்தனே—காலான முதல பூமி கைவநதால- (மறறைபபூமிகட்கு)வழியானமுதற்பூமிருயனுக்குவசமாகில,—முத்தியும கைவந்தது ஆம-முத்தியும அவனுக்குவசபானதாம.—எ-று.

"முதறபூமிகிடைப்பதுவேவருத்தம." எனறது, "எறியுங் கடலுகத்துளையி லாமைக கழுத்துப புகுவதுபோற, பொறிவெம பிறவியிற்சுத்தாற புருடன விவேகியெனப்பிறந்து." எனனும வாசிட்டக்கருத்து.

"மறுபூமிகளிந்தவொனறேசநதப்பூமியென முடிவிலவெளியாய".
எனறு வாசிட்டத்திறகூறியிருப்பதால,"காலானமுதறபூமி கைவநதால பூமிபுடைகை வந்ததாம "எனறாா (கஉ௩)

[ஞானபூமிகளினமகிமைதோனறச சபதததோடும அதனைப புகழநதுகூறி உபசமரிக்கினறாா ]

இப்புவியிற்ஞான பூமியொன்றி லொண்டிலடைந்திருந்தாரானால, அப்புருடர் மிலேச்சரா கிலுமுத்தா குருபாதந் தாமெனா மெய்யே, தப்புரையென றவாகெடுவாா கம்வானமறைகளாற் சங்கி யாதே, செப்புமொழி வழிகிடமா யகமபிரமமெனத்திருந்து தெள்ளுந்தி டாயே. (கஉச)

(இ-ள்) இப்புவியில-இப்பூமியின்கண்—இஞ்ஞானபூமி ஒன்றில இரண்டில-ஞானபூமிகளுள், (சுபேச்சையென்னும்) முதற்பூமியிலாவது (விசாரணையென்னும்) இரண்டாம்பூமியிலாவது— அடைந்து இருந்தாராகில்-அப்பியாசமுடையராயிருப்பார்களாயின்,—அப்புருடர்-அந்தப்புருடர்கள்—மிலேச்சர் ஆகினும்-மிலேச்சராயினும்—முத்தர்-முத்தராவர்:—குரு பாதத்து ஆணை மெய்யே-சற்குருபாதத்தின்மீதாணை இது சத்தியமே;—தப்புரை என்றவர்- இதுதப்பானவார்த்தையென்றுசொல்பவர் — கெடுவோர் - நாசமாவார்.— ஈன்றோன மைந்தனை-(மக்களிடத்துத் தாய்போலும்) பாரபட்சமற்றசுருதிவாக்கியங்களை—நீ சங்கியாதே-நீசங்கைசெய்யாதே;—செப்பும் மொழி வழி-(சுருதி) உபதேசியாநிற்கும் வாக்கியநெறியில்—நிடம் ஆய்-உறுதியுடையவனாய—அகம பிரமம என்று இருந்து-நான் பிரமமாகின்றேனென்றநுசந்தானித்துப் பிரமமாகவேயிருந்து—தெளிந்திடாய்-தெளிந்திடுதி.—எ-று.

[தெளிதல=சந்தேகநீங்குதல்.]

"மிலேச்சர்." என்றது, உபலட்சணமாகலின இராட்சதர், அசுர மிருகமுதலியனவுங்கொள்க.

அசாமளன, கஜேந்திரன இவர் ஞானபூமியடைந்ததால் மோட்சமடைந்தனரென வாசிட்டஆருயிரவியாக்கியானத்திலும், அனுமன், சுறகடி, பிரகலாதர்முதலியோர் ஞானபூமியிலுல முதிரயடைந்தனரென்று பெரியவாசிட்டவியாக்கியானத்திலுங் கூறப்பட்டிருக்கின்றது.

"குருபாதத்தாணை." என்றதால, இங்ஙனங்கூறினது ஆசாரியர் தயனென்பதும், "மெய்யே." என்றதால், சுருதி, ஸ்மிருதி, புராணாதிகளின் சித்தாந்தமென்பதும் பெறப்படுகின்றன.

உலகில் அரசனுடையவாக்கியத்தை அவன்குடைக்கீழ்வாழ்வோர் அவமதிக்கில் அவர் க்ஷேமமடையாமல நாசமடைவதுபோல இறைவன்திருவாக்கான சுருதியை அவமதிப்பவரும் க்ஷேமமடையாமல் நாசமடைவரென்பார், "தப்புரையென் றவர்கெடுவோர்." என்றார். ()

(௨௬௬.) [வருணாச்சிரமதுரபிமானிகளான சிலருடையபிராந்தி வசனத்தைக் குருவாக்கால் நிவிர்த்திப்பிக்குங் கருத்தினை யுயசிடன்விளுதல்.]

பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி தருஞான பூமி யென்று, நெல்லாகி முளைகருமெனைத் தண்டேலமாக் கியகுருவே நீர்சொன் னீரே, இல்லாளுங் குடும்பம்விட்டுச் சந்நியா சமபுகுந்தே காங்கி யானோர், அல்லாமன் முத்திபெறா ரென்றுசிலா செர்லுமயக்க மகற்று வீரே. (௧௱௭)

(இ-ள்) பொல்லாத மிலேச்ச*ருக்கும்-துஷ்டத்தன்மையுடைய மிலேச்சருக்கும — ஞானபூமி விதேகமுத்தி தரும் என்று- (சுபேச்சையாதி) ஞானபூமி(யடையப்படுமாயின்,) விதேககைவல்யத்தைக் கொடுக்குமென்று—நெல் ஆகி முளைக்கும எனை-(உமியாதிகளோடு கூடி அங்குரியாநிற்கும) நெல்லைப்போல (ஜநகவதுவான அவித்தை காம கர்மங்களோடுகூடி) ஜநித்துமரியாநிற்குமெனனை— தணடேலம் ஆக்கிய குருவே-(அங்குரவதுவான உமியாதிகளைக்குத்திப்போக்கிய) அரிசியைப்போல (ஜநகவதுவான அவித்தையாதிகளைச் சுருதி யுத்தி அநுபவங்களாற்போக்கி ஜனமஜராமரணமில்லாத) பிரமரூபமாகப் பண்ணிய ஆசிரியரே—நீர் சொன்னீரே-தேவரீரருளிச்செய்தீரே,— (இதற்குமுரணாக) சிலர்-உலகினகட் சிலபோ (நானகுவருணங்களுட சிறந்தபிராமணவருணத்திலும)—இல்லாளும குடும்பம விட்டு-மனைவியையும், குடும்பத்தையுந்துறந்து—சந்நியாசம புகுந்து-(தண்டதாரணரூப) துரியாசிரமமடைந்து—ஏகாங்கி ஆனோர் அல்லாமல-(விசனப்பிரதேசமாகியபருவதக குகைமுதலானவைகளிற) றனித்திருந்து ஞானபூமியை அப்பியாசிப்பவா மோட்சமடைவரேயல்லது—முத்தி பெறார் என்று-(பிராமணர் நம்ரகாச்சிரமமுடையோரும, ஏனைய க்ஷத்திரிய, வைசிய, சூத்திராதியரும ஞானபூமியப்பியாசத்தால) மோட்சமடையாரென்று—சொலுமமயக்கம அகற்றுவீர்-சொல்லாநிற்கும பிராந்தியை நீக்குவிப்பீராக —எ-று. (௧௱௭)

(௨௬௭) [சிடனையும், அவன்சங்கையையும புகழ்ந்து சங்கைக்குத்தரங்கூறப்புகுந்து சந்நியாசவகைகளும, அவற்றின நாமங்களும, சந்நியாசத்துக்கு முக்கியகாரணமுங்கூறுகின்றார்.]

---

* மிலேச்சர்—கோமாமசாதிபட்சிக்கும கிராதாதிஜாதிபேதம்.

சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த சங்கைநன் றுதெரியக் கேளாய், கட்டழியுந் துறவுநால் வகையாகு மவைகளுக்குக் காகும் பேர்கள், பட்டதுயர் கெடுங்குடீ சகம்வெகூ தகமஞ்சம் பரம வஞ்சம், விட்டகலுந் துறவுக்கு விராகங்கா ரணமன்றி வேட மன்றே. (௧௫௮)

(இ-ள்) சிட்டர் புகழ் மகனே-பெரியோரால்புகழப்பட்டவனான மைந்தா—நீ சங்கித்த சங்கை நன்று-நீ ஆட்சேபித்த ஆட்சேபம் நல்ல ஆட்சேபம்—தெரியக் கேளாய்-(அதற்குச்சமாதானம்)உனக்குத்தோன்றக்கூறுதல் கேட்பாய்.—கட்டு அழியும் துறவு - குடும்பசம்பந்தங் கெடுதற்குக்காரணமான சந்நியாசம்—நால்வகை ஆகும்-நான்குவகுப்படும்;—அவைகளுக்கு ஆகும் பேர்கள்-அந்நால்வகைச்சந்நியாசங்கட்கும் உளதாகுநாமங்கள்—குடீசகம், வெகூதகம், அஞ்சம், பரமஅஞ்சம் (என்பவையாம்)—பட்ட துயர் கெடும்-(இவைகளாற் சம்சாரத்தில்) பட்டதுன்பங்கெடும்.—விட்டு அகலும் துறவுக்கு-(குடும்பத்தை) விட்டொழியுஞ்சந்நியாசத்திற்கு—விராகம் காரணம் அன்றி வேடம் அன்று-விராகங்காரணமேயல்லாமல், (காஷாயவஸ்திரதாரணமுதலிய)வேஷங்காரணமன்று.—எ-று.

அங்கு—ஆங்கு என்னும்அசைநிலையிடைச்சொற்றிரிபு.

"நீசங்கித்த சங்கைநன்று." என்றது, துறவறமடையாதவரும், சுத்திராதியரும் ஞானப்ரயப்பியாசத்திற்கு அருகரல்லரென்னும் பதியாவசனத்தால் ஞானசாஸ்திரத்திற்புகா திருப்பவருடைய பெருஞ்சந்தேகத்தைப்போக்கப் புகச்செய்தது ஞானமாயில்லாவல அநாத்தகியர் தமிஆனந்தப்பிராப்திருமமான மோட்சமடையுமாமெனுமுபத்தானதலால்

[ விராகம் நவகைத்தென்றும், அவற்றின் இலக்கணம் இன்னதென்றுங்கூறுகின்றார்.]

மந்தமுந்தீ விரமுந்தீ விரதாமு மெனமூன்று வகைவி ராகம், வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்தவரும் விராக மந்தம், இந்தவுட லளவுமனை தனம்வேண்டா மெனவிட்டற் றீவிரமென் பார்கள், அந்தனுலகா மித்தனையும் வேண்டேமென வி டலதுதீ விரதாமா மறிந்திடாயே. (௧௫௯)

(இ-ள்) விராகம்-வைராக்கியமானது—மந்தமும், தீவிரமும், தீவிரதரமும்—என மூன்று வகை-எனமூவகையாம்.— (அம்மூவகையுள்,) வெம் துயரம் வரும் பொழுது-(புத்திரதாரதனாதிகணசித்துப்போனதனால்) கொடிய துக்கமுண்டாகும்பொழுது—குடும்பத்தை வெறுத்து வரும் விராகம்-(அத்துக்கஞ்சகிக்கமாட்டாமல் இச்சம்சாரம் மகா கொடியது இதனைச்சுடவேண்டுமென்று அக்காலத்தில்மட்டும்) குடும்பத்தையுவர்த்துவரும் வைராக்கியம்—மந்தம்-மந்தவிராகமாம் —இந்த உடல் அளவும்-(சொற்பபுண்ணியத்தால்) இத்தேகமுள்ளளவும்—மனை தனம் வேண்டாம் என விடல்-தாரதனமுதலியசம்சாரம் நமக்குவேண்டாமென்றுவெறுத்துவிடுகின்ற திடபுத்தியை—தீவிரம் என்பார்கள்-தீவிரவைராக்கியமென்பார்.—அந்தணனே ஊர் மித்தை என விடல்-(மகாபுண்ணியபலத்தால் மீண்டும் ஜநநத்தையுடைத்தான) பிரமலோகமுதலியவையும் மித்தையாகலின், நமக்குவேண்டாமென்று வெறுத்துவிடுதலே—தீவிரதரம் ஆம்-தீவிரதரவைராக்கியமாம் —அறிந்திடாய-(என) அறிவாய் —எ-று (கருக)

[முன்சொன்ன விராகங்கண்மூன்றனுள், மந்தவிராகம் சந்நியாசங்கட்குக் காரணமன்றென்றொழிந்து தீவிரவிராகத்தாலுண்டாகுஞ் சந்நியாசவேறுபாடுகளும், அவற்றின் இலக்கணங்களுங் கூறுகின்றார்.]

**பாவிமந்த விராகத்திற் சந்நியா சங்களொன்றும் பலித்திடாதே, தீவிரத்திற் குடீசகமும் வகூதகமு மென்றிரண்டு திறங்க ளுண்டாம், தாவிநடந் திடத்திடமி லாதவர்க்குக் குடீசகமுஞ் சக்கங்க ளெங்கும், மேவிநடந் திடத்திடமுள் ளவர்க்குவகூ தகமுமென விதித்தார் மேலோர். (ககo)**

(இ-ள்) பாவி மந்தவிராகத்தில்-பாவியினது மந்தவைராக்கியத்தில்—சந்நியாசங்கள் ஒன்றும் பலித்திடாது-(நால்வகைச்சந்நியாசங்களுள்,) யாதொருசந்நியாசமுஞ் சித்திக்கமாட்டாது —தீவிரத்தில்-தீவிரவைராக்கியத்தில்—குடீசகமும் வகூதகமும் என்று இரண்டு திறங்கள் உண்டாம்-குடீசகம், பகூதகமென்றுசொல்லும் இருவிதசந்நியாசங்களுளவாம்:— [இனி அவற்றின் இலக்கணங்கூறுகின்றார்.] தாவி நடந்திடத் திடம் இலாதவர்க்குக் குடீசகம் - தாவி யாத்திரை

